ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



# திருப்பாவை மூவாயிரப்படி - ஓர் ஆய்வு


ஆசிரியர்

டாக்டர் வ.கோ. சொக்கலிங்கம்,

எம்.ஏ.,பிஎச்.டி.,

ஸப்தகிரி மாத இதழ் துணையாசிரியர்

தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517507.



ஸ்ரீ கோவிந்த் பதிப்பகம், சத்திரவாடா

ஜனவரி - 2007

# TIRUPPAVAI MUVAYIRAPPADI - A STUDY

Studio in Periyavachan Pillai Commentary on 'Tiruppavai'

*by*

**Dr. V. G. CHOKKALINGAM**

First Edition : December 2006

Pages : I-X+270=280

Copies : 1000



**Rs. 90-00**

*Published by :*

**Dr. V.G. CHOKKALINGAM**
**Sri Govindh Publications**
6-78, S.V. Koil St., Vinayakapuram,
Sathravada (P.O.) Nagari (Municipality)
Chittoor (Dt.) 517592 A.P. Ph: 08577 - 236482

*Available at :*

**M. ARUNAGIRI**
No. 26, Kandasami Koil St,
Chennai - 12. Tel : 26422849

*Printed at :*

**MOOVENDHAR ACHAGAM**
73, S.P.S. 1st Street,
Royapettah, Chennai - 600 014.
Ph : 28351189

*Cover Designed by:*

**P. SIVA PRASAD**

This book is Published with the Financial Assistance of
Tirumala Tirupati Devasthanams under their Scheme

AID to Publish Religious Books



அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம் - இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய் - நாடிஸ்ரீ
வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

# காணிக்கை



ஸ்ரீவைஷ்ணவ சிம்மம் ஸ்ரீமதுபயவே.
நியாய வேதாந்த வித்வான்,
திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம்
**க்ருஷ்ணமாசாரிய ஸ்வாமி**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

ஸ்ரீ உ.வே. டாக்டர் மா. வரதராஜன் ஸ்வாமி,
எம்.ஏ.,பி.எச்டி.,
தமிழ்துறை இணைப்பேராசிரியர்,
திருவேங்கடவன்
பல்கலைக்கழகம்
திருப்பதி-517502.

தமிழ்மொழி வளர்ச்சிக்கு சமய இலக்கியங்கள் பெரிதும் உதவின. அந்த வகையில் வைணவ சமயத்தில் ஆழ்வார்களின் ஈரச் சொற்களான நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கு அமைந்த வ்யாக்யானங்கள் தமிழ்மொழியை மேம்படுத்தின. ஆண்டாள் அருளிய திருப்பாவையானது சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பிய பிரபந்தமாகும். வைணவ திருத்தலங்களில் சொற்சுவை நிரம்பிய திருப்பாவை தினமும் ஓதப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பிரபந்தத்தின் பொருட்சுவையை அறிய முதன்முதலாக பதிமூன்றாவது நூற்றாண்டில் அவதரித்த வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை என்னும் ஆசாரியர் ஒரு அரிய வியாக்யானத்தை 3000படி எண்ணிக்கையில் மணிப்பிரவாள நடையில் அமைத்துள்ளார். இந்த வியாக்யானமானது அந்நாள் தொடங்கி இந்நாள் வரை வைஷ்ணவர்களின் காலக்ஷேப க்ரந்தமாகவும், சொற்பொழிவுக் களஞ்சியமாகவும், கட்டுரை எழுதவும் பயன்பட்டு வருகின்றன.

இந்த வியாக்யானத்தின் பெருமையை உணர்த்தும் வகையில் திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ. அவர்கள் முனைவர் பட்ட ஆய்வுக்காக 'திருப்பாவை மூவாயிரப்படி - ஓர் ஆய்வு' என்னும் தலைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். இந்த உரையை முறையாக அறியும் வகையில் அடியேன் காட்டிக்கொடுத்த அடியேனுடைய ஆசாரியரான ஸ்ரீவைஷ்ணவ சிம்மம் ஸ்ரீமான் திருப்பதி உ.வே. மகாவித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை கிருஷ்ணமா சார்ய ஸ்வாமி சாதித்த திருப்பாவை காலக்ஷேப கோஷ்டியில் (1996-97) பங்குகொண்டு குறிப்புக்களைச் சேகரித்தார்.

சிற்றறிவினனான அடியேனிடமும் வரியடைவே பாடங்கேட்டு முறைப்படி குறிப்புக்களை தொகுத்து, ஐந்து இயல்களாக வகைப்படுத்தி எழுதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 2003ல் முனைவர் பட்டம் பெற்றார்.

அனைவரும் படித்துப் பயன்பெறும் வகையில் இவ்வாய்வேடு புத்தக வடிவில் வெளிவருவது மிகவும் போற்றத்தக்கதாகும்.

டாக்டர் வ.கோ. சொக்கலிங்கம் எழுதிய இந்நூல் முழுமையாக படித்து இன்புற வேண்டியிருப்பினும், மூன்றாவது இயலில் இருபது தலைப்பில் உரை உத்திகள் மூலமாக பெரியவாச்சான் பிள்ளையின் உரைத்திறனை வெளியிடும் பாங்கு, 'சமயக்கருத்துக்கள்' என்ற நான்காம் இயலில் திருப்பாவையில் கண்ணன் பிறப்புதொடக்கமாக நப்பின்னை வைபவம் ஈறாக பன்னிரண்டு தலைப்பில் அவற்றை விளக்கும்முறை ஆகியன இன்சுவையே வடிவெடுத்ததாகும்.

திருப்பாவையில் ஊற்றமுடையோர் அறியும் வகையில் ஒவ்வொரு தலைப்பின் கீழ் அதற்குரிய சான்றுகளைக் காட்டி, அவை எத்தனை இடங்களில் வந்துள்ளது என்பதையும் குறிப்பிடுவது பாராட்டத் தக்கதாகும்.

அவதாரிகை தொடக்கமாக பொருளாட்சிகள் ஈறாக பதினைந்து வகைப்பாட்டில் விஷயங்களைத் தவறாமல் குறித்துப் பின்னிணைப்பாக கொடுத்துள்ளது படிப்போர்க்கு அளப்பரிய விருந்தாகும்.

திருமலை திருப்பதி தேவஸ்தான ஸப்தகிரி சமய மாத இதழ் அலுவலகத்தில் துணையாசிரியராக பணிபுரிபவராய், எப்போதும் திருவேங்கடவன் திருவடிவாரத்தில் அவன்புகழை எழுத்து மூலம் பரப்பி வரும் டாக்டர் வ.கோ. சொக்கலிங்கம் அவர்கள் இங்ஙனே மேன்மேலும் நற்போது போக்கும்படியாக, அலர்மேல்மங்கை உறைமார்பனான திருவேங்கடத்துறை செல்வனுடைய பூவார்கழல்களில் வேண்டி நிற்கிறேன்.

திருப்பதி

டாக்டர் மா.வரதராஜன்

30-12-2006

# நன்றியுரை

"திருப்பாவை மூவாயிரப்படி—ஓர் ஆய்வு'' என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கு ஆய்வு செய்ய வாய்ப்பளித்து, இதை நூலாக வெளியிட ஒப்புதல் வழங்கிய திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தினருக்கு என் மனமார்ந்த நன்றி.

இந்த இருள்தரு மாஞாலத்தில் சாதாரண குடும்பத்தில் பிறந்த அடியேன் பள்ளி வகுப்புகளை முடித்து கல்லூரிக்கு அடியெடுத்து வைத்தபோது, எனக்குள் தமிழ்ப்பற்று இருப்பதை அறிந்த என் தமிழாசான் டாக்டர். செ. உலகநாதன் ஐயா அவர்கள் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து, தமிழ் இலக்கிய இன்பத்தை ஊட்டுவித்தார். அன்னாருடைய தூண்டுதலினால் முதுகலை பட்டப்படிப்பில் தமிழ் இலக்கியத்தைப் பாடமாக தேர்வு செய்து, திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1992 முதல் 1994 வரை முதுகலை படிக்கும் பேறு பெற்றேன். அன்னாருக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

முதுகலை பயிலும் சமயத்தில் எனக்கு தமிழ் உணர்வுடன் சமய உணர்வையும் ஊட்டியவர் என் ஆசாரியரும், தமிழ்த்துறை இணைப்பேராசிரியருமான ஸ்ரீ உ.வே. டாக்டர் மா. வரதராஜன் ஸ்வாமி ஆவார். அதுமுதல் படிப்படியாக வைணவ சமயக் கொள்கைகளையும் தத்துவங்களையும் அறியும் வகையில் திருச்சி ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ நிறுவனத்தில் வைணவ அஞ்சல்வழிக் கல்வித்துறையில் சேர்ந்து இரண்டாண்டு காலம் படித்து பரிசயா, ப்ராவண்யா ஆகிய பிரிவுகளில் பட்டம் பெற்றேன்.

முதுகலை தேர்ச்சிக்குப் பின்னர் வைணவத்தில் எனக்கிருந்த பற்றாசு காரணமாக வைணவத்திலேயே ஆராய்ச்சி மேற்கொள்ள எண்ணினேன். அதன் காரணமாக திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 'திருப்பாவை மூவாயிரப்படி.— ஓர் ஆய்வு' எனும் தலைப்பில் ஆய்வை 1995-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் தொடங்கி 2003-இல் டாக்டர் பட்டம் பெற்றேன்.

வைணவத்தில் திருவாய்மொழி வியாக்யானத்திற்கு உள்ள சிறப்பு போன்று திருப்பாவையின் வியாக்யானங்களும் காலக்ஷேப க்ரந்தமாக திகழ்கிறது. இவை பெரும்பாலும்

வடமொழியும், தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளதால் அடியேன் இம்முறையைப் பயில தக்க ஆசானை எதிர்பார்த்திருந்தேன். அந்த சமயத்தில் மணிப்பிரவாள நடையிலுள்ள வைணவ உரைகளை முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுத் தெளிவு பிறக்கவேணும் என்ற வரம்பு உள்ளதால் எம் ஆசாரியர் காட்டிக்கொடுத்தபடி வடமொழி, தமிழ்மொழி ஆகிய இருமொழிப் புலமையிலும் விஞ்சி நிற்கும் திருப்பதி கீழ்த்திசைக்கல்லூரியில் ஓய்வுபெற்ற பேராசிரியர் வைஷ்ணவ ஸிம்மம் ஸ்ரீமான் உ.வே. தி.அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியைச் சேவிக்கும் பாக்யம் பெற்றேன். அந்த ஸ்வாமி திருப்பதி சின்னஜீயர் மடத்தில் திருப்பாவை மூவாயிரப்படி உரையை வரியடைவே காலக்ஷேபமாக (1996-ஆம் ஆண்டு மார்கழி மாதம் டிசம்பர் 16 முதல் 1997 ஜனவரி 15-ம் தேதி வரை) 30 நாட்கள் சாதித்தபோது அடியேனும் கேட்டு தவறாமல் குறிப்புக்களை எழுதும் பாக்யம் பெற்றேன். அந்த ஸ்வாமியின் இன்னருளால் எனது ஆய்வு இனிதே நிறைவேறி இன்று நூலாக வெளிவருகிறது. எனவே கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ உ.வே. ஸ்வாமி திருவடிவாரத்தில் இந்நூலை காணிக்கையாக சமர்ப்பிக்கிறேன்.

இவ்வாய்வு செய்வதற்கு பதிவுசெய்ய உதவி தாமே நெறியாளராகவும் அமைந்து, மூவாயிரப்படி உரையை மேலும் ஒரு முறை 1997-ல் வரியடைவே கற்பித்து, உரை ஆய்வைச் சீரிய முறையில் செய்ய அறிவுரை வழங்கித் துணைபுரிந்த நெறியாளர் ஸ்ரீ உ.வே. டாக்டர் மா. வரதராஜன் ஸ்வாமிக்கு பெரிதும் நன்றி கூறும் கடப்பாட்டையுடையேன்.

இந்நூல் வெளியிடுவதற்கு நிதியுதவி வழங்கிய தி.தி. தேவஸ்தானத்தாருக்கும், ஸப்தகிரி ஆசிரியர் திரு. சி. சைலகுமார் அவர்களுக்கும், முன்னாள் ஆசிரியர் டாக்டர் என்.எஸ். ராமமூர்த்தி அவர்களுக்கும் நன்றிகூற கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் உருவம் பெற கணினி தட்டச்சு செய்து உதவிய திரு. பா. சாமுவேல் அவர்களுக்கு என் நன்றி உரியது.

திருப்பதி — **டாக்டர் வ.கோ. சொக்கலிங்கம்**

தேதி: 30-12-2006 — ஸப்தகிரி துணையாசிரியர், தி.தி. தேவஸ்தானம்

## நெறிமுறை விளக்கம் :

1. இந்நூலில் 'உரை' என்று குறிப்பிடப்பட்டுள்ளது திருப்பாவை மூவாயிரப்படி உரையைக் குறிப்பதாகும்.

2. இந்நூலில் பிள்ளை என்று வருமிடந்தோறும் பெரியவாச்சான் பிள்ளை என்று பொருள் கொள்ள வேண்டும்

4. இந்நூலின் பின்னிணைப்பில் இடம் பெறும் 'பாடல் எண்' என்பது திருப்பாவை பாடல்களையே குறிக்கும்.

5. இந்நூலின் பின்னிணைப்பில் குறிக்கப்பெற்றுள்ள பாடல் சொல்/தொடர் திருப்பாவை பாடல் சொற்றொடர்களாகும்.

6. இந்நூலில் 'பாவை' என்று குறிப்பிட்டுள்ளது திருப்பாவை யைக் குறிக்கும்.

7. இந்நூலில் பாடலுக்கு அடிக்குறிப்புக் கொடுத்த எண்களெல்லாம் அப்பாடலைக் குறிப்பதோடல்லாமல் பிள்ளை உரையையும் குறிப்பதாகும்.

8. இந்நூலின் அடிக்குறிப்பில் வந்துள்ள 4-3-8-36 என்ற குறியீடு திருவாய்மொழி நான்காம் பத்து, மூன்றாம் பதிகம், எட்டாவது பாடல், 'ஈடு' முப்பத்தாராயிரப்படி என்று காட்டும்.

9. 'இத்யாதி' என்ற வடசொல்லுக்கு 'முதலான' என்று பொருள். பொன்றயித்யாதி - பொன்ற முதலான - அதாவது சகடமுதைத்தாய் என்ற மேல்வரும் பாடல் தொடரைக் குறிக்கும்.

10. அவ்வாறே 'ஆதி' என்ற வடசொல்லுக்கும் 'முதலான' என்று பொருள். அதாவது சாணூர முஷ்டிகாதிகளான - சாணூர முஷ்டிகன் முதலான என்று மற்றவர்களையும் குறிக்கும்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அமலனாதி. | - | அமலனாதிபிரான் |
| இர. திருவ. | - | இரண்டாம் திருவந்தாதி |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| கு.அ. | - | குட்டி அரும்பதம் |
| சாந். | - | சாந்தோக்ய உபநிடதம் |
| சி.அ. | - | சின்ன அரும்பதம் |
| சிறிய. திரு. | - | சிறிய திருமடல் |
| திருப்பல். | - | திருப்பல்லாண்டு |
| திருமா. | - | திருமாலை |
| திருப்பள்ளி. | - | திருப்பள்ளி எழுச்சி |
| திரு. நெடு. | - | திருநெடுந்தாண்டகம் |
| திருச்சந்த. | - | திருச்சந்த விருத்தம் |
| திரு.விரு. | - | திருவிருத்தம் |
| திருவாய். | - | திருவாய்மொழி |
| தை. நாரா. | - | தைத்ரீய நாராயணவல்லி |
| தை.ப்ருகு. | - | தைத்ரீய ப்ருகுவல்லி |
| தை.ஆந. | - | தைத்ரீய ஆநந்தவல்லி |
| நான்.திருவ. | - | நான்முகன் திருவந்தாதி |
| நாச்.திரு. | - | நாச்சியார் திருமொழி |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |

| | | |
|---|---|---|
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப்ர.ப. | - | ப்ரதிவாதிபயங்கரம் |
| ப்ருஹ. | - | ப்ருஹதாரண்யக உபநிடதம் |
| பெ.அ. | - | பெரிய அரும்பதம் |
| பெரிய.திரு. | - | பெரிய திருமொழி |
| பெரியா. திரு. | - | பெரியாழ்வார் திருமொழி |
| பெரி. திரு. | - | பெரிய திருமடல் |
| பெரு. திரு. | - | பெருமாள் திருமொழி |
| மூன்.திருவ. | - | மூன்றாம் திருவந்தாதி |
| மேலது | - | அதே நூல் |
| ர.ஸ்த. | - | ரங்கராஜ ஸ்தவம் |
| வ.எண். | - | வரிசை எண். |
| வி.பு. | - | விஷ்ணு புராணம் |
| வி.ஸஹ. | - | விஷ்ணு ஸஹஸ்ரநாமம் |
| ஸ்தோ.ர. | - | ஸ்தோத்தர ரத்னம் |

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| அணிந்துரை | ... | iii |
| நன்றியுரை | ... | v |
| நெறிமுறை விளக்கம் | ... | vii |
| சுருக்கக்குறியீட்டு விளக்கம் | ... | viii |
| இயல் - 1. தோற்றுவாய் | ... | 1 |
| இயல் - 2. பெரியவாச்சான்பிள்ளையின் வாழ்வும் பணியும் | ... | 16 |
| இயல் - 3. உரை அமைப்பும் உரை உத்திகளும் | ... | 32 |
| இயல் - 4. சமயக்கருத்துக்கள் | ... | 93 |
| இயல் - 5 முடிவுரை | ... | 134 |
| பின்னிணைப்புகள் | ... | 144 |
| துணைநூற் ப்ட்டியல் | ... | 267 |


**பின் அட்டையில் சேவை சாதிப்பவர்**
**பெரியவாச்சான் பிள்ளை - சேங்கனூர்**

# இயல் - 1

# தோற்றுவாய்

## *1.0 தமிழ் இலக்கண, இலக்கிய உரைவளர்ச்சி*

உலக மொழிகளில் பழமையான மொழி தமிழ்மொழி. சுமார் 2000 ஆண்டு வரலாற்றினைக் கொண்டது. இத்தமிழ் மொழிக்குப் பெருமை சேர்க்கும் வகையில் தொன்மைவாய்ந்த தொல்காப்பியம் என்னும் இலக்கண நூல் விளங்குகிறது. இதுவே தமிழ்மொழிக்கு முதனூலும் வழிநூலுமாகும். இருந்த போதிலும் இந்நூலுக்கு உரை முதன் முதலில் எழுதப்படவில்லை. பின்பு எழுந்த சங்ககால இலக்கியங்களுக்கும் உரை வகுக்கப்படவில்லை. ஏனெனில் அந்தக் காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு உரை அவசியமில்லாமல் இருந்தது. கடினமான செய்யுள் வரிகளுக்கு விளக்கம் தேவையில்லாமல் எளிதாகப் புரிந்து கொள்ளும் ஆற்றல் படைத்தவர்களாக அக்கால மக்கள் வாழ்ந்தனர் எனலாம். காலப்போக்கில் அவற்றிற்கு விளக்கங்கள் தேவைப்பட்டன. ஆகவே சங்கம் மருவிய காலத்தில் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' தோன்றின.[1]

''இலக்கண நூல்கள்'' உள்நின்று அகன்ற உரையோடுதான் வரவேண்டுமாயினும் உரையின்றியும் நெடுங்காலம் வழங்கி வந்தன என்பர் பேராசிரியர்.[2] பண்டைய நூல்கள் யாவும் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டிருந்தன. அதோடு செய்யுள் வரிகளாக சுருக்கமாக எழுதப்பட்டிருந்தன. அதனால் விளக்கங்களை எழுதிக்கொண்டுப் போவதற்கு

ஓலைச்சுவடிகளில் முடியாது என்பதைவிட அன்றைய கால கட்டத்திற்கு அது போதுமானதாய் புரியும்படியாக இருந்தது. புரியாததற்குத் தானே விளக்கம் தேவை. ஆனால் பின்வந்த காலங்களில் அச்செய்யுள் வரிகளைக் கற்க - ஆராய பண்டிதர்களால் மட்டுமே முடிந்தது. அவர்கள் அளித்த விளக்கங்களும் சுவடிகளிலேயே இடம்பெற்றன. அது கற்றறிந்த ஒருசிலருக்குப் பயன்பட்டது. அவ்வரிய பெரிய இலக்கிய இலக்கண நூல்களுக்கு விளக்க உரையும் அச்சு இயந்திரம் வந்தபிறகு அரங்கேறின. அவ்வகையில் எழுந்த உரைநூல்களில் கி.பி. 8ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட களவியல் என்னும் நூலுக்கு நக்கீரர் எழுதிய உரையே மிகப் பழமையானது என்பர்.[3] காலப்போக்கில் சங்க இலக்கியங்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் உரை நூல்கள் வந்தன. தொல்காப்பிய உரையாசிரியர் காலம் கி.பி. 12 முதல் 14 வரை என்று கருதுவர்.[4] தொல்காப்பியத்திற்கு முதல் உரையாசிரியர் இளம்பூரணர் ஆவர். அதற்கு அடுத்ததாக பேராசிரியர் நச்சினார்க்கினியர், சேனாவரையர் முதலானவர்கள் உரை எழுதினர். இவர்களில் நச்சினார்க்கினியர் பண்டை நூல்கள் பலவற்றுக்கு உரை எழுதியுள்ளார். சிந்தாமணி, பத்துப்பாட்டு, கலித்தொகை, குறுந்தொகையில் இருபது பாட்டு, தொல்காப்பியம் ஆகியவற்றிற்கு உரை வழங்கியுள்ளார். திருக்குறளுக்கு தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையார், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர் என்னும் பதின்மர் உரை எழுதியுள்ளனர்.[5] இவர்களில் முதன் முதலாக திருக்குறளுக்கு உரை எழுதியவர் மணக்குடவராவர். தற்போது பெருவழக்காய்த் திகழ்வது பரிமேலழகர் உரையாகும்.

இவரே பிற உரைகாரர்களுள் பிற்பட்டவர். பரிபாடலுக்கும் உரை எழுதியுள்ளார். சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் உரை பொருணயத்தோடு சொல்வண்மையும் கொண்டு அமைந்துள்ளது. வடமொழியிலே பிரம்ம சூத்திரத்திற்கு பாஷ்யங்கள் ஏற்பட்ட காலத்தை ஒட்டித் தமிழில் தொல்காப்பியம் முதலான பெருநூல்களுக்கு உரைகள் ஏற்பட்டன என்பர்.[6] பரிமேலழகருக்குப் பின் சிவஞான முனிவரே பெரிய உரையாசிரியராகத் திகழ்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## 1.1 தமிழ் இலக்கியத்தில் வைணவ உரை வளர்ச்சி

பழமை வாய்ந்த தமிழ் இலக்கியத்தில் சமயங்களின் பங்களிப்பு போற்றுதற்குரியது. இடைக்காலத்தில் அதாவது கி.பி. 6, 7, 8, 9ஆம் நூற்றாண்டுகளில் தழைத்தோங்கிய சைவ, வைணவ சமயங்களினால் தமிழ் இலக்கியம் வளர்ச்சி பெற்றது எனலாம். அச்சமய இலக்கியத்தினால் தமிழுக்குப் பல பெருமைகள் சேர்ந்தன. அந்த வகையிலே வைணவ சமய இலக்கியமான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் பாரெங்கும் பரவியது. நாலாயிரம் அருளிய ஆழ்வார்களுக்குப் பின்னர் அவதரித்த இராமாநுசர் என்னும் ஆசாரியரின் தூண்டுதலின் பேரில் பல ஆசாரியர்கள் உரைகளை அருளிச்செய்தனர்.

### 1.1.1 வைணவ உரை முன்னோடிகள் :

இராமாநுசர் காலத்தில்தான் திவ்வியப் பிரபந்தங்களுக்கு எழுத்துவடிவில் உரை எழுதப்பட்டது. ஆனால் இராமானுசருக்கு முன்பு அவதரித்த ஆசாரியர்கள் திவ்யப் பிரபந்தத்திற்கு வாய்மொழியாக விளக்கங்கள் பல கூறியுள்ளனர். அவ்விளக்கங்கள்

பலரும் அறியமுடியாமல் "ஓர் ஆசிரியர் ஒரு மாணாக்கருக்குச் சொல்வது" என்னும் ஓராண் வழியாகச் சொல்லப்பட்டு வந்தன என்பர்.[7] இருந்தபோதிலும் ஆளவந்தார் என்னும் ஆசார்யர் சிலரைக் கொண்ட திரளில் விளக்கம் செய்துள்ள குறிப்பு காணப்படுகிறது.[8] எனினும் ஆழ்வார் பாசுரப் பொருள்களைச் சிலருக்கே விரித்துரைக்கும் நிலை இருந்தது. இராமாநுசரால் இவை மாற்றியமைக்கப்பட்டு ஆசையுடையோர்க்கெல்லாம் எடுத்துக்கூறப்பட்டது.[9] இராமாநுசர் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கு தானே உரை வழங்காவிட்டாலும் தன் சீடரான திருக்குருகைப் பிரான் பிள்ளானை முதன்முதலாக திருவாய்மொழிக்கு உரை எழுதச் செய்தார். அதன் விளைவாக, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களுக்கும் உரைகள் எழுத்து வடிவில் தோன்றலாயின. உரையாசிரியர்களுக்கு முன்பு அவதரித்த ஆசாரியர்கள் எழுதிச் சென்ற விளக்கங்கள் உரை எழுதுவதற்கு உறுதுணையாய் அமைந்தன. அவ்விளக்கங்களைத் தந்தவர்கள் 'வைணவ உரை முன்னோடிகள்' அல்லது 'அங்கீகாரம் பெறாத உரைகாரர்கள்' என்பர்.[10] அவர்கள் பின்வருமாறு : (1) நாதமுனிகள், (2) ஆளவந்தார், (3) இராமாநுசர், (4) எம்பார், (5) கூரத்தாழ்வான், (6) திருவரங்கத்தமுதனார், (7) அனந்தாழ்வான், (8) முதலியாண்டான், (9) அம்மங்கியம்மாள், (10) பிள்ளை திருநறையூர் அரையர் - இவர்களேயன்றிச் சிற்சில விளக்கங்கள் கூறிய சிலரும் உண்டு.

### 1.1.2 வைணவ உரையாசிரியர்கள் :

முற்கூறியபடியே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதன் முதலாக திருவாய்மொழிக்கு உரைகள் எழுந்தன. இராமாநுசர் காலம் வரை

திருவாய்மொழிக்கு வாய்மொழியாக விளக்கங்கள் கூறப்பட்டு வந்தனவே தவிர உரை எழுதப்படவில்லை. முன்அறிவித்தபடி இராமாநுசரின் கட்டளையை யொட்டி முதன்முதலாக திருவாய் மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் உரை எழுதி புதிய சகாப்தத்தைப் படைத்தார்.[11] அவரைப் பின்பற்றி நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், மணவாள மாமுனிகள் ஆகியோர் திவ்வியப்பிரபந்தத்திற்கு உரை எழுதினர்.[12]

நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் முழுமைக்கும் உரைவகுத்தப் பெருமை வ்யாக்யானசக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையைச் சாரும்.[13] இவருடைய உரைகள்தான் இன்றும் நிலவி வருகின்றன. நஞ்சீயர் திருப்பாவைக்கும், கண்ணிநுண் சிறுத்தாம்புக்கும் உரை வழங்கினார் என்றும், பிள்ளை லோகாசாரியரின் திருத்தம்பியரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருப்பாவைக்கு ஆறாயிரப்படி என்னும் உரை வழங்கினார் என்றும், பன்னீராயிரப்படி இயற்றிய வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் திருவிருத்தத்திற்கு உரை வழங்கினார் என்றும் கூறுவர்.[14]

### 1.1.3 படி-உரைநூல்கள் எழுந்த முறை :

நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் குறிப்பாக திருவாய்மொழிக்கு முதலில் உரை எழுதப்புகுந்த ஆசாரியர்கள் ஒரு அளவினைக்கொண்டு உரை வகுத்தப் பெருமை வைணவத்தையே சாரும். இந்த முறையைத் தோற்றுவித்தப் பெருமை இராமானுஜரையே சாரும். ‘படி’ என்பதற்கு ஒற்றெழுத்து நீங்கலாக உயிரும் உயிர் மெய்யுமான 32 எழுத்துக்கள் கொண்ட ஒரு கிரந்தம்

என்று பு.ரா. புருஷோத்தம நாயுடு விளக்குவர்.[15] இந்த வகையிலே திருவாய்மொழிக்கு திருக்குருகைப் பிரான் பிள்ளானின் ஆறாயிரப்படியைப் பின்பற்றி நஞ்சீயர் அருளிய ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான் பிள்ளை அருளிய இருபத்து நாலாயிரப்படி, நம்பிள்ளை செப்பு நெறியான முப்பத்து ஆறாயிரப்படி, அழகிய மணவாளச்சீயர் அருளிய பன்னீராயிரப்படி ஆகிய உரைகள் எழுந்தன. இந்தப் பாணியிலேயே பெரியவாச்சான் பிள்ளை திருப்பாவைக்கும் மூவாயிரப்படி என்னும் உரை வழங்கியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும். இவரைப் பின்பற்றி திருப்பாவைக்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆறாயிரப்படியும், ஜநந்யாசார்யர் அருளிச்செய்த ஈராயிரப்படியும், நாலாயிரப்படியும், அமைந்துள்ளன. இவ்வுரைகளைக் கண்ணுற்ற தியாகராச செட்டியார் அவர்கள் ''வியாக்கியானத்தில் எவ்வளவு உயர்ந்த இரகசியங்கள் வெளிப்படுகின்றன! திவ்வியப் பிரபந்தத்தால் வியாக்கியானத்திற்குப் பெருமையா, வியாக்கியானங்களால் திவ்வியப் பிரபந்தங்களுக்குப் பெருமையா'' என்று எண்ணும் படியாக இருப்பதாகக் கூறுவர்.[16] இவ்வுரைகளில் வைணவப் பெரியார்கள் தாம் கற்ற கலைகள் அனைத்தையும் வழங்கிச் சென்றதாகவும், அப்பெரியார்களின் இதய ஒலிகள் பலபல வகையில் உரைகளின் வாயிலாக வெளிப்படுகின்றன என்றும் மு. அரவிந்தன் கூறுவர்.[17]

### 1.2 திருப்பாவைக்கு அமைந்த உரைகள் :

ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவைக்கு நான்கு உரைகள் அமைந்துள்ளன. அதாவது மூவாயிரப்படி,

ஆறாயிரப்படி, ஈராயிரப்படி, நாலாயிரப்படி. அதில் மூவாயிரப்படிக்கு மட்டும் குட்டி அரும்பதஉரை, சிறிய அரும்பதஉரை, பெரிய அரும்பதஉரை என மூன்று அரும்பத உரைகளும், இரண்டு ஸ்வாபதேச வ்யாக்யானமும் அமைந்தது குறிப்பிடத் தக்கதாகும். இந்த நான்கு உரைகளும் அவற்றின் அரும்பத உரைகளும் திருப்பாவையை முழுமையாக அறிய வகை செய்கின்றன என்று சொல்லலாம்.

### 1.2.1 மூவாயிரப்படி :

பிள்ளை திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி என்னும் உரை எழுதிய பிறகு, திருப்பாவைக்கு உரை எழுதினார். அதுவே மூவாயிரப்படியாகும். மற்ற பிரபந்தங்களுக்கு அவர் அளவிட்டு எழுதவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும். அதாவது வேதஸாரமான திருவாய் மொழிக்கும், வேத வித்தான கோதை தமிழ் என்னும் திருப்பாவைக்கும் மட்டும் முறையே இருபத்து நாலாயிரப்படி, மூவாயிரப்படி என அளவிட்டு உரை வழங்கியிருப்பது ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும். இவருடைய வாழ்க்கை வரலாறு அடுத்த இயலில் இயம்பப்படுகிறது.[18]

பெரியவாச்சான் பிள்ளை திருப்பாவைக்கு எழுதிய மூவாயிரப்படி உரை அமைப்பை பார்க்கும் போது, உரைக்கென்றே ஒரு பொது அவதாரிகையை கூறியிருப்பது மூவாயிரப் படியின் நுழைவாயிலாக அமைந்துள்ளது. அதில் அவர் நுவல்வோர் சிறப்பு, நூல்சிறப்பு, நுவல் பொருள் சிறப்பு என மூன்று வகையான சிறப்புகளைக் கூறியிருப்பது காணலாம்.[19]

மேலும், பொதுவாக நோன்பிற்குரிய காரணத்தையும் ஆண்டாள் மேற்கொண்ட நோன்புக்குரிய மூலத்தையும் சுருக்கமாகக் கூறியுள்ளார்; அதில் எம்பெருமானின் எல்லையற்ற வடிவம், சீலம் முதலான குணங்களையும் திருவிளையாடல்களையும் குறிப்பிடுகிறார்; ஆண்டாளின் நோக்கத்தையும் பெருமையுடன் குறிப்பாக உணர்த்துகிறார்;[20] அடுத்ததாக, ஒவ்வொரு பாசுரங்களுக்கும் விளக்கம் அளிப்பதற்கு முன்பு அவதாரிகை இடுகின்றார்; அந்த அவதாரிகையில் பாசுரத்தின் உட்பொருளைச் சுருக்கமாக தெரிவிப்பதுடன் பாசுர வரிகளை இயைபு படுத்துகிறார்; முன்பாட்டினையும் இயைபுப் படுத்திக் காட்டுகின்றார்;[21] பாசுரங்களுக்கு உரை வழங்குகையில் ஒவ்வொரு பதத்திற்கும் விளக்கம் அளிக்கிறார்; அவ்விளக்கத்திற்கு ஏற்றவாறு வேத, உபநிடத, புராண, இதிகாசங்களையும் திவ்யப் பிரபந்தங்களையும் மேற்கோள்களாக எடுத்துக் காட்டுகின்றார்; தம் உரையில் ஆங்காங்கே உலக வழக்கினையும் எடுத்துக்காட்டியிருக்கிறார்.[22] இயற்கை வர்ணனைகள், உவமை நயங்கள் உரையில் வந்துள்ளதைக் காணலாம்.[23] பொதுவாக நயம்பட கூறுதல், சுருங்கக்கூறல், விரித்துரைத்தல், உரையாடல் அமைத்தல், வினா எழுப்பி விடையளித்தல் முதலான பல உத்திகளையும் கையாண்டுள்ளதை அறிய முடிகிறது; அவை விரிவாக மூன்றாவது இயலில் விவரிக்கப்பட்டுள்ளன.[24]

### 1.2.2. ஆறாயிரப்படி :

மூவாயிரப்படி உரைக்கு அடுத்ததாக திருப்பாவைக்கு அமைந்த உரை ஆறாயிரப் படியாகும். இவ்வுரை மூவாயிரப்படியைத் தழுவி எழுதப்பட்டதாகும். இவ்வுரைகாரர் மூவாயிரப்படி உரைகாரரின்

கருத்தையே கொண்டிருந்தார். உரையில் பல இடங்களில் பிள்ளையினுடைய மேற்கோள்களே கையாளப்பட்டுள்ளதையும் அறியலாம்.[25] மேலும் தன்னுடைய ஆறாயிரப்படி உரைக்கென்று தனியாக உரை அவதாரிகை இடவில்லை. மூவாயிரப்படிக்கு அமைந்த அவதாரிகையை தானும் ஏற்றுக்கொண்டு அதையே ஆறாயிரப்படிக்கும் உரை அவதாரிகையாகக் கையாண்டுள்ளார் எனலாம்.[26]

### 1.2.2.1 உரைகாரரின் பெருமையும் உரையின் சிறப்பும் :

ஆறாயிரப்படி உரையை இயற்றியவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். இவர் திருவரங்கத்தில் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கும், ஸ்ரீரங்கநாச்சி யாருக்கும் குமாரராக கி.பி. 1207ஆம் ஆண்டு அவதரித்தார்.[27] இவர் பிள்ளை லோகாசாரியரின் திருத்தம்பியுமாவார். இவர் ஆசார்ய ஹ்ருதயம் எனும் நூலினையும் அருளிச்செயல் ரஹஸ்யம் என்னு நூலினையும் எழுதினார். அமலனாதிபிரான், கண் நுண் சிறுத்தாம்பு, திருப்பாவைக்கு ஆறாயிரப்படி முதலான திவ்வியப்பிரபந்தங்களுக்கு உரை வழங்கி னார்.[28] இவர் விரிவாக வியாக்யானம் எழுதுவதில் வல்லவர். இது குறித்தே மணவாள மாமுனிகளுட "தஞ்சீரால் வைய குருவின் தம்பி மன்னுமணவாளமுனி செய்யுமவை தாமும் சில" என்று கொண்டாடுகிறார்.[29]

இவர் மறைந்தபோது, இவருடைய திருத்தமைய னாரான பிள்ளைலோகாசார்யர் பாடிய கையறு நிலைப் பாட்டு வைணவத்தில் சிறப்பாகப் போற்றப்பெறும் மூன்று மந்திரங்களின் பொருள்களை உரைப்பதில் நாயனார் வல்லவராக விளங்கினார் என்பதனைக் குறிப்பிடுகின்றது.

''மாமுடும்பை மன்னு மணவாளவண்ணலொடு
சேமமுடன் வைகுந்தம் சென்றக்கால் - மாமென்று
தொட்டுரைத்த சொல்லும் துயந்தன்னில்
ஆழ்பொருளும்
எட்டெழுத்துமிங்குரைப்பாரார்''

என்பது அவ்விரங்கற்பா.[30] முன்னோர் மொழிந்ததை முறைதப்பாது உரைக்கும் உத்தித்திறன் இவருடைய ஆறாயிரப்படியில் விஞ்சி நிற்பதைக் காணலாம். ஒவ்வொரு பதத்திற்கும் விரிவாக உரைவகுப்பதிலும் வல்லவர்; இவருடைய உரையில் வடமொழி மேற்கோள் அதிக அளவில் இருந்தாலும் மற்ற உரைகளில் இல்லாத அளவிற்கு திவ்வியப்பிரபந்த மேற்கோள்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளன; இவருடைய உரை உத்திகளை நோக்கும்பொழுது ஒவ்வொரு பாசுரத்தின் அவதாரிகையிலும் பாசுரத்தின் முழுமையான விளக்கத்தைச் சுருக்கமாகக்கூறி, பிறகு முன்பாட்டின் தொடர்ச்சியை இயைபுப் படுத்திக் காட்டுவது சிறப்பானதாகும். மேலும் ஆண்டாளின் உள்ளக்கிடக்கையை முழுமையாக வெளிப்படுத்தி யுள்ளமை இவரது தனித்தன்மை யாகும்.[31]

### 1.2.3 ஈராயிரப்படியும் நாலாயிரப்படியும் :

திருப்பாவைக்கு திருநாராயணபுரத்து ஆய் என்னும் ஜநந்யாசார்யரால் எழுதப்பட்ட உரைகள் ஈராயிரப்படியும் நாலாயிரப்படியும் ஆகும். இந்த உரையாசிரியர் இராமாநுசருடைய வம்சமான ஹாரீத வம்சத்தில் அவதரித்தவர். இவருடைய இயற்பெயர் தேவராஜர். பகவானிடமும் பாகவதர்களிடமும் தாயைப்போலே அன்பு, பரிவு காட்டி வந்தமையால் ''ஆய்'' என்றும் 'ஜநநீ' என்றும் சிறப்புப்பெயர்

சூட்டப்பெற்றார். திருநாராயணபுரத்தில் பிறந்ததாலே திருநாராயண புரத்து ஆய் என்றும் அழைக்கப்பட்டார்.[32] இவர் ஸ்ரீவசந பூஷணத்திற்கும், திருப்பாவைக்கும் உரை எழுதியுள்ளார். இவை இப்பொழுதும் கிடைக்கின்றன. ஆனால் திருமாலைக்கும், ஆசார்ய ஹ்ருதயத்திற்கும் இவர் வழங்கிய உரைகள் இப்போது கிடைப்பதில்லை.

இவர் எழுதியுள்ள ஈராயிரப்படி நாலாயிரப்படி உரைகள் பெரியவாச்சான்பிள்ளை எழுதிய மூவாயிரப் படியை ஒத்ததாகவே அமைந்துள்ளன. மூவாயிரப்படி உரைகாரர் போன்றே உரை அவதாரிகையை இரண்டிற்கும் தனித்தனியாக ஆக்கியுள்ளார். அவற்றில் பெரியவாச்சான் பிள்ளை கையாளாத புதுமையான கருத்துக்களையும் தன் உரையில் கொண்டுள்ளார்.[33] மூவாயிரப்படி போன்று உரை அமைக்கப் பட்டிருந்தாலும், உரையின் போக்கு மாறுபட்டு அமைந்துள்ளது.[34] இவருடைய உரையில் வடமொழி மேற்கோள்களைவிட திவ்வியப்பிரபந்த மேற்கோள் களே மிகுதியாக வந்து உரைக்கு அழகு சேர்க்கிறது.[35] சமய தத்துவக் கருத்துக்களும் முன்னோர்களின் ஐதீகங்களும் இடம்பெற்று உள்ளன. எளிய நடையில் எல்லோரும் கற்று இன்புறும் வண்ணம் இவ்விரு உரையும் தூய தமிழில் எழுதப்பட்டிருப்பது உணரப்பாலதாகும்.

### 1.3 உள்ளுறை உரைகள்(ஸ்வாபதேச வ்யாக்யானங்கள்):

திருப்பாவைக்கு ஸ்வாபதேச உரைகள் இரண்டு உள்ளன. ஒன்று சுத்த ஸத்வம் தொட்டாச்சார்யர் என்பவர் எழுதிய ஸ்வாபதேச உரையாகும். இவ்வுரையும் பாசுர அவதாரிகை, வ்யாக்யானம் என்ற முறையில் அமைந்துள்ளது. இவ்வுரை மற்ற உரைகளைக்

காட்டிலும் வேறுபட்டு அமைந்துள்ளது. ஒவ்வொரு பதங்களுக்கும் உரை வழங்குகையில் அப்பதத்தின் உள்ளுறை பொருள் மட்டும் விரித்துரைக்கப் பட்டுள் ளது. வடமொழி, திவ்வியப்பிரபந்த மேற்கோள்கள் அதிகமாகக் காணப்படுவதில்லை. அதற்கு மாறாக யாவரும் அறியமுடியாத அதிசய விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன. ஆண்டாளின் உள்ளக் கிடக்கையை உள்ளபடியே எடுத்துரைப்பது ஸ்வாபதேச உரையில்தான் என்பது இவ்வுரை மூலம் அறியலாம்.[36] இவ்வுரையில் உரைகாரரின் சொந்தக் கருத்து மிகுதியாக இடம்பெறுகிறது. புரியாத பதத்திற்கும் புரியும்படியாக விளக்கம் அமைந்துள்ளது இவ்வுரையில் உற்று நோக்கத்தக்கது. உரை சுருக்கமாக அமைந்தாலும் பொருள் விரிவாக அமைந்துள்ளது.[37]

மற்றுமொரு ஸ்வாபதேச வ்யாக்யானம் வானமாமலை ஜீயரால் அருளிச்செய்யப்பட்டதாகும். இவ்வுரையானது பதத்திற்குப் பதம் உரை வழங்கப் படாமல் பாட்டுக்குப் பாட்டு, அப்பாட்டில் உள்ளே உறைந்திருக்கும் பொருள்களை மட்டும் வெளியே எடுத்துக் காட்டுகிறது. மற்ற உரை ஆசிரியர்களைப் போன்றே வடமொழி மேற்கோள்களையும் திவ்வியப் பிரபந்த மேற்கோள்களையும் எடுத்துக் காட்டியுள்ளார் உரையாசிரியர்.[38] இவ்வுரையில் தத்துவ கருத்துக்கள் விஞ்சி நிற்பதைக் காணலாம்.[39] திருப்பாவை முதல் பாசுரத்தை அடிப்படையாகக் கொண்டே முப்பது பாடலும் அமைந்திருப்பதாக விவரித்துரைப்பது அறியற் பாலதாகும்.[40]

## 1.4 அரும்பத உரைகள் :

அரும்பத உரைகள் மூன்று உள்ளன. அவையாவன பெரிய அரும்பத உரை, சிறிய அரும்பத உரை, குட்டி

அரும்பத உரை ஆகும். இவ்வுரைகளை இயற்றியவர்கள் யார் என்று தெரியவில்லை. இந்த அரும்பத உரைகள் மூவாயிரப்படி உரைக்கு விளக்கம் அளிப்பதாக (வரிகளை விளக்குவதாக) அமைந்துள்ளன. மூவாயிரப்படி உரைகாரரின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவதாக அமைந்து, உரைக்கு உரை எழுதுவது போன்று இந்த அரும்பத உரைகள் விளங்குகின்றன.[41] மேலும் மூவாயிரப்படி உரைக்கு வழிகாட்டி யாகவும் திகழ்கின்றன. மற்ற உரைகளுக்கு அரும்பத உரை எழுதப்படாமல் இந்த மூவாயிரப்படிக்கு மட்டும் எழுதியிருப்பது மூவாயிரப்படியின் தனித்தன்மையை எடுத்துக்காட்டுவதாகும். இந்த அரும்பத உரைகளில் குட்டி அரும்பத உரை பதினாறு பாட்டுக்கு மட்டுமே உள்ளது.

### 1.5 திருப்பாவைக்கு அமைந்த உரைகளில் மூவாயிரப்படியின் ஏற்றம் :

திருவாய்மொழிக்கு அமைந்த உரைகளில் பிள்ளானின் ஆறாயிரப்படி எங்ஙனம் மற்ற உரைகளுக்கு முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் அமைந்துள் ளதோ, அங்ஙனே திருப்பாவைக்கு அமைந்த உரைகளில் மூவாயிரப்படி விளங்குகிறது. மூவாயிரப் படியின் உரைப் போக்கையே மற்ற உரையாசிரியர்களும் கையாண்டிருப்பது இங்கு குறிப்பிடத்தக்க தாகும்.[42] இது காலக்ஷேப க்ரந்தம் என்று பெரியோர் பணிப்பர். ஆந்திர நாட்டில் உள்ள சிம்மாசலம் என்னும் திருத்தலத்தில் உள்ள கோவிலில் பிரதி வருடம் மார்கழி மாதம் 30 நாட்களிலும் காலையில் ஒவ்வொரு பாட்டின் மூவாயிரப்படி வியாக்யானம் அநுஸந்திக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.[43] பிள்ளையின் வாழ்வும் பணியும் பற்றி அடுத்த இயலில் இயம்பப்படுகிறது.

****

இயல - 1

## அடிக்குறிப்புகள் :

1. சிலப்பதிகாரம்.
2. தொல்காப்பியம், மரபியல், நூற்பா 98, பேராசிரியர் உரை.
3. மு. வரதராஜன், தமிழ் இலக்கிய வரலாறு ப. 183.
4. கா. சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு ப. 348.
5. பதின்மர் உரையாசிரியர்களைப் பற்றிய பழைய வெண்பா.
6. கா. சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு ப. 349.
7. ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, நித்யானு ஸந்தானம், ப. 19.
8. திருவாய். 4.3.8 - 36, திருவாய். 6.7.0 - 36, நாச்சியார் திருமொழி, 10.5
9. உபதேசரத்தினமாலை பாடல் 37.
10. டாக்டர் தெ. ஞானசுந்தரம், வைணவ உரை வளம், ப.3.
11. உபதேசரத்தினமாலை பா. 36, 40.
12. மேலது பா. 39.
13. மேலது பா. 46.
14. மேலது பா. 47.
15. திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம், ப.41.
16. வித்துவான் தியாகராசச் செட்டியார், ப.145
17. மு. அரவிந்தன், உரையாசிரியர்கள். ப. 376.
18. இயல் - 2 ப. 19.
19. திருப்பாவை வ்யாக்யானங்கள், பக்.9, 10.
20. மேலது பக். 13, 14, 15.
21. மேலது ப.118
22. மேலது ப. 142.
23. மேலது ப. 143.
24. இயல் - 3 ப.39

25. பாவை பா. 14 நாவுடையாய் ஆறாயிரப்படி உரை ப. 255. பாவை பா. 18 செந்தாமரைக்கையால் ஆறாயிரப்படி உரை ப. 323.
26. திருப்பாவை வ்யாக்யானங்கள், ப.16.
27. ஸ்ரீஎஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா, பொன்விழா மலர், ஸ்ரீரங்கம், பக்.258, 296.
28. மேலது ப. 258.
29. உபதேச ரத்தினமாலை பாடல் 47.
30. பி. ஆர். புருஷோத்தம நாயுடு, ஆசாரிய ஹிருதய மூலம் மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வ்யாக்யானத்தின் தமிழாக்கம், சென்னைப் பல்கலைக்கழகம், ப.5.
31. ஆறாயிரப்படி உரை ப. 127.
32. திருப்பாவை வ்யாக்யானங்கள், ப.31.
33. ஈறாயிரப்படி உரை அவதாரிகை ப. 17.
34. மேலது ப. 291.
35. மேலது ப. 292.
36. சுத்த ஸத்வம் தெட்டாச்சார்யர், ஸ்வாபதேச வ்யாக்யானம் ப. 116.
37. மேலது ப. 549.
38. வானமாமலை ஜீயர் ஸ்வாபதேச உரை, பக்.560, 561, 562.
39. மேலது பக்.552, 553, 564.
40. மேலது ப. 566.
41. அரும்பத உரைகள் ப.183.
42. ஆறாயிரப்படி, ஈராயிரப்படி, நாலாயிரப்படி, ஸ்வாபதேசம்.
43. Voice of Alwars and Acharyas, (English) p.68.

# இயல் - ௨

## பெரியவாச்சான்பிள்ளையின் வாழ்வும் பணியும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியம் சிறந்து விளங்குகிறது. அவற்றில் சைவ, வைணவ பக்தி இலக்கியங்கள் கி.பி. 6 முதல் 9ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய நாயன்மார்கள், ஆழ்வார்களால் வளர்க்கப் பட்டன. ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் அமைந்த இரகசிய தத்துவப் பொருள்களை ஆசாரியர்கள் ஓராண்வழிக் கால் வழியாகவும், வாய்மொழியாகவும் உபதேசித்து வந்தனர். முதன் முதலில் வாய்மொழியாகக் கூறப்பட்டு வந்த பொருள்கள் யாவும் ஏட்டிலே எழுத வழி வகுத்தவர் இராமாநுசர் ஆவர். அதன் பொருட்டு வெளிவந்த உரையே திருவாய் மொழிக்கு திருக்குருகைப் பிரான்பிள்ளான் என்னும் ஆசாரியர் எழுதிய 'ஆறாயிரப்படி' என்னும் உரையாகும். இவ்வகையில் உரைகள் வளரவே நம்பிள்ளையின் சீடராக விளங்கிய பெரியவாச்சான்பிள்ளை இதிகாசங்கள், பிரபந்தங்கள், ஸ்தோத்ரங்கள், கத்யங்கள் ஆகிய நான்கு துறைகளில் மணிப்பிரவாள நடையில் உரைகளை இட்டருளினார். இவருடைய வாழ்வும் பணியும் சீர்மை பெற்றது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

### 2.0 குருபரம்பரையில் பெரியவாச்சான் பிள்ளை பெறும் இடம் :

எம்பெருமானுடைய இயல்பு, வடிவு, குணங்கள், செல்வங்கள், விளையாடல்கள் முதலானவற்றில் ஈடுபட்டவர்கள் ஆழ்வார்கள். அவர்கள் அனுபவித்த

கல்யாண குணங்கள் முதலியன பிரபந்தமாக வடிவெடுத்தன. அதுவே நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமாக போற்றப் படுகிறது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் ஏற்றத்தையும், அவற்றை அருளிய ஆழ்வார்களின் குணநலன்களையும் ஒருசேர குறைவில்லாதபடி வாய்மொழியாக பேசி அனுபவித்து வந்தவர்கள் நாதமுனிகள் தொடக்கமான ஆசாரியர்கள் ஆவர். ஒரு ஆசாரியர் ஒரு சீடனுக்கு உபதேசித்தல் என்ற முறையில் வைணவத்தை வளர்த்து வந்தனர். இதனை குருபரம்பரை என்பர்.

குருபரம்பரையானது வைணவ தீட்சை யளிக்கும் ஆசிரியண குருப்பரம்பரை என்றும் கிரந்த பரம்பரை என்றும் இரண்டு விதமாக அமைந்துள்ளது.[1]

ஓராண்வழிக் கால்வழியாக தொன்று தொட்டு வரும் ஆசிரியண பரம்பரையில் பெரிய பெருமாள் தொடக்கமாக மணவாள மாமுனிகள் ஈறாக பதினெண்மர் அடங்கிய பரம்பரை ஒன்று[2]. இது உலகத்திலேயே சிறப்பு வாய்ந்த ஆசார்ய பரம்பரையாகும். அடுத்ததாக, இராமாநுசரால் ஏற்படுத்தப்பட்ட 74 சிம்மாசனாதிபதிகள் என்றழைக்கப் படும் ஆசாரியர்களின் குருபரம்பரையாகும். மேலே காட்டிய இரண்டு வகையில் கிரந்த பரம்பரை மூன்று பிரிவாக உள்ளது.

1. **இரகசிய கிரந்த பரம்பரை**
2. **திவ்வியப் பிரபந்த வ்யாக்யான பரம்பரை**
3. **ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா பரம்பரை.**

மேலே குறிப்பிடப்பட்டுள்ள மூன்றனுள் இரண்டாவதான திவ்வியப்பிரபந்த வியாக்யான

பரம்பரை இரண்டு வகைப்படும். முதலாவதாக இராமானுசர் தொடங்கி நம்பிள்ளை வரையில் பொதுவாக உரையாசிரியர்களைக் காட்டி, நம்பிள்ளை வாய்மொழியை ஏடுபடுத்திய வடக்குத் திருவீதிப் பிள்ளை தொடக்கமாக, பெரியஜீயர் என்னும் மணவாள மாமுனிகள் வரை ஈடு வியாக்யானம் பரவியதை ஒரு பரம்பரையாகக் காட்டியபடியாகும். அடுத்ததாக நம்பிள்ளைக்குப் பிறகு பெரியவாச்சான் பிள்ளை, அவர் குமாரர் நயனாராச்சான்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்று இப்படியாக ஒரு பிரிவைக் கூறுவர்.[3] இந்த உட்பிரிவில் ஆறாவது உரையாசிரிய ராகத் திகழ்பவர் பெரியவாச்சான்பிள்ளை ஆவர்.[4]

## 2.1 காலம் :

பெரியவாச்சான் பிள்ளை கலியுகத்தில் ஸர்வஜித் வருடம் ஆவணி மாதம் (ஆங்கில வருடம் 1167) க்ருஷ்ணாஷ்டமி ரோகிணி நட்சத்திரத்தில் தமிழ்நாட்டில் சங்கநல்லூர் என்னும் கிராமத்தில் பிறந்தார். இவரது தாய் தந்தையர்கள் யாமுன தேசிகர், நாச்சியாரம்மாளாவர். இவரது குலம் பூர்வசிகை. இவருக்கு பெரியவாச்சான் பிள்ளை, அபயப்பிரதராஜர், ஸ்ரீமத் கிருஷ்ணர் எனப் பல பெயர்கள் உண்டு.[5] இவர் க்ருஷ்ணசூரி என்றும் அழைக்கப்பட்டார்.[6]

இவர் கி.பி. 1167ல் பிறந்து 95 ஆண்டுகள் வாழ்ந்திருந்ததாக பெரிய திருமுடியடைவு குறிப்பிடுகிறது.[7] எனவே இவருடைய காலப்பகுதி கி.பி. 1167லிருந்து 1262 வரை ஆகும். ஆனால் மு. அருணாசலம் பெரியவாச்சான்பிள்ளை காலத்தை கி.பி. 1228லிருந்து 1325 என்று குறிப்பிடுகிறார்.[8] இதனைப் பின்பற்றி கி.பி. 1228ல் பிறந்ததாக ஸ்ரீவைஷ்ணவ

மணிப்பிரவாளா என்ற நூலில் குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.[9] இவ்விருவருடைய காலக்குறிப்பு பொருந்துவ தாக இல்லை. ஏனெனில் பெரியவாச்சான் பிள்ளையின் ஆசார்யரான நம்பிள்ளை கி.பி. 1147ல் பிறந்தார் என்பது 'நம்பிள்ளை ஈட்டுத்திறன்' என்ற நூலில் நிலைநாட்டப்பட்டுள்ளது.[10] எனவே முற்கூறிய படி பெரியவாச்சான் பிள்ளை 1167ல் பிறந்ததாக பெரிய திருமுடியடைவு கூறுவதாலும் அதனை ஸுதர்ஸனம் ஆசிரியர் உறுதிப்படுத்தியதாலும் பெரியவாச்சான் பிள்ளை கி.பி. 1167ல் பிறந்து 1262ல் பரமபதம் அடைந்தார் என்று சொல்லுவதே பொருத்தமாயுள்ளது.[11]

## 2.2 பிள்ளை வாழ்வின் தனிச்சிறப்பு :

பெரியவாச்சான் பிள்ளையின் வாழ்க்கை மிகவும் வியப்பானதாகும். எவ்வாறெனில் - அர்ச்சாமூர்த்தியான திருக்கண்ணமங்கை எம்பெருமானே திருமங்கையாழ் வாரை ஆசார்யராகக் கொண்டு ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களின் பொருள்களைக் கற்க ஆசைப்பட்டான். அதாவது இரகசியப் பொருள் களையும் ஸ்ரீராமாயணப் பொருள்களையும் கற்க ஆவல் கொண்டான். எனவேதான் திருமங்கை யாழ்வார் திருக்கண்ணமங்கை எம்பெருமானிடம் தம் திருமொழியின் அர்த்தங்களை அறிந்துகொள்ள ஆவல் இருப்பதைத் தெரிந்து கொண்டு 'மெய்ம்மை சொல்லில் வெண்சங்கமொன்றேந்திய கண்ண! நின்தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கலியின் பொருள்தானே' என்று கூறியுள்ளார். அதன்படியே கலிகன்றியாகிய திருமங்கை யாழ்வார் திருக்கலிகன்றிதாஸராகிய 'நம்பிள்ளை யாகவும்' கண்ணன் 'பெரியவாச்சான் பிள்ளையாகவும்' அவதரித்ததாக பெரியோர் கூறுகின்றனர்.[12]

பெரியவாச்சான் பிள்ளை குடும்பத்தோடு திருமலை யாத்திரை மேற்கொண்டதாக சங்கநல்லூர் செய்தி ஒன்று குறிப்பிடுகின்றது. அதில் பெரியவாச்சான் பிள்ளை திருமலையானிடம் அப்பெருமானின் திருவுருவச் சிலையைப் பெற்றதாகவும், அச்சிலையை சங்கநல்லூரில் பிரதிஷ்டை செய்ததாகவும் கூறப்பட்டுள்ளது. இதைக்கொண்டு பார்க்கும் பொழுது இவருக்கு திருமலை சம்மந்தம் இருந்தது தெரியவருகிறது.[13]

பிள்ளை தம்முடைய தாய் தந்தையர்க்கு இறுதிக்கடன் செய்துவிட்டுத் திருவரங்கத்துக்கு வந்து நம்பிள்ளையை ஆசார்யராகக் கொண்டு எல்லாப் பொருள்களையும் கற்றார். அவருடைய கட்டளையின் பேரில் திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி என்னும் வியாக்யானத்தை அருளினார்.

மேலும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்திற்கு உரை வழங்கினார். நம்பிள்ளை பரமபதித்த பின்பு வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலானோரோடு ஸ்ரீரங்கத்திலேயே வைணவ சமயப்பணியில் ஈடுபட்டிருந்தார் என்பர்.[14]

இளமைப் பருவத்திலிருந்தே பெரியவாச்சான் பிள்ளைக்கு கிருஷ்ணபக்தி அதிகமாக இருந்தது. ஊரிலுள்ளவர்கள் அனைவரும் ஸ்மார்த்த வேதாந்திகளாக இருந்ததனால் இவருடைய கிருஷ்ண பக்தியும் வைணவச் சார்பும் யாருக்கும் பிடிக்கவில்லை. ஆகவே இவர் வடநாட்டுக்குத் தீர்த்த யாத்திரைச் சென்றார். யாத்திரை முடித்துத் தமிழ் நாட்டெல்லையிலுள்ள திருவேங்கடம் வந்து அங்கேயே தங்கிப் பெருமாள் தரிசனத்தில் மூழ்கித் திளைத்தார்.

பின்னர் சங்கநல்லூர் நினைவு உண்டானமையால் அங்கிருந்து விடைபெற்று திரும்பும் வேளையில்

வைணவ பக்தர் ஒருவர் தாம் வைத்திருந்த சாளக்கிராமத்தை இவரிடம் அளித்ததாகவும், அந்த சாளக்கிராமமே சிலை வடிவைப் பெற்றதாகவும், அந்த மூர்த்தியைக் கொண்டு வந்து, தம் ஊரில் வைத்து வழிபட்டதாகவும் கூறுவர்.[15]

## 2.3 கல்வியும் விருதும் :

ஸ்ரீரங்கத்தில் நம்பிள்ளையை ஆசாரியராகக் கொண்டு பிள்ளை எல்லாப்பொருள்களையும் நன்றாகக் கற்று பிரவசனம் செய்து வந்தார்.[16]

பிள்ளையின் கல்விச்சிறப்பைச் சொல்லும் போது வைணவ ஆசாரியர்களில் இரகசிய நூல்களை ஓராண்வழிக் கால்வழி உபதேசித்து பாதுகாத்தவர் திருக்கோட்டியூர் நம்பிகள் என்றும், திருவாய் மொழியின் பொருளை விவரித்துச் சொல்லுவதில் வல்லவராகயிருந்தவர் திருமாலையாண்டான் என்றும், ஸ்ரீராமாயணப் பொருளை விவரித்து உரைப்பதில் சீர்மை பெற்று இருந்தவர் பெரிய திருமலை நம்பிகள் என்றும், வைணவத்தில் இன்றியமையாத இம்மூன்று துறைகளின் பொருள்களையும் தம் முன்னோரிடம் கேட்டதிலிருந்து பெரியவாச்சான் பிள்ளை தம் நெஞ்சிலே தேக்கி வைத்திருந்து பின்னர் சீடர்களுக்கு உபதேசித்தார் என்றும் குறிப்பிடுவர்.[17] பிள்ளை பின்புள்ளோரும் உய்யும்படி அருளிச்செயல்கள், ஸ்ரீராமாயண ச்லோகங்கள், இரகசியங்கள், கத்யங்கள் ஆகிய நான்கு துறைகளில் உள்ள மூலநூல்களுக்கு உரையிட்டுள்ளார்.

இவருடைய உரைகளைச் செவிசாற்றின ஸ்ரீரங்கநாதன், இவருக்கு அபயப்ரதராஜர் என்னும் சிறப்புப்பெயர் வழங்கினார். மேலும் ஸ்ரீராமாயண சிறப்புப்பொருள்களை தம்முடைய உரைகளில்

ஆங்காங்கே காட்டிச் செல்வதனால் 'ஸ்ரீராமாயணப் பெருக்கர்' என்றும் நாலாயிரத் திற்கும் மற்றுமுள்ள இரகசிய நூல்களுக்கும் உரை வடித்தபடியால் 'வியாக்யான சக்ரவர்த்தி' என்றும் பல விருதுகள் பெற்று சிறந்து விளங்கினார் என்று அறியற்பாலதாகும்.[18]

## 2.4 குணநலன்களின் பெருமை :

நம்பிள்ளையின் சீடராய் இருந்தபோது சீடனுக்கு உரிய நல்ல குணங்களை இயல்பாகக் கொண்டு விளங்கியவர் பெரியவாச்சான்பிள்ளை. அவரே ஆசார்யரான போது தம் சீடர்களைக் கொண்டாடும் பெருமை பெற்று ஸத்வ குணம் நிறைந்தவராய் இருந்தார். இவர் அருளிய திருப்பாவை மூவாயிரப்படி எனும் இவ்வுரையில் முன்னோர் சொன்னதை முறை தப்பாமல் கூறும் பண்பு ஆங்காங்கே காணப்படுவது குறிப்பிடத் தக்கதாகும். எடுத்துக்காட்டாக, 'யசோதை இளம்சிங்கம்' என்னுமிடத்தில் 'இளஞ்சிங்கம்' என்பதற்கு 'சிங்கக்குருகு' என்று பட்டர் அருளிச் செய்ததை குறிப்பிட்டது அறியற் பாலதாகும்.[19] அதேபோன்று இராமாநுசர் மேல் உள்ள ஆசார்ய பக்தியினாலும் அபிமானத்தினாலும் 'உந்துமதகளிற்றன்' என்னும் திருப்பாவை பாட்டை 'எம்பெருமானார் சிறப்பித்து உகந்திருக்கும் பாட்டு' என்று குறிப்பிட்டுள்ளார்.[20]

## 2.5 நம்பிள்ளையிடம் காட்டிய பரிவு :

லோகாசாரியர் என்று சிறப்புப்பெயர் பெற்ற நம்பிள்ளையிடம் நெடுநாள் பயிற்சிப் பெற்று தான் பெற்ற சிறப்புப் பொருள்களை பெரியவாச்சான்பிள்ளை தமது உரைகளிலே காட்டியுள்ளார். இதன் மூலம் அவர் நம்பிள்ளையிடம் கொண்டிருந்த பரிவைக் காணலாம்.

சான்றாக, 'அந்தணனொருவன்' என்பதற்கு "முற்பட த்வயத்தைக் கேட்டு, இதிஹாஸ புராணங்களையும் கற்று, வாதி பிரதிவாதிக்கு (பரபக்ஷப்ரதி க்ஷேபத்துக்குடலாக) ந்யாய மீமாம்ஸைகளும் கற்று (அதிகரித்து) போது போக்கும் அருளிச்செயலிலே நம்பிள்ளையைப் போலே" என்றருளிச்செய்துள்ளார்.[21] இதனால் நம்பிள்ளையிடம் எல்லா சாத்திரங்களையும் வரியடைவே கற்று அந்தப் புலமை முழுவதையும் அருளிச்செயல் உரைகளிலே காட்டி வந்தாரென்பது விளங்கும்.

நம்பிள்ளை பொதுவாகவே வியாக்யான விஷயத்தில் மிக்க ஊக்கமுடையவராக இருந்தார். அவர் நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டருக்கு ஒருமுறை திருவாய் மொழிப்பொருளை சொல்லும்போது, அவர் பிள்ளையின் அனுமதி யின்றி ஒரு இலட்சத்து இருபத்தைந்தாயிரம் கிரந்தம் கொண்ட நூல் எழுதியிருந்தார். அந்த ஏட்டை நம்பிள்ளை வாங்கிக் கரையானுக்கு இரையாக்கிய வரலாற்றைப் பெரியவாச்சான் பிள்ளை அறிந்தார். ஆகவே நம்பிள்ளை தம்மை எழுதும்படி பணித்தபோதிலும், இவர் மிக்க அடக்கத்தோடு, விளக்கமிருந்தாலும் சுருக்கமாய் உரைகளை எழுதினார்.[22]

## 2.6 பிள்ளையின் பெருமை :

திருவாய்மொழியை உரையால் காத்த பெருமைபடைத்த பெரியவாச்சான் பிள்ளை உள்ளிட்ட ஐவரை 'திருவாய்மொழியைக் காத்த குணவாளர்கள்' என்று மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் குறிப்பிடுவது நோக்கத்தக்கதாகும்.[23]

### 2.7 நம்பிள்ளை ஆட்கொண்ட பெரியவாச்சான்பிள்ளை :

நம்பிள்ளையினுடைய தூண்டுதலின் பேரில் பெரியவாச்சான் பிள்ளை திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப்படி என்ற ஒரு உரையை அருளினார். இதுபற்றியே, மணவாள மாமுனிகள் "நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிட பின் பெரியவாச்சான் பிள்ளை அதனால் இன்பா வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது இருபத்து நாலாயிரம்" என்று குறிப்பிட்டுள்ளதின் மூலம் அறியலாம்.[24] நம்பிள்ளை சம்பிரதாயத்தில் ஊற்றமுடையவர். மேலும், கருணை ஒன்றினாலேயே ஆழ்வார்களின் பாசுரப் பொருள்களை வெளிப்படுத்தும் ஆசாரியர் ஆவார். அப்படிப் பட்ட ஆசாரியர் பிறருடைய பயனைக்கருதி திருவாய்மொழிக்கு ஒரு வியாக்யானம் எழுத பெரியவாச்சான் பிள்ளையை நியமித்தார். இவரது கருணையை 'கொள்வதில்லையாகிய குளிர்ந்த அருள்' என்று போற்றுவர் பிள்ளை லோகம் சீயர்.[25] மேலும் நம்பிள்ளையினுடைய அருளையே பற்றாசாகக் கொண்டு பிள்ளை மிகவும் ஈடுபட்டு, எண்ணியதைப் பெறுவதற்கு விதியிருந்தால் உடனே கைக்கொள்ளு கைக்கு காரணமாகை யாலே திருவாய்மொழிக்கு ஆசார்ய நியமனம் உண்டாகப் பெற்றதை எண்ணி மகிழ்ந்தார். எனவே எண்ணும்போதே இனிமையை உண்டாக்குவ தாயும், செய்யும் போதே சுகத்தை உண்டு பண்ணுவதாய் இருப்பதும், நம்மாழ்வாரிடம் பெருக்காறு போலே பெருகி வருகின்ற ஆழ்ந்த பக்தியாலே திருவாய் மொழியின் பொருளைப் பிள்ளை வியாக்கியானமாகச் செய்தார். இந்த வியாக்கியான மானது காப்பியங்களில் உயர்ந்ததான வால்மீகி ராமாயணத்தின் இருபத்து நாலாயிரம் பாடல்கள்

கொண்ட எண்ணிக்கையை உடையதாயிருக்கும். எனவே ''மாறன் மறைப்பொருளைச் சொன்னது இருபத்து நாலாயிரம்'' என்பர் மாமுனிகள். இதுபற்றியே சீயரும் ''ஸ்ரீராமாயணம் என்றும் திருவாய்மொழி என்றும் இரண்டு மகா பிரபந்தங்கள் உண்டு'' என்று இவற்றினுடைய ஒப்புமையைக் காட்டியது அறியற்பாலதாகும்.[26]

**2.8 பிள்ளையின் நூல்கள் :**

இங்ஙனம் நம்பிள்ளையின் சீடராகத் திகழ்ந்த பிள்ளை நூற்றுக்கணக்கான நூல்களை அருளிச் செய்ததாகவும், அவற்றில் பல பாதுகாப்பின்றி மறைந்ததாகவும், தற்சமயம் அறுபது நூல்களுக்கு மேல் இருப்பதாகவும் கூறுவர்.[27] அவற்றில் முக்கியமானவை :

1. நாலாயிரத் திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்கள் (இவற்றில் பெரியாழ்வார் திருமொழி முதல் 4 பத்துக்கு பிள்ளையின் உரை மறைந்துவிட்டது. 5-1 பதிகத்தில் 'வாக்குத்தூய்மை' என்ற தொடர் முதல் பிள்ளையின் உரை அமைந்தது காணலாம்.)
2. கத்யத்ரய வியாக்கியானங்கள் (ஸ்ரீரங்க கத்யம், வைகுண்ட கத்யம், சரணாகதி கத்யம்)
3. ஆளவந்தார் ஸ்தோத்திர ரத்ன வியாக்கியானம்
4. சதுச்லோகி வியாக்கியானம்
5. தனிச்லோகி வியாக்கியானம்
6. அபயப்ரதான வியாக்கியானம்
7. திரிமத சிந்தாந்த சார சங்கிரகம்
8. ஜிதந்தே ஸ்தோத்திர வியாக்கியானம்
9. பாசுரப்படி இராமாயணம்
10. கலியன் அருள்பாடு
11. பரந்த ரகசியம்

12. மாணிக்க மாலை
13. நவரத்தின மாலை
14. சகலப்ரமாண தாத்பர்யம்
15. உபகார ஸ்மிருதி
16. சரம ரகசியம்
17. அநுசந்தான ரகசியம்
18. நிகமனப்படி
19. பிரபந்த ரகசியம்
20. ரகசிய த்ரய தீபிகா
21. ரகசியத்ரய விவரணம்

மேலே குறிப்பிடப்பட்டுள்ள நூல்களில் முதல் எட்டு நூல்களைத் தவிர மற்றவை யாவும் அவரது தனி நூல்களாய் மணிப்பிரவாள நூலாகவும், வடமொழி நூலாகவும் அமைந்தனவாகும்.

**2.9. சீடர்கள் :**

நம்பிள்ளைகாலத்தில் பல சீடர்கள் உருவானார்கள். அந்த வகையில் நம்பிள்ளை சீடரான பெரியவாச்சான்பிள்ளை தன் மருமகனான நயன்ராச்சான் பிள்ளையை ஞானபுத்திரராகவும் பின்பு சீடராகவும் ஏற்றுக்கொண்டார்.[28] பன்னீராயிரப்படிக்கு உரை அருளிய அழகிய மணவாளச் சீயரும் இவருடைய சீடராவார். இவர் பிள்ளையினிடத்தில் திருமடைப் பள்ளி கைங்கரியம் செய்து வந்தார். ஒரு எழுத்தும் தெரியாமல் இருந்த இவர் பிள்ளையின் அருளால் புலமைப் பெற்றார்.[29] மேலும் ஸ்ரீரங்காசார்யாரும்[30] பரகாலதாஸரும்,[31] இவருடைய சீடர்கள் ஆவர். நம்பிள்ளை காலத்திற்கு பிறகு வடக்குத் திருவீதிப் பிள்ளையும் சில பொருள்களை இவரிடம் கேட்டு அறிந்ததாக ஆசார்ய ஸம்மதி என்னும் ரகசிய நூலில் அருளியிருப்பதாக பகவத் விஷய தனியன் உரையில்

காட்டப்பட்டுள்ளது.[32] பின்பழகிய பெருமாள் சீயரும் பிள்ளையை அடிபணிந்திருந்ததாக பெரிய திருமுடியடைவு கூறுகிறது.[33]

## 2.10 மொழிநடை :

பெரியவாச்சான் பிள்ளை அருளிய உரைகளில் எளிய நடை விஞ்சியிருப்பதைக் காணலாம். விரிவாக உரைக்கும் பொருளைச் சிறிய சிறிய வாக்கியத்தினால் மிக அழகாக உரைக்கும் பாங்கு சிறந்து விளங்குகிறது. 'எல்லாரும் போந்தாரோ' என்னுமிடத்தில் எனக்கு உங்களையொழிய ஸுகமுண்டோ? உணர அறியாத சிறு பெண்களும் உணர்ந்தால் புறப்படவிருந்தேன்; எல்லாரும் போந்தாரோ? என்ன; என்று எளிமையான மொழிநடையில் அமைத்தது காணலாம்.[34] இவருடைய சொல்லாட்சி குறிப்பாக திருப்பாவை உரையில் தமிழ் வடமொழிச் சொற்கள் முறையே 2:1 என்னும் விகிதத்தில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.[35] சான்றாக ''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்....'' என்னும் பாசுரத்தில் ''கார்மேனி'' என்னும் சொல்லுக்கு ''நம்முடைய சகல தாபங்களும் ஆறும்படியான வடிவு'' என்று குறிப்பிடும் தொடரில் தமிழ் மொழி அதிகமாகவும் வடமொழி குறைவாகவும் வந்தது காணலாம்.[36]

## 2.11 மூவாயிரப்படி உரை எழுந்த வரலாறு :

நம்பிள்ளையிடம் பலகாலம் நாலாயிரத்தினுடைய பொருள்களைக் கேட்டதின் வாயிலாக திருப்பல் லாண்டு தொடங்கி திருமடல் ஈறாக 23 பிரபந்தங் களுக்கும் பிறர் நலன் கருதி பிள்ளை உரையிட் டருளினார். அவற்றில் முதலாயிரத்தில் இரண்டாவது பிரபந்தமாக அமைந்த ஆண்டாள் அருளிய

திருப்பாவைக்கு எண்ணிக்கை அடிப்படையில் ஒரு உரை எழுதினார். நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் மூன்று இரகசிய உண்மைகள் அடங்கி உள்ளதையும், இவற்றில் முதலாயிரத்தில் 'திருப்பல்லாண்டு' தொடங்கி 'அமலனாதிபிரான்' வரையில் 'ஓம்' என்னும் பிரணவத்தின் பொருளாகவும், மதுரகவியாழ்வார் அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' 'நம:' என்ற பதத்தின் பொருளாகவும், இரண்டாமாயிரமான பெரிய திருமொழி 'நாராயணாய' என்பதன் பொருளாகவும் கூறி, திருமந்திரத்தின் பொருளாக முதலாயிரத்தையும், பெரிய திருமொழியையும் காட்டுவர்.[37] இந்தஅடிப்படையில் முதலாயிரத்தில் இடம்பெற்றுள்ள திருப்பாவை 'ஓம்' என்னும் பிரணவத்தின் பொருளைக் குறிப்பதாகும். இதுபற்றியே 'வேதமனைத்துக்கும் வித்தாகும்' என்று அருளியது நோக்கத்தக்கதாகும்.[38] இவ்வாறு தத்துவ நோக்கில் திருப்பாவைக்கு அமைந்த உரையை ஆராய்ந்து நோக்கும் போது வைணவத்துக்கே உரிய தத்துவம், உபாயம் (ஹிதம்), உறுதிப்பொருள் (புருஷார்த்தம்) என்னும் மூன்று பகுதிகளை விளக்குவதாக முப்பது பாசுரங்கள் அமைந்ததாகவும், அந்த முப்பது பாடலின் உள்ளுறை பொருள் மூவாயிரப்படி உரையாக அமைந்ததையும் குறிகொள்ளத்தகும். மற்றும் ஆண்டாள் கிருஷ்ணாவதாரத்தில் ஆய்ச்சியர்கள் கண்ணனோடு சேருவதற்காக ஒருப்பட்ட நிலையை உணர்த்தும் பாகவதம் பத்தாவது அத்தியாயத்தில் (தஸம ஸ்கந்தத்தில்) இந்த ஆய்ச்சியர் - கண்ணன் உறவுகளைக் குறித்து மூவாயிரத்திற்கும் மேலான ச்லோகங்கள் மூலம் விளக்கியிருப்பதால், பெரியவாச்சான் பிள்ளை அதன் முக்கியத்துவத்தை அறிந்து மூவாயிரம் எண்ணிக்கையில் திருப்பாவைக்கு உரையிட்டுள்ளார் என எண்ண வாய்ப்பு

உண்டு[39] என்று கொள்ளத்தகும். அதாவது இராமாயணச் ச்லோக எண்ணிக்கையில் திருவாய்மொழிக்கு இருபத்து நாலாயிரப் படி அமைந்தது போல, கிருஷ்ணாவ தாரத்தில் கண்ணன் - ஆய்ச்சியர் நிகழ்ச்சிகளை உரைப்பதற்கு திருப்பாவைக்கு மூவாயிரப்படி அருளியதாக எண்ணத்தகும். அதே சமயத்தில் மணவாள மாமுனிகள், ''பெரிய வாச்சான் பிள்ளை பின்புள்ள வைக்கும்.... அருளிச்செயலாய்த்தறிந்து'' என்று சொல்லியதற்கு ஏற்ப மற்ற பிரபந்தங்களோடு ஆண்டாளுடைய திருப்பாவையும் பெரிய வாச்சான் பிள்ளை உரையில் அருளிச்செயலாய் நிறம் பெற்றது எனலாம்.[40] எனவே முதலாயிரத்தில் திருப்பாவைக்கு அமைந்த மூவாயிரப்படி உரை சிறப்பிடம் பெறுகிறது.

இத்தகைய மூவாயிரப்படியின் அமைப்பும் உரை உத்திகளையும் அடுத்த இயலில் காணலாம்.

****

## இயல்-2

### அடிக்குறிப்புகள் :

1. பழநடை விளக்கம் ப. 85
2. மேற்படி நூல் ப. 85
3. மேற்படி நூல் ப. 85
4. பின்னிணைப்பு எண். 1, ப.145 காண்க.
5. பெரிய திருமுடி அடைவு ப. 597.
6. தமிழ் இலக்கிய வரலாறு (பதிமூன்றாம் நூற்றாண்டு) ப. 334.
7. பெரிய திருமுடியடைவு ப. 597
8. தமிழ் இலக்கிய வரலாறு (பதிமூன்றாம் நூற்றாண்டு) ப. 334.
9. 'ஸ்ரீவைஷ்ணவ மணிப்பிரவளா' ப. 77.
10. நம்பிள்ளை உரைத்திறன் ப. 8.
11. எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவசபா பொன்விழா மலர் ப. 296.
12. திருப்பாவை வியாக்யானங்கள், பெரியவாச்சான் பிள்ளை வைபவம், ப. 13.
13. ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர் ப. 246.
14. மேற்படி நூல் ப. 248.
15. தமிழ் இலக்கிய வரலாறு (பதிமூன்றாம் நூற்றாண்டு) ப. 334.
16. மேற்படி நூல் ப. 335
17. திருப்பாவை வியாக்யானங்கள், பெரிய வாச்சான்பிள்ளை வைபவம், ப.11.
18. ஸ்ரீரங்கம் பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர் ப. 249.

19. பாவை பா. 1, உரை ப. 35.

20. பாவை பா. 18, உரை ப. 315.

21. பெரி. திரு. 5.8.7

22. தமிழ் இலக்கிய வரலாறு (பதிமூன்றாம் நூற்றாண்டு) ப. 334.

23. உபதேசரத்தினமாலை பா. 39.

24. மேலது பா. 41.

25. மேலது பா. உரை ப. 94

26. மேலது பா. உரை ப. 95.

27. திருப்பாவை வியாக்யானங்கள், பிள்ளை வைபவம் ப.11.

28. பெரிய திருமுடியடைவு ப. 597

29. திருப்பாவை வியாக்யானங்கள், ப. 110.

30. அகோபில மடத்தை தோற்றுவித்த ஆதிவண்சடகோப ஜீயருக்கு ஆசாரியர்.

31. பரகால நல்லான் ரகஸ்யம், மைவண்ண நறுங்குஞ்சிக்கு உரை, ஆசார்ய ஹ்ருதயத்துக்கு முந்துர முன்னம் உரை

32. பகவத் விஷய தனியன் உரை. ப. 31

33. பெரிய திருமுடியடைவு ப. 597.

34. பாவை பா. 15, உரை ப. 263.

35. ஸ்ரீவைஷ்ணவ மணிப்பிரவாளா, ப. 79.

36. பாவை பா. 1, உரை ப. 35.

37. கலியன் அருள்பாடு ப. 6.

38. பாவை பயன் பாடல் 2.

39. பாகவதம் 10வது அத்தியாயம்.

40. உபதேசரத்தினமாலை பாடல் 46.

# இயல் - 3

# உரை அமைப்பும் உரை உத்திகளும்

## 3.0 உரை அமைப்பு :

*மூவாயிரப்படி உரை அமைப்பானது திருவாய் மொழிக்கு அமைந்த உரை அமைப்பினை ஒத்ததாகும்.*[1] *பெரியவாச்சான்பிள்ளை நாலாயிரத்துக்கும் உரை எழுதியபோதிலும் திருவாய்மொழிக்கும் திருப்பாவைக்கும் மட்டும் 'படி' என்கிற எண்ணிக்கையைக் கொண்டு உரை வகுத்துள்ளார். இதனைக்கொண்டு பார்க்கும் போது திருவாய் மொழியை வேதமாகக் கொள்ளப்படுவதும், திருப்பாவையை வேதமனைத்துக்கும் வித்தாகப் போற்றப்படுவதும் குறிப்பிட்டதாகும்.*[2]

## 3.1 'படி' பெயர்க்காரணம் :

*படி என்பது ஒற்றெழுத்து நீங்கலாக உயிரும் உயிர் மெய்யுமாய் முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டதைக் குறிக்கும். மூவாயிரப்படியானது 96,000 எழுத்துக்களைக் கொண்டதாகும். பாகவதத்தின் தசம ஸ்கந்தத்தில் ராசக்கிரீடை பகுதியில் உள்ள ச்லோகத்திற்கு ஈடானது எனலாம்.*[3]

### 3.1.1 சிறப்புப் பாயிரமும் உரைப்பாயிரமும் :

*பெரியவாச்சான்பிள்ளை வழங்கிய உரைக்கு முன்னுரையாக உள்ள அவதாரிகையில் நன்னூல் கூறும் பாயிரத்தின் கூறுகள் பதினொன்றும் அமையப் பெற்றுள்ளதை அறியலாம். அவற்றைக்கீழ்க்கண்டவாறு ஒப்பிட்டுக் காணலாம்.*[4]

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆக்கியோன் பெயர் | - | பெரியவாச்சான்பிள்ளை |
| 2. | வழி | - | திருவாய்மொழி உரை வழி |
| 3. | எல்லை | - | திருப்பாவைக்கும் அதன் உரைக்கும் வடமதுரை முதல் தென்மதுரை வரை இடை எல்லை. |
| 4. | நூற்பெயர் | - | மூவாயிரப்படி. |
| 5. | யாப்பு | - | விசிஷ்டாத்துவைத தத்துவமும், தமிழ்ப் பா இலக்கணமும், ஆசார்யர்களின் வழி கேட்டு, பின்னர் கற்கத்தக்கது என்னும் யாப்பு. |
| 6. | நுதலிய பொருள் | - | இறைவனுக்கு ஆட்பட்டிருக்கும் தன்மை (சேஷ-சேஷி) பாவம். |
| 7. | கேட்போர் | - | இறை அனுபவத்தில் ஆசையுடையோர். |
| 8. | பயன் | - | வீடுபேறு. |
| 9. | காலம் | - | மார்கழி மாதம் |
| 10. | களம் | - | ஆய்ப்பாடி. |
| 11. | காரணம் | - | நோன்பு எனும் போலிக் காரணம் கொண்டு கண்ணனோடு கலத்தல். |

ஆக, நன்னூலார் கூற்றுப்படி சிறப்புப்பாயிரத்தில் இருக்கவேண்டிய பதினொரு கூறுகளும் முழுமையாக அமையப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

பெரியவாச்சான் பிள்ளையின் உரைப்பாயிரத்தை நன்கு ஆய்வு செய்தால் அதில் மேலும் மூன்று பெரும் பொருள்கள் விரிவாக ஆராய்ச்சி செய்யப்பட்டிருப்பது புலனாகின்றன. அவற்றை

1) **நுவல்வோர் சிறப்பு (வக்த்ரு வைலக்ஷண்யம்)**

2) **நூற்சிறப்பு (பிரபந்த வைலக்ஷண்யம்)**

3) **நுவல் பொருட் சிறப்பு (விஷய வைலக்ஷண்யம்)**

என பெரிய அரும்பதக்காரர் வடமொழிக் குறியீடுகளால் குறிப்பிட்டுள்ளார்.[5] இவையே மூவகை வீறுபாடுகள் என்று அறிஞர்களால் கூறப்பட்டுள்ளது.[6]

பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவைக்கு உரையிடும்போது அவ்வுரைக்கு முன்பாக சிறப்புப் பாயிரம் என்கிற முறையில் திருப்பாவை அருளிய ஆண்டாளின் சிறப்பையும், அவள் அருளிய பிரபந்தத்தின் சிறப்பையும், அப்பிரபந்தத்தில் பேசியருளிய எம்பெருமானின் சிறப்பையும் அருளிச்செய்கிறார். இந்த உரை முறையே நுவல்வோர் சிறப்பு, நூற்சிறப்பு, நுவல் பொருட் சிறப்பு என மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது.

### 3.1.2 நுவல்வோர் சிறப்பு (வக்த்ரு வைலக்ஷண்யம்):

பன்னிரு ஆழ்வார்களுக்குள்ளே ஆண்டாளின் சிறப்பு சீர்மை பொருந்தியதாகும். இதனை பெரியவாச்சான் பிள்ளை தம்முடைய உரை அவதாரிகையான பாயிரத்தின் தொடக்கத்திலேயே காட்டியுள்ளார். அதாவது உடலையும் உயிரையும் ஒன்றாகவே கொண்டு உடலையே உயிராக அபிமானிக்கும் உலக மக்களைக் காட்டிலும் தங்களுடைய

முயற்சியாலே யாகம், வேள்வி முதலானவற்றைச் செய்து உயிரின் இயல்புகளை அறிந்தவர்கள் முனிவர்களாவர். அப்படிப்பட்ட மலைபோன்ற முனிவர்களுக்கும் அணுவான உலக மக்களுக்கும் வேறுபாடு அதிகம். அங்ஙனமே தங்கள் முயற்சியால் பயன்பெற்ற முனிவர்களைக் காட்டிலும் இறைவனது இயற்கை இன்னருளால் அறிவின்மை, ஐயம், திரிபுணர்ச்சி முதலானவை நீங்கப்பெற்று நலமாகிய பக்தியையும் மதியாகிய இறை உணர்வையும் பெற்ற ஆழ்வார்களுக்கும் முனிவர்களுக்கும் முற்கூறியப்படி வேறுபாடு உண்டு. மேலும் ஆழ்வார்கள் எம்பெருமானையே தஞ்சமென்று இருப்பவர்களாவர்; அந்த ஆழ்வார்களைக் காட்டிலும் இறைவனுக்கு மங்களாசாசனம் செய்த பெரியாழ்வார் உயர்ந்தவர். எனவே பெரியாழ்வாரும் முற்கூறிய வேறுபாட்டால் சிறப்புமிக்கவராவார்; அவ்வாறே பெரியாழ் வாருக்கும் அவர் பெற்றெடுத்த ஆண்டாளுக்கும் அத்தகைய வேறுபாடு உண்டு. ஆகவே ஆண்டாளுக்குள்ள நெடுவாசியை பெரியவாச்சான்பிள்ளை அழகாக எடுத்துக்காட்டுகிறார். அதாவது சம்சாரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி எம்பெருமான் தன்னுடைய ஸ்வரூபம், வடிவு, குணம், செல்வங்கள் ஆகியவற்றை காட்டக்கண்டவர்கள் ஆழ்வார்கள். ஆனால் ஆண்டாள் தானே சென்று எம்பெருமானை எழுப்பி தன் குறையை அறிவித்தவளாகையாலே அவர்களைக் காட்டிலும் ஆண்டாளுக்கு ஏற்றம் தன்னிகரில்லாதது என்று வேறுபடுத்திக் காட்டுகின்றார்.[7]

### 3.1.3 நூற்சிறப்பு (பிரபந்த வைலக்ஷண்யம்) :

பக்திப் பெருஞ்செல்வம் நிறைந்தவனான லக்ஷ்மணன், அனைத்துலகையும் ஆனந்தமடையச் செய்யும் தன் சகோதரனான இராமனிடம் சிறுவயது முதற்கொண்டு

மிகவும் அன்பு கொண்டவனாயிருந்தான்.[8] அதேபோல் முதலிலிருந்தே எம்பெருமானுடைய கல்யாண குணங்களில் மூழ்கியவள் ஆண்டாள். அந்த ஆண்டாள் பாடிய திருப்பாவைக்கு ஏற்றமாவது, ஆண் ஆணைக் கண்டு காதல் கொள்வதைக் காட்டிலும் பெண் ஆணைக் கண்டு காதலிப்பது மேட்டுப் பகுதியிலிருந்து பள்ளத்திற்கு நீரானது ஓடி வருவதைப் போன்று (பள்ளமடையாகையாலே) ஆழ்வார்களைக் காட்டிலும் ஆண்டாளுக்கு எம்பெருமானிடம் பரமபக்தி அதிகம். அப்பிரபந்தமோ பரம பக்தியை வெளிக்கொணர்கின்றது.[9]

### 3.1.4 நுவல்பொருட் சிறப்பு (விஷய வைலக்ஷண்யம்) :

மார்கழி நீராட்டம் என்று ஒரு போலிக் காரணத்தைக் கொண்டு நோன்பு என்கின்ற ஒரு போலிக் காரணத்தாலே எம்பெருமானிடம் சென்று, 'உனக்கு அடிமையாய் இருக்கின்ற இந்த ஆத்மா வேறு பயன் கருதாதபடி பண்ணி, இதுக்கு 'அநுகுணமான' குற்றேவல்களையும் (கைங்கர்யங்களையும்) கொடுத்து, அதுதானும் வேறு பொருளை (புருஷார்த்தத்தை) அடையா வண்ணம் பண்ணியருள வேணும்' என்று விரும்புவதாக நுவல்பொருள் குறிப்பிடப்பட்டுள்ளது.[10]

## 3.2 உரை உத்திகள்

### 3.2.1 பாடல்களின் சொற்கொண்டு அவதாரிகை வைத்தல்:

வைணவ உரையாசிரியர்கள் ஆழ்வார் பாசுரங்களுக்கு உரை வழங்கும் பொழுது அந்தந்தப் பாடல்களின் உயிர்த்தொடர்களைக் கொண்டு அவதாரிகையை இடுவர். அந்த வகையில் ஆண்டாளின் அடிப்படை நோக்கத்தைக் கொண்டு பெரியவாச்சான்பிள்ளை ஒவ்வொரு பாட்டின் உயிரான சொற்றொடரைக் கொண்டு அவதாரிகை

இடுகின்றார். இத்தகைய நெறி முப்பது பாடல்களிலும் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, 'தூமணி மாடம்' என்ற பாடலுக்கு பெரியவாச்சான்பிள்ளை இட்ட அவதாரிகை பின்வருமாறு: ''க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான்'' என்று தான் போகையை அநாதரித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள்.[11]

மேற்கூறிய அவதாரிகையில் 'தூமணி மாடம்' என்று தொடங்கி 'துயிலணைமேல் கண்வளரும்' என்பதின் கருத்தாக க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான் என்று அவதாரிகையிட்டுள்ளார். மேலும் 'மாமீர் அவளை எழுப்பீரோ' என்பதின் தொடக்கமாக 'மந்திரப்பட்டாளோ' என்பதின் ஈறாக உள்ள தொடர்களைக் கொண்டு கண்ணனோடு கலப்பதற்குத் தேவையாக ''தான் போகையை அநாதரித்துக் கிடக்கிறாள்'' என்று அவதாரிகை இட்டது அறியற்பாலதாகும். இவ்வாறு மற்ற 29 பாடல்களிலும் பாடல்களின் தொடர்களைக் கொண்டு அவதாரிகை அமைத்தது காணமுடிகிறது.[12] இத்தகைய நெறியை எளிமையாக அறியும் வகையில் அரும்பத உரைகாரர் தவறாமல் சுட்டிக்காட்டுவது குறிப்பிடத் தக்கதாகும்.

### 3.2.2 தத்துவ நோக்கில் அவதாரிகை இடுதல் :

பாடல்களுக்கு முன்பாக அவதாரிகை சொல்லும் பொழுது அப்பாடல் தொடர்களையே கொண்டு பொருள் சொல்லுவது மட்டுமல்லாமல், சில பாடல்களில் பாடலின் உட்பொருளுக்கேற்ப தத்துவ நோக்கில் அவதாரிகை இடுவதைக் காணலாம். அந்த வகையில் 'வையத்து வாழ்வீர்காள்' என்னும் பாடல் அவதாரிகையில் தத்துவக் கருத்துக்காட்டி அவதாரிகையிடுகிறார். அதாவது செய்யவேண்டியதையும் விடவேண்டியதையும் சொல்லு

வதாகக் கூறுவர். அதாவது ஒருநாள் ஒருவன் ஒரு பொருளை விரும்பி அதனையே பின்பு சிலநாள் சென்றபிறகு விட்டு விடுகிறான். அவ்வாறே முன்பு வெறுத்ததையும் பின்பு ஒருநாளில் விரும்பவும் செய்கிறான். இத்தகைய செயல் அவனுடைய கர்மத்தின் காரணமாக விருப்பமாகவும் வெறுப்பாகவும் தோற்றுகிறதேயன்றி ஒரு விஷயத்தைப் பற்ற பார்த்தோமேயானால் அது என்றும் ஒருபடிப் பட்டிருக்கும். அது இல்லாமையாலே மற்ற விஷயங்களை விடவும் முடியாது பற்றவும் முடியாது. ஆனால் இறைவனை பற்றுகையாலே விடுவதும் பற்றுவதும் ஆகிய இரண்டும் எளிதாய் இருக்கும் என்று அவதாரிகையிடுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.[13] இங்ஙனே எட்டு பாடல்களில் தத்துவ நோக்கில் அவதாரிகை இடுவதைக் காணமுடிகிறது.[14]

### 3.2.3 வரலாறு காட்டி அவதாரிகை இடுதல் :

பாடல்களுக்கு அவதாரிகை இடும்பொழுது பெரியவாச்சான்பிள்ளை அந்தப் பாசுர கருத்துக்கேற்ப வரலாற்றுச் செய்திகளோடு ஒப்புமை காட்டும் நெறியை பின்பற்றியுள்ளார். இதனால் அந்தப் பாடலில் சொல்கின்ற கருத்துப்பொருள் மேம்பட்டு விளங்குவது காணமுடிகிறது. எடுத்துக்காட்டாக, சீதையானவள் பொறுமையாக பத்து மாதம் அசோக வனமாகிய சிறையில் இருந்தாள். அப்பொழுது அனுமான் சென்று அவளை நேரில் கண்டான். தன்தோளின் மீது ஏற்றிக்கொண்டு இராமனிடம் சேர்ப்பதாகவும் சொன்னான். அதற்கு மாறாக சீதையானவள் "எதிரிகளின் பலத்தை அழிக்கவல்ல சக்கரவர்த்தி திருமகன் இலங்கையை அம்புகளால் கலக்கி என்னை மீட்டுச்செல்வாரேயாகில் அது அவருக்கே தக்கதாகும்"[15] என்று சொல்லுகிறாள். இப்படிப்பட்ட தன்மையைக் கொண்ட சீதைக்கு சமானமாக இருப்பாள் ஒருத்தியை

ஆண்டாள் எழுப்புவதாக 'தூமணிமாடத்து' என்ற பாடலில் காட்டுகிறார் பிள்ளை.[16] இவ்விடத்தில் சீதையைப் போல இறைவன் இட்ட வழக்காக இருந்து அவனை அனுபவிக்கை அவள் கார்யமென்பதை சுட்டிக் காட்டியபடி.

### 3.2.4 முன்னோர் பொருளாட்சியைக் காட்டி அவதாரிகை இடுதல் :

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரையாசிரியர்கள் தமக்கு முன்பு இருந்த ஆசிரியர்களின் பொருளாட்சி (நிர்வாகம்) களையும் காட்டி தமக்கென ஒரு வகையான நடையை ஏற்படுத்திக்கொண்டனர். குறிப்பாக பெரியாவாச்சான் பிள்ளை தாமருளிய இருபத்துநாலாயிரப்படி என்னும் திருவாய்மொழி உரையில் தமக்கு முன்பிருந்த ஆசாரியர்களின் வாய்மொழிகளையெல்லாம் பின்பற்றி எண்ணற்ற இடங்களில் பொருளாட்சியைக் காண்பித் துள்ளார். அவற்றை பின்பற்றியே திருப்பாவை மூவாயிரப் படியிலும் பல்வேறு பாடல்களின் பொருளை விளக்கும்போது முன்னோர்களின் பொருளாட்சிகளைக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பாடல்களினிடையில் பொருளாட்சிகளைக் காட்டுவது மட்டுமின்றி ஒரு பாடல் அவதாரிகையிலும் முன்னோர் பொருளாட்சியைக்காட்டி உரை வழங்குவது காணமுடிகின்றது. இவ்விடத்தில் அவதாரிகையில் முன்னோர் பொருளாட்சியைக் காட்டியதற்குச் சான்றாக பட்டருடைய பொருளாட்சி குறிக்கப்படுகின்றது. 'வங்கக்கடல் கடைந்த' என்ற பாடல் அவதாரிகையில் இந்த பிரபந்தத்தைக் கற்றோர்கள் பிராட்டியாலும் எம்பெருமானாலும் எல்லாக்காலமும் இறைவனின் கருணைக்கு இலக்காவார்கள் என்று குறிப்பிடுகின்றார். கிருஷ்ணாவதாரத்தில் நோன்பைக் கடைபிடித்தவர்கள் கண்ணனைப் பெற்றார்கள்; அந்த

கிருஷ்ணாவதார அனுபவத்தை ஆண்டாள் அநுகரித்து கண்ணனோடு ஒன்றாகக் கலந்தாள். எனவே காலம் வேறாயினும் கடைபிடித்தவர்களும் அநுகரித்தவர்களும் பயன்பெற்றார்கள். அந்த வகையில் என்றோ அருளிய ஆண்டாள் திருப்பாவையை இன்று பயிலுபவர்கள் பயன் பெறுவார்கள் என்பதை விளக்கும் வகையில் பட்டருடைய பொருளாட்சியை பெரியவாச்சான் பிள்ளை எடுத்துரைக் கிறார். கன்றை இழந்தது ஒரு பசு. அந்தக் கன்றினுடைய தோலிலே வைக்கோலை அடைத்து பசுவின் முன்வைத்து அந்த தோல் கன்றுக்கு இரங்கி பசு பால் கொடுக்கும். அவ்வாறே என்றோ ஆண்டாள் அருளிய பாடல் கொண்டு நாம் அவற்றில் ஈடுபட்டால் நமக்கும் ஆண்டாள் பெற்ற பயன் கிடைக்குமென்று கூறுவர். ''கன்றிழந்த தலைநாகு தோற் கன்றுக்குமிரங்குமாபோலே இப்பாசுரங் கொண்டு புக நமக்கும் பலிக்கும்'' என்பது பட்டர் பொருளாட்சி.[17]

இவ்வாறு மேலும் இரண்டு பாடல்களில் வரலாற்று அடிப்படையில் அவதாரிகை அமைத்ததைக் காணமுடிகிறது.[18]

### 3.2.5 பாடலின் சிறப்பு நோக்கி தனிப்பட்ட முறையில் அவதாரிகையிடுதல்:

பொதுவாக பெரியவாச்சான்பிள்ளை ஒவ்வொரு பாடலுக்கும் அவதாரிகையிடும் பொழுது அந்தந்தப் பாடலின் உயிரான சொற்களையோ பொருள்களையோ கொண்டு அவதாரிகை வழங்குவது அவர் நெறியாகும். ஆனால், 'நோற்றுச்சுவர்க்கம்' என்ற பாடலுக்கு அவதாரிகையிடும் பொழுது மூன்று வகையான அவதாரிகையைக் காட்டுகின்றார். இப்பாடலில் எழுப்பப்படுகின்ற பெண்ணானவள் வீறுபெற்றிருப்பதைத் தெரிவிக்கும் வகையில் பெண்களெல்லாரும் கண்ணனைக் காண்பதற்காக படும் நிலைமையெல்லாம் கண்ணன்

தாகத்தைப் போக்குவதற்காக அவன் தண்ணீர் தண்ணீர் என்று சொல்லும்படியாக இருப்பாள் ஒருத்தியை எழுப்புவதாக 'அருங்கலமே' என்ற சொல்லை உட்கொண்டு அவதாரிகை வழங்குகிறார். இந்த அவதாரிகையினால் கண்ணன் இந்தப்பெண் பிள்ளைக்காக ஏங்குவது தெரிகிறது. அடுத்து இறைவனே ஆத்மாவை மகிழ்விக்கிறான் என்று உபநிடதங்கள் கூறுவதில் நம்பிக்கையுடையாள் ஒருத்தியை எழுப்புவதாக 'சுவர்க்கம்' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு அவதாரிகையிடுகிறார். இதனால் இறைவனே ஆனந்தத்திற்கு உறுப்பானவன் என்கிற பெண்ணின் எண்ணத்தை அவதாரிகையில் காட்டியதாகும். அடுத்து கண்ணன் பக்கத்து திருமாளிகையிலே இருந்து நடுவிலே ஒரு வாசல் வைத்து ஒரே போக்கை உடையதாக அனுபவிக்கிறாள் என்று "புகுகின்ற" என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு அவதாரிகை வழங்குகிறார். இதனால் கண்ணனை அனுபவிக்கையாகிற பயன் கைபுகுந்ததைச் சொன்னபடி. இவ்வாறு மூன்று அவதாரிகையில் கண்ணனுடைய எண்ணம், பெண்பிள்ளையினுடைய எண்ணம், பெண்பிள்ளை பெற்ற பயன் இவற்றை ஒருசேர பிள்ளை திறம்பட காட்டுவது குறிப்பிடத்தக்கதாகும்.[19]

### 3.2.6 அவதாரிகையில் கொண்டு கூட்டுமுறையைக் காட்டல் :

அவதாரிகையில் சொல்லியபடி கருத்தை நிறுவும் வகையில் அந்தப் பாடலின் கொண்டு கூட்டுமுறையை சில பாடல் அவதாரிகையில் காட்டுகிறார். இதனால் அவதாரிகையில் காட்டிய பொருளை உணரமுடிகிறது. அந்த வகையிலே 'மாயனை மன்னு' பாடல் அவதாரிகையில் நோன்பிலே இழிந்த பெண்கள் தங்கள்

தகுதியின்மையைப் பார்த்து நோன்பிலிருந்து அகலப் பார்ப்பதாக எண்ணி இறைவனுடைய திருநாமங்களைச் சொல்லி அனுபவித்தால் பாபங்களெல்லாம் தானாகவே ஓடிப்போகும் என்று அவதாரிகையிட்டு, இதனால் தகுதியின்மையைப் பார்த்து அகல வேண்டாம் என்ற கருத்தைக் கீழ்க்கண்ட வகையில் கொண்டு கூட்டிக் குறிப்பிடுகிறார். ''மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத் தூயபெரு நீர் யமுனைத் துறைவனை ஆயர்குலத்தினில் தோன்று மணிவிளக்கைத் தாயைக்குடல் விளக்கஞ் செய்த தாமோதரனைச் செப்பு; போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' என்கிறாள்.[20]

### 3.2.7 உரையாடல் போக்கில்அவதாரிகையிடுதல் :

பிள்ளை பாடல்களுக்கு அவதாரிகையிடும் பொழுது அந்தப் பாடலில் உள்ள கருத்தை வெளிப்படுத்தும் வகையில் உரையாடல் போக்கில் அவதாரிகை காட்டுவர். எடுத்துக்காட்டாக ஆண்டாள் முதல் நான்கு பாடல்களில் நோன்புக்குரிய தன்மையை முதலில் எடுத்துச்சொல்லி பெண்களை அழைக்கிறாள். அப்பெண்களில் ஒருத்திக்கு ஏற்பட்ட சந்தேகத்தை போக்கும் வகையில் 'மாயனை மன்னு' என்னும் பாடலில் இறைவன் திருநாமங்களைச் சொன்னால் எல்லா பாவங்களும் போகும் என்கிறாள். இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளை உரையாடல் போக்கில் அமைத்த அவதாரிகை பின்வருமாறு :

பெண்களில் ஒருத்தி : நாம் இப்படியே அதிகமாகப் பாரித்துக்கொண்டு நோன்பில் இழிகிறோம். நமக்குத்தான் இது தலைக்கட்டுகைக்கு நம்பிக்கை என்ன? வெகு காலமாக சேர்த்துவைத்த கர்மங்கள் இதுக்கு விரோதத்தைப் பண்ணாதோ! பெரியோர்

களுக்குக் கூட நற்காரியங்களில்தடை ஏற்படுகிறதல்லவா?

வேதாந்த அறிவுடைய ஒருத்தி: நாம் நம்முடைய விரோதி களைப் போக்கிக் கொண்டு வந்து இதிலே இழிகை என்று ஒரு பொருளும் இல்லை; நமக்கு ஏற்பட்ட இறையனுபவத்தைப் பண்ணினால் ஒருபடி பாலை சுவையாக பருகுமவனுக்கு ஏற்பட்ட பித்தம் தன்னடையே போமாபோலே பாவங்களும் நம்மைவிட்டு ஓடிப்போகும். எனவே தகுதியின்மையைப் பார்த்து அகலவேண்டா.

இவ்வாறு பாட்டின் கருத்தை உரையாடல் போக்கில் காட்டுவது பிள்ளையின் தனித்தன்மையாகும்.[21] இங்ஙனே கண்ணனுக்கும் பெண்களுக்கும் நடந்த உரையாடலை 'ஒருத்தி மகனாய்' என்ற பாடலின் அவதாரிகையில் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.[22]

### 3.2.8 அரிமா நோக்கில் அவதாரிகையிடுதல் :

சிங்கமானது குகையிலிருந்து எழுந்து தான் போகவேண்டிய இடத்தின் பாதிதூரம் சென்றபிறகு திரும்பி வந்த வழியைக் காண்பது போன்று பெரியவாச்சான் பிள்ளை 'நாயகனாய் நின்ற' பாடலுக்கு அவதாரிகையிடும் பொழுது கீழிற் பத்துப்பாட்டாலும் முற்பட உணர்ந்தவர்கள் உறங்குகிறவர்களை எழுப்ப எல்லோரும் கூடிவந்து ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையில் கோயில் காப்பானையும், திருவாசல் காப்பானையும் எழுப்புகிறார்கள் என்று இப்பாடலுக்கு முன்பாக உள்ள 10 பாடல்களின் கருத்தைச் சொல்லுவது குறிப்பிடத்தக்கதாகும்.[23] இந்த

அவதாரிகையின் பின்னணியில் பெரியவாச்சான் பிள்ளையின் உள்ளக்கருத்தை அரும்பத உரைகாரர் எடுத்தியம்புவது குறிக்கப்பட்டுள்ளது.[24]

### 3.2.9 முதலும் முடிவும் கொண்டு அவதாரிகையிடுதல் :

பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவை முதல் பாடலில் 'மார்கழித்திங்கள்' என்று தொடங்கி 'சிறுமீர்காள்' என்னுமளவாக பெண்கள் பெறவேண்டிய பயனாகிய ப்ராப்யத்தையும், மேலே 'பறை' என்ற சொல்லாலே அடிமையாகிய ப்ராபகத்தையும் சொல்லுவதாக அவதாரிகையிட்டு, ஆகையாலே இப்பாடல் ப்ராப்ய - ப்ராபகத்தின் சுருக்கம் என்று குறிப்பிடுகிறார்.[25]

இவ்வாறு ப்ராப்ய ப்ராபக சுருக்கமாக முதலில் சொன்னதின் விளக்கமாக முடிவிலே 'கறவைகள் பின்சென்று' என்ற பாடலும் 'சிற்றஞ்சிறுகாலே' என்ற பாடலும் விவரிப்பதாக அவதாரிகையிடுகின்றார். அதாவது 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று முதல் பாடல் சொன்னது குற்றமாய் அதற்கான மன்னிப்பையும், தங்களிடம் கைம் முதலில்லாமை முதலான சிலவற்றையும் இப்பாட்டில் சொல்லுகையால் இது முதல்பாட்டில் சொன்ன கருத்தின் விளக்கமாக அமைந்தது என்று அரும்பதகாரர் குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[26]

### 3.2.10 முன்பாட்டோடு இயைபுபடுத்தி அவதாரிகையிடுதல் :

பெரியவாச்சான்பிள்ளை சில பாசுரங்களுக்கு அவதாரிகையிடும் பொழுது முன்பாடலில் சொல்லிய கருத்து விளக்கம் பெறுவதற்காக அதற்கடுத்த பாடலின் அவதாரிகையில் முன்பாட்டின் கருத்தை இயைபுபடுத்திக்

காட்டுகிறார். எடுத்துக்காட்டாக 'அங்கண்மாஞாலம்' என்ற பாடலில் 'அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல்' என்கிறபடியே கண்ணன் தன்னுடைய அழகிய இரண்டு கண்களாலும் ஆய்ப்பெண்கள் தங்களைக் குளிர நோக்க வேணும் என்றுவேண்டினார்கள். அடுத்து 'மாரிமலை முழஞ்சில்' என்ற பாடலில் 'யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்' என்று வேண்டுகின்றார்கள். இவ்வாறு வேண்டினதற்குக் காரணம் முன் பாடலில் இவர்கள் வேண்டினபடி கண்ணன் முகம் காட்டினமையால் இப்பாடலில் வந்த காரியத்தை ஆராய்ந்து அருள்புரியச் சொல்லுகிறார்கள். இதில் முகம் காட்டினது என்பது உட்பொருளைச் சொன்னபடியால் பெரியவாச்சான்பிள்ளை இப்பாடல் அவதாரிகையில் விபீஷண சரணாகதி செய்தபோது நடந்த நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி நாங்கள் வந்த காரியத்தை கேட்டருள வேணும் என்று அவதாரிகையிடுகிறார்.[27] இவ்வாறு 16 பாடல்களில் முன்பாட்டோடு இயைபு படுத்துவது காணமுடிகின்றது.[28]

### 3.2.11 பாட்டின் தொடர்களைக் கொண்டு அவதாரிகை இடுதல் :

ஆண்டாள் அருளிய பாடல்களுக்கு அவதாரிகையிடும் பொழுது ஒவ்வொரு பாடலின் அடிப்படைச் சொல்லையோ தொடர்களையோ எடுத்துக்கொண்டு அவதாரிகையிடுவது இவரது உரையின் தனித்தன்மை யாகும். இந்த நெறி ஆண்டாள் பாடலுக்கு சிறப்புத்தந்து உரைக்குப் பெருமையை விளைவிக்கின்றது. எடுத்துக் காட்டாக 'புள்ளும் சிலம்பினகாண்' என்ற பாடலில் 'பிள்ளாய்' என்ற சொல்லைக் கொண்டு இந்நோன்பின் சுவடறியாது பகவத்விஷயத்தில் புதியளாகையான ஒருத்தியை எழுப்புகிறார்கள் என்று அவதாரிகை இடுகிறார்.

'பிள்ளாய் என்றது அறிவில்லாமையை - பகவத் விஷயத்தில் புதியவளாகையை' என்று சின்ன அரும்பதம் காட்டுவதும் குறிப்பிடத்தக்கதாகும்.[29]

### 3.2.12 கொண்டு கூட்டுமுறையை உரையில் காட்டல் :

தமிழ் இலக்கியத்தில் பாடல்களின் உரிய பொருள்களை அறிவதற்காக பாடல்களில் உள்ள சொற்களை உரிய இடத்தில் கொண்டு பொருள் வழங்குவர் உரையாசிரியர்கள். இந்த நெறியைப் பின்பற்றியே பெரியவாச்சான்பிள்ளையும் பல பாடல்களில் நேராக பொருள் கொள்ளுவது மட்டுமல்லாமல் ஈற்றடித் தொடர்களையோ அல்லது மற்ற தொடர்களையோ கொண்டு கூட்டி உரை வழங்குவர். எடுத்துக்காட்டாக 'அங்கண் மாஞாலம்' என்ற பாடலில் ''அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல் எங்கள் மேல் சாபம் இழிந்து'' என்ற தொடருக்கு 'இழியும் என்ற சொல்லாற்றலாலே விஷத்தைப் போக்குமவன் பார்க்க விஷம் தீருமா போலே அவன் நோக்காலே பிறவியாகிற விஷம் தீரும்' என்று உரையிடுகிறார். இவ்விடத்தில் 'நோக்குதியேல்' என்ற சொல்லின் உரிய பொருளை உரைத்தபடி.[30] ஆகவே பொருள் நோக்கில் 'அங்கண் இரண்டுங்கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல் சாபம் இழிந்து' என்று கொண்டு கூட்டுகிறார். இங்ஙனே 5 பாடல்களில் வெளிப்படையாகக் கொண்டு கூட்டி உரை வழங்கியது காணமுடிகிறது.[31]

இவ்வாறு பெரியவாச்சான்பிள்ளை வெளிப் படையாகக் கொண்டு கூட்டி உரை வழங்கியது மட்டுமல்லாமல் ஆண்டாளின் திருவுள்ளத்திற்கேற்ப தன்வயப்பட்டு பாடல்களுக்கு பொருள் வழங்கியதை அரும்பத உரைகாரர்கள் பெரியவாச்சான் பிள்ளை

மேற்கொண்ட கொண்டு கூட்டுமுறையை எடுத்துக்காட்டி யுள்ளனர். எடுத்துக்காட்டாக : 'கனைத்திளம்' என்ற பாடலில் 'நனைத்தில்லம் சேராக்கும்' என்ற தொடருக்கு பாலின் மிகுதியாலே அகம் வெள்ளமிடும்; அத்தாலே துகையிண்டு சேறாகும் என்று உரையிடுகின்றார். இவ்வாறு உரை வழங்கியது இல்லம் - நனைத்து - சேறாக்கும் என்று கொண்டு கூட்டி உரைவழங்கியதாக பெரிய அரும்பதக்காரர் குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[32] இங்ஙனே 17 இடங்களில் பெரிய அரும்பதகாரர் காட்டியுள்ளார்.

மேலும் சின்ன அரும்பத உரைகாரர் ஐந்து இடங்களிலும், குட்டி அரும்பத உரைகாரர் மூன்று இடங்களிலும் பெரியவாச்சான்பிள்ளையின் உரையில் பாடல் கொண்டு கூட்டை எடுத்துக்காட்டியுள்ளனர்.[33]

### 3.2.13 வேறு கருத்துப் பொருளுரைத்தல் :

ஆண்டாள் பாடலுக்கு உரையிடும் பெரியவாச்சான் பிள்ளை முதலில் சொல் தொடருக்குரிய இயல்பான பொருளைக் கூறுவர். பின்னர் அப்பொருளோடு சம்பந்தப்பட்ட கருத்தைத்தெரிவிக்கும் வகையில் வேறு கருத்துப் பொருளையும் உரைப்பர். எடுத்துக்காட்டாக, 'உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது' என்ற சொல் தொடருக்கு உன்னோடு உண்டான சம்மந்தம் உன்னால் விட ஒண்ணாது; எங்களாலும் விட ஒண்ணாது; இருவரும் கூட ஒப்பந்தம் கொண்டாலும் (க்ருத சங்கேதரானாலும்) விடஒண்ணாது என்று இயல்பான பொருளைக் காட்டி, இந்தப் பொருளின் உள்ளடக்கமான காக்கப்படும் பொருள் - காப்பாற்றுபவன் (ரக்ஷிய - ரக்ஷக பாவம்) சம்பந்தத்தைத் தெரிவிக்கும் வகையில் கருணை நிறைந்தவனான (தயாபூர்ணனான) உன்னோடு அருளத்தக்கவனால் (தயநீயதயா) நிறைவையுடைய (பூர்ணைகளான) எங்களுக்கு உண்டான உறவு என்னுமாம்

என்று கூறுவர்.[34] தயா பூர்ணனான உன்னோடு என்பதனால் 'உன் தன்னோடு' என்பதன் பொருளும், தயநீயதயா பூர்ணைகளான எங்களுக்கு என்பதனால் 'நமக்கு' என்பதன் பொருளும் சொன்னபடி. இத்தகைய உரை நயத்தை அரும்பத உரைகாரர்கள் 22 பாடல் உரைகளிலிருந்து எடுத்துக்காட்டியது அறியற்பாலதாகும்.[35]

### 3.2.14 வியப்பு தோற்ற பொருளுரைத்தல் :

ஆண்டாள் அருளிய திருப்பாவையில் விளித்துச்சொன்ன சொற்களுக்கு வியப்பாக பொருள் சொல்லுவது மட்டுமின்றி பாடலில் சொல்லுகின்ற பொருளில் ஈடுபட்டு ஆண்டாள் திருவுள்ளத்தை வெளிக்காட்டும் வகையில் சில சொற் தொடருக்கு அந்த இடத்திற்கேற்ப ஈடுபட்டு வியப்பாக பொருள் உரைப்பர் பிள்ளை. இத்தகைய நெறி உரையாசிரியர் காட்டும் உரையின் பெருமையை மேம்படுத்துவதாக இருக்கிறது. எடுத்துக்காட்டாக, 'உந்து மதகளிற்றன்' என்ற பாடலில் பிராட்டியாகிய நப்பின்னையின் புருஷகாரத்தால் எம்பெருமானை - கண்ணனை பற்ற வேண்டும் என்பதற்கேற்ப நப்பின்னையின் இயல்பை எடுத்துச்சொல்லும் போது ஆண்டாள் 'பந்தார் விரலி' என்று பாசுரமிடுகிறாள். இதற்கு 'பந்தும் கையும் பொருந்தியிருக்கிறபடி' என்று உரையிட்டு ஆண்டாள் உள்ளிட்ட கோபிமார்கள் ஈடுபட்டதை எடுத்துக் காட்டும் வகையில் நாங்கள் அறிவுடைமையை (சைதன்யத்தை) விட்டு அறிவற்றனவாக (அசேதனமாக) பெற்றிலோமே! என்று வியப்பு தோற்ற இங்கு பந்து அசேதனமாக உள்ளதை சொன்னபடி.[36]

இப்படியாக 18 இடங்களில் பெரியவாச்சான் பிள்ளை வியப்பாக பொருளுரைக்கின்றார்.[37]

### 3.2.15 வரலாற்றுச் செய்தியோடு ஒப்பிட்டு பொருள் சொல்லுதல் :

*பெரியவாச்சான்பிள்ளை பாடலின் சில சொற்களுக்கு பொருள் வழங்கும் போது இராம கிருஷ்ண அவதார வரலாற்றுச் செய்திகளைக் காட்டி பொருள் வழங்குவர். இந்த அடிப்படையில் உரையாசிரியரின் மனதில் உள்ள கருத்தைப் பாடல் சொல்லோடு ஒப்புமைப்படுத்திச் சொல்லுவது குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக : 'மாரிமலை முழஞ்சில்' என்னும் பாடலில் சொற்களுக்குரிய பொருளைச் சொல்லிவிட்டு தான் ஈடுபட்ட இராமாயணச் செய்திகளையும் ஒப்பிட்டுக் காட்டுவார். அதாவது சிங்கமானது மழைக்காலமாகையாலே குகையைவிட்டு வெளியே புறப்படாது. இக்கருத்தை அரண் செய்யும் பொருட்டு சுக்ரீவனோடு நட்புகொண்ட இராமன் மழைக்காலமாகையாலே மால்யவான் என்ற மலையில் எழுந்தருளியிருந்தார். ஆக இராமனை சிங்கத்தோடு ஒப்பிட்டுச்சொல்லி அந்தச் சிங்கமானது மழைக்காலத்தில் குகையில் இருப்பதைக் காட்டும் வகையில், 'இராமன் வருஷா காலம் மால்யவானிலே எழுந்தருளியிருந்தாற் போலே' என்று உரையிடுகின்றார்.[38]*

*இங்ஙனே, காகம் இராமனைச் சரணமடைந்தது[39] பரதனின்அனுதாபம்[40]. திருவடி பெற்ற பேறு[41]. திருவடியின் ஆற்றல்[42]. தசரதனின் யானை[43] மற்றும் கிருஷ்ணாவதாரத்தில் விதுரனுக்குப் பிறந்த ஞானம்[44] கண்ணனின் ஓரத்தன்மை (பக்ஷபாதம்)[45] ஆகிய வரலாற்றுச் செய்திகளை வெளியிட்டது அறியற்பாலதாகும்.*

### 3.2.16 வினா எழுப்பி விடையளித்தல் :

*ஆழ்வார்களின் பாடல்களின் குறிப்பை உட்கொண்டு நிற்கும் சொல் தொடர்களினால் ஆழ்வார்களின் அகத்தே*

எழுந்த வினாவிற்கு ஏற்ப பொருள் வழங்குதல் உரையாசிரியரின் கடமையாகும். அவர்களில் முதன்மையானவர் நம்பிள்ளை. தம் ஆசிரியரான நம்பிள்ளையைப் பின்பற்றியே பெரியவாச்சான்பிள்ளையும் பதினோரு பாடல்களில் உள்ள சில சொற்றொடர்களுக்கு ஆண்டாள் அகத்தே எழுந்த வினாவைக் காட்டி உரிய விடையை உரைமூலம் விளக்கியிருக்கின்றார்.[46] எடுத்துக் காட்டாக, ஆண்டாள் கண்ணனை வேண்டுகின்றாள். நோன்பு நோற்க முற்படுகின்றாள். அப்படிப் பட்டவள் 'வையத்து வாழ்வீர்காள்' என்னும் பாட்டில் கண்ணன் அடி பாடி என்று சொல்லாமல் 'பரமனடி பாடி' என்று சொன்னதற்கு உரிய கேள்வியை எழுப்பி அதற்குரிய விடையையும் அளிக்கிறார். 'கண்ணன் திருவடி பாடாதே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற இறைவனை பாடுவான் என்? என்னில் இரண்டிடமும் ஒருவினையாகையால்' என்று உரைப்பர்.[47]

### 3.2.17 உரையாடல் போக்கில் உரை வழங்குதல் :

பெரும்பாலும் ஆழ்வார்களுடைய கூற்றுக் களிலிருந்து எதிரான இறைவனுடைய கூற்றுக்களைப் பொறுத்தமாக ஊகித்து உணருவது வைணவ உரையாசிரியர்களிடம் உள்ள தனிப்பட்ட தன்மையாகும். நம்பிள்ளையும் கற்பவர் மனதை அறியும்பொருட்டு இறைவனுடைய வார்த்தை பாடலில் நடுவில் இல்லையானாலும் இடையிலே இட்டு உணர்த்தி தாம் பற்றும் உரையாடல் உத்தியை செம்மையாகக் கையாண்டுள்ளார்.[48] இவரைத் தழுவியே பெரியவாச்சான் பிள்ளை திருப்பாவை உரையில் எட்டு பாடல்களில் ஆண்டாளுக்கும் உறங்குகின்ற பெண்மணிகளுக்கும் நடந்த உரையாடலைத் தவறாமல் சுட்டிக்காட்டுகின்றார்.[49] எடுத்துக்காட்டாக 'புள்ளும் சிலம்பினகாண்' என்னும்

பாடலில் பகவத் விஷயத்தில் புதியவளாகையாலே நோன்பின் சுவடறியாத ஒருத்திக்கும் அவளை எழுப்பவந்த ஆண்டாள் உள்ளிட்ட மற்ற பெண்மணிகளுக்கும் நடந்த உரையாடலை பின்வருமாறு காட்டுகிறார்.

ஆய்ச்சிமார்கள்: போதோடே வாசலிலே சென்று உணர்த்தக்கடவதாக சங்கல்பித்துப் போது விடியச் செய்தே கிடந்து உறங்குவதே!

உள்ளிருக்கும் பெண்மணி : போதுவிடிய வேண்டவோ எழுந்திருக்க?

ஆய்ச்சிமார்கள்: போதுவிடிந்தது, எழுந்திரு.

உள்ளிருக்கும் பெண்மணி: விடிந்தமைக்கு அடையாளமென்ன?

ஆய்ச்சிமார்கள்: நாங்கள் உணர்ந்து வந்தது போதாதோ?

உள்ளிருக்கும் பெண்மணி: உறங்கினாருணரிலன்றோ விடிவுக்கு அடையாளமாவது. வேறு அடையாளமுண்டோ?

ஆய்ச்சிமார்கள்: போதுவிடிந்தது, பறவைகள் கிளம்பி இரை தேடப் போகின்றன காண்.

உள்ளிருக்கும் பெண்மணி: அது விடிந்தமைக்கு அடையாளமோ?

ஆய்ச்சிமார்கள்: ஏன் அல்லவோ?

உள்ளிருக்கும் பெண் மணி: ஓம் அல்லவீ

ஆய்ச்சிமார்கள்: ஆவதென்?

உள்ளிருக்கும் பெண்மணி: நீங்கள் அவற்றை உறங்கவொட்டாதே கிளப்பினவாறே கிளம்பின வல்லது விடிந்த மைக்கு அடையாளமோ?

### 3.2.18 நியாய அடிப்படையில் பொருளை நிலைநாட்டுதல் :

வடமொழி நூல்களுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் இடத்திற்கு ஏற்ப பலவகை நியாயங்களைக் காட்டிப் பொருளை நிலைநாட்டுதல் வழக்கம். நியாயம் என்பது வாக்குவாதம், வாதநெறி என்ற பொருளைக் குறிக்கிறது.[50] இந்த உத்தியைப் பின்பற்றியே பலவித நியாயங்களைக் காட்டி வைணவ உரையாசிரியர்கள் ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு உரை வகுத்துள்ளனர்.

பெரியவாச்சான்பிள்ளையும் கைமுதிக நியாயத்தைக் காட்டி பொருளை நிலைநாட்டியுள்ளார். கைமுதிக நியாயமாவது 'அதுவே அப்படியானால் மற்றதனைப் பற்றி கூறுவது ஏன்?' என்னும் வாதநெறியாகும்.[51] இந்தவகையில் 'அம்பரமே தண்ணீரே' என்ற பாடலில் ஸ்ரீநந்தகோபர், யசோதை, கண்ணன், பலராமர் ஆகிய நால்வரையும் எழுப்புகிறார்கள். இவ்விடத்தில் கண்ணனுக்குக் காவலாக முன்புள்ள கட்டிலில் நந்தகோபன் படுத்துக் கொண்டிருக்கிறார். இந்த இடத்தில் கண்ணன் இருக்கும் போதே அவன் மகனான அநிருத்தாழ்வானைப் பெண்கள் களவு கண்டபடியால் இங்குப் பெண்களும் கண்ணனைக் களவுகாண்பர்கள் என்று எண்ணி கைமுதிக நியாயத்தைக்காட்டி உரையிடுகின்றார். 'அநிருத்தாழ்வானை யகப்படக் களவு காணக்கடவ பெண்கள், அவனழுகுக்கும் வாய்த்தலையாய் 'ஸாக்ஷாத் மந்மதமந்மத:' என்கிற க்ருஷ்ணனைக் களவு காணச்சொல்ல வேணுமோ?[52]

இவ்வாறு கைமுதிக நியாயத்தைக்காட்டி ஆறு பாடல்களில் பொருளை நிலைநாட்டியுள்ளார்.[53] இத்தகைய நெறி கற்பவர்களுக்கு தெளிவைப் பிறப்பிக்கிறது. மேலும் பெரியவாச்சான்பிள்ளை

அவதாரிகை தொடக்கத்திலேயே ஆண்டாள் நோன்பு கடைபிடிப்பதற்கு மூலமாக மீமாம்சையாலே ஹோளாதிகரண நியாயத்தாலே முன்னோர்கள் வழிவழியாகக் கடைபிடித்த ஆசாரம் என்று சமாதானம் அளிக்கிறார். ஹோளாதிகரண நியாயமாவது ஹோலிப் பண்டிகையை அனுட்டிப்பது போன்று சாஸ்த்திர ஆதாரமின்றி சிஷ்டாசாரத்தை ஒட்டி ஒழுகுவதைக் கூறும் நெறியாகும்.[54] மேலும் ஹோளை என்று விழாவாய், அந்த விழா வேத உபநிடத சாஸ்த்ர நூல்களில் விதிக்காமல் இருந்தபோதிலும் 'சிஷ்டாசார சித்தம்' என்று சிறிய அரும்பதக்காரர் உரைப்பது குறிப்பிடத்தக்கதாகும்.[55]

### 3.2.19 நயவுரை வழங்குதல் :

பாடலின் சொற்களுக்குப் பொருள் வழங்கும் போது தனக்கே உரிய பொருள் இருப்பினும் அதனை மேம்பட உணர நயமாக உரைப்பதுண்டு. அந்த வகையில் 'மார்கழித் திங்கள்'[56] என்ற தொடருக்குக் காலத்தைக் கொண்டாடு வதாகக் கூறி, அதனை நயமாக எடுத்துச்சொல்லும் வகையிலும் இராம பட்டாபிஷேகம் செய்வதற்காக ஏற்பாடு செய்ததை முனிவர் கூறும் போது சித்திரை மாதம் மங்களம் நிறைந்ததாயும் மலர்கள் நிறைந்ததாயும் உள்ளதை எடுத்துக்காட்டுவர்.[57] இந்த இடத்தில் பெரியவாச்சான் பிள்ளை இராமன் (பெருமாள்) 'பொன்முடி சூட காடு பூமுடி சூடிற்று' என்று பொருள்நயம்பட உரைத்துள்ளார்.[58] இவ்வாறு 16 இடங்களில் உள்ளதைக் காணலாம்.

### 3.2. 20 உரைக்கு உரையிடுதல் :

பொதுவாக பெரியவாச்சான்பிள்ளை பாடல் தொடர்களுக்கு உரை வழங்கும் போது வேத, புராண, இதிகாச, திவ்வியப்பிரபந்த மேற்கோள்களைக் காட்டியும்,

புராண செய்திகளைக் கூறியும், முன்னோர் பொருளாட்சிகளைக் கையாண்டும் தெளிவான முறையில் எளிதில் யாவர்க்கும் விளங்கும் வண்ணம் உரையிடுவது வழக்கம். அங்ஙனம் உரையிடும் பொழுது தாம்காட்டிய மேற்கோள்களையே மேலும் விரித்து உரைக்கு உரையிடும் பான்மை குறிப்பிடத்தக்கதாகும். சான்றாக, 'மாயனை மன்னு' என்னும் பாடலில் 'மாயனை' என்னும் சொல்லுக்குப் பொருள் வழங்கும் போது கண்ணன் பிறந்தவுடன் தேவகி அவனுக்குக் கூறியதைக் காட்டி, நித்திய சூரிகளுக்கும் நேர்நின்று பார்க்கவொண்ணாது தடங்கலற்ற ஐச்வர்யத்தையுடையவன் அவதரித்தான் என்று அவதார எளிமையை விவரித்து உரை வழங்கியுள்ளார் பிள்ளை. மேலும் அவ்வுரையை விளக்கும் வகையில் முற்கூறிய தேவகி வார்த்தையை விவரித்துக்கூறுகிறார். அதாவது 'ஜாதோஸி' என்பதனால் தேவகி வயிற்றில் பன்னிரண்டு மாதம் குடியிருந்து பிறந்த பிள்ளைத்திறத்தில் குறைவறப் பிறந்தவனுக்கும் அதாவது இறைவனுக்கும் இல்லை செய்யவொண்ணாதபடி ஜூதலித்துக் கொடுத்ததைச் சொன்னபடி. 'தேவதேவேச' என்பதனால் இப்படியிருக்கிறவன் ஒரு காலத்தில் கர்மத்தினால் தொடுதலில்லாத நித்யசூரிகளுக்கு தலைவனாக இருக்கும் இருப்பைச் சொன்னபடி. 'சங்கசக்ரகதாதர:' என்பதனால் அது அறிந்தபடியை சொல்லுதல். மேலும் தமஸ; 'பரமோதாதா சங்கசக்ரகதாதர:' என்று பரமபதநிலயமுமாய் நித்யசூரிகள் தலைவனான (சூரிநிர்வாஹமு மான) வஸ்துவுக்குத் தனக்கே உரிய அடையாளமான (அஸாதாரண) சிந்நமான ஆழ்வார்களோடே (சங்கு சக்கரம்) அவதரிக்கையாலே என்று உரை வழங்கியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.[59] இங்ஙனம் இரு இடங்களில் இருப்பது சுட்டிக் காட்டத்தக்கதாகும்.[60]

### 3.2.21 ஐயம் திரிபறச் சொல்லல் :

ஐயந்தோன்றுமிடங்களில் இன்னதென்று இதுவே எனத் துணிந்து சொல்லும் என்பது நன்னூற்கொள்கை.[61] அதற்கு ஏற்ப மூவாயிரப்படி உரையிலும் பிள்ளை பல இடங்களில் ஐயம்திரிபறச்சொல்லியுள்ளார்.. எடுத்துக் காட்டாக, 'மார்கழித்திங்கள்' என்னும் பாடலில் 'நீராட' என்னும் சொல்லுக்கு பொருள் கூற முற்பட்ட உரையாசிரியர் படிப்போர்க்கு ஐயம் எழாவண்ணம் பொருள் வழங்கி இருப்பது சுட்டிக்காட்டத்தக்கது. அதாவது 'நீராட ' என்பதற்கு கண்ணனைப் பிரிந்ததினால் பிறந்த தாபம் ஆறும்படி போய் குளிக்கை என்றும், இதனால் பெறப்படுவது உண்மையாகக் குளிப்பது என்ற பொருள் அல்ல. இவ்விடத்தில் கண்ணனோடு கலத்தலையே குறிப்பதாகப்பொருள் வழங்குவர் பெரியவாச்சான்பிள்ளை. இதற்கு உதாரணம், தமிழர் கலவியை 'சுனையாடல்' என்று சொல்லுவதால், இவ்விடத்தில் அப்பொருளையே தழுவியதாகக் கூறுவர்.[62] இதனால் 'நீராட' என்பதற்கு வெளிப்படையான பொருளான குளிக்கை என்பது இல்லை என்று ஐயம்திரிபறச் சொல்லுகிறார்.

### 3.2.22 பல்வகைப் பொருள் கூறுதல் :

உரையாசிரியர்கள் ஆழ்வார்களின் பாடல்களுக்கு அவர்கள் திருவுள்ளமறிந்து பல்வகையாக உரை வழங்குவதில் வல்லவர்கள். பெரியவாச்சான் பிள்ளையும் ஆண்டாள் பாடலில் ஈடுபட்டு அது தோற்ற பாடலில் உள்ள சொற்றொடருக்கு பலவகையாக பொருளை விவரித்துக் கூறுவர். இத்தகைய நெறியை 41இடங்களில் காணமுடிகிறது.[63] எடுத்துக்காட்டாக 'தத்துவம் அன்று தகவு' என்ற சொற்றொடருக்கு மூன்று வகையான பொருளை விவரித்துக்காட்டுகின்றார்.

(1) தத்துவம் என்று சத்யமாய் தகவு என்று தருமமாய் மெய்யே தருமம் என்றபடி.

(2) 'பாபாநாம் வா சுபாநாம் வா' என்னும் உனக்கு 'அஹத்வா ராவணம் ஸங்க்யே' என்ற அவனில் வாசியில்லை.

(3) தகவு என்று கிருபையாய் தத்துவம் என்று சொரூபமாய் உனக்கு கிருபையே சொரூபம் அன்று என்னுதல்.

இம்மூன்றால் சீதையினுடைய கருணை உள்ளத்தில் பெரியவாச்சான்பிள்ளை ஈடுபட்டு அவதாரிகையில் சொன்னதற்கு ஏற்ப இரண்டாவது பொருளைக் காட்டியது குறிப்பிடத்தக்கது.[64]

### 3.2.23 ஒப்புமை தோற்ற பொருள் வழங்கல் :

பாடலின் சொற்களுக்கு இயல்பான பொருளைச் சொல்வதோடு அல்லாமல் அந்த சொல்லுக்குரிய சிறப்பைக்காட்டும் வகையில் பலவாறாக ஒப்பிட்டுச் சொல்லுவர். இதனைப் பின்பற்றியே பெரியவாச்சான் பிள்ளையும் 'மார்கழித் திங்கள்' என்னும் பாடலில் 'ஆய்ப்பாடி' என்னும் சொல்லுக்கு இடைச்சேரி என்று சொல்வதோடல்லாமல் மூன்று விதமாக அந்தச் சொல்லின் சிறப்பை ஒப்புமைக்காட்டி உரைப்பர். அதாவது 'ஆய்ப்பாடியானது பரமபதம் போலே வேறு உடலை எடுத்துக்கொண்டு அங்குச் சென்று அனுபவிக்கவேண்டாத ஊர்' என்றும் ஆசாரத்தில் முக்கிய நோக்கம் உடையவரான வசிஷ்டர் முதலான முனிவர்கள் இருக்கிற திருவயோத்தியை போலன்றிக்கே இடக்கையும் வலக்கையும் அறியாத இடையர்கள் இருக்கிற ஊர் என்றும், 'இராமன் குணம் கண்டு உகக்கும் அயோத்தி போலன்றியே கண்ணன் தீம்பு கண்டு உகக்கும் ஊர்' என்றும்

பரமபதத்தையும் அயோத்தியையும் ஒப்பிட்டு ஆய்ப்பாடியின் சிறப்பைச் சொல்வது காணமுடிகிறது.[65]

இவ்வாறு நரசிம்மாவதாரத்தோடு 'இளம் சிங்கம்'[66] என்ற சொல்லுக்கேற்ப பொருள் வழங்கியதையும் அவ்வாறே 'தீக்குறளை சென்றோதோம்', 'நின்றுபால் சோர', 'வையத்து வாழ்வீர்கள்'[67] 'செய்யாதன செய்யோம்'[68], 'மாயனை'[69], 'ஒருத்தி மகனாய்'[70], 'பொன்றச்சகடம் உதைத்தாய் புகழ்'[71] ஆகிய இடங்களில் இராமாயணத்தோடு ஒப்பிட்டமையும் அறிய முடிகிறது.

## 3.2.24 உள்ளுறை பொருள் : (ஸ்வாபதேசம்)

திருப்பாவைக்கு உரை வழங்கிய பெரியவாச்சான் பிள்ளை பாடல்களுக்கு உரிய பொருளைச் சொல்லும்போது மேற்கோள் காட்டியும் வரலாற்றுச் செய்திகளைச் சொல்லியும் உரை வழங்குவதோடு மட்டுமல்லாமல், ஆன்மாவுக்கு உரிய இயல்புகளையும் சொல்லும் வகையில் பாடலுக்குரிய பொருளை உள்ளுற ஆழ்ந்து பார்த்து ஸ்வாபதேசமாக - உள்ளுறை பொருளாக பல இடங்களில் காட்டியுள்ளார். அவற்றை தொகுத்துக் காணும்போது ஆன்மாவுக்குரிய பல்வேறு இலக்கணங்களை உலக மக்கள் உய்யும் பொருட்டுக் காட்டிச்சென்றதை அறிய முடிகிறது. இவ்வாறு 26 இடங்களில் வந்துள்ளதை இங்ஙனே வரிசைப்படுத்திக்காணலாம்.[71(அ)]

ஆன்மாவுக்கு நல்ல நாளாகிறது எம்பெருமான் அருளுக்கு இலக்காகப் பெற்ற நாளாகும்.[72]

எம்பெருமானோடு கலப்பதற்கு குளிர்ந்த மடு உபமானமாகச் சொல்லப்படுகிறது.[73]

எம்பெருமானோடு சம்பந்தம் உடையவர்கள் கௌரவிக்கப் படுபவர்களாவர்.[74]

எம்பெருமானை எதிர்பார்ப்பவர்கள் விரும்பத் தக்கவர்கள்.[75]

இந்த ஆத்மாவுக்கு நிலைநின்ற செல்வமாவது எம்பெருமானுடைய சம்பந்தம்[76]

இந்த ஆத்மாவுக்கு கேள்வி ஞானம் பயன்தரக் கூடியது.[77]

அடியார்களை முன்னிட்டு எம்பெருமானைக் கிட்டுவது முறை.[78]

எம்பெருமான் அடியரானவர்களுக்கு மற்ற தெய்வங்கள் உதவுகின்றன.[79]

எம்பெருமானே உபாயமான பின்பு மற்றவர்கள் உபாயமாக மாட்டார்கள். அவ்வாறே உபேயமான கைங்கர்யத்தில் விரைவு முறைபார்த்திருக்க ஒட்டாது.[80]

உடலே ஆத்மா என்ற அபிமானத்தை விட்டு உடலைக்காட்டிலும் உயர்ந்ததான ஆத்மாவின் பக்கலிலே தன்னிச்சையாக இருப்பதை விட்டு வேறு பயனைக் கருதாது எம்பெருமானையே பயனாகக் கருதுவது ஸ்வரூபமாகும்.[81]

சத்துவ குணம் தலையெடுக்கும் போது அநாதியான அறிவின்மையாகிய இருள் நீங்கி எம்பெருமானைப்பற்றிய அறிவு பிறக்கும்.[82] எம்பெருமானைப் பற்றி அறிந்ததை அறிந்தவர்களுக்குச் சொல்லிப்பரிமாறுவது இயல்பாகும்.[83]

நந்தகோபனையும் கண்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போல பெரிய பிராட்டியானவள் எம்பெருமானுக்கும் ஆத்மாக்களுக்கும் முறையே பத்தினியாகவும் தாயாகவும் இருந்து புருஷகாரம் செய்கிறாள்.[84] எம்பெருமானுக்கு அடிமைத்தொழில் செய்வது ஆத்மாவுக்கு நிலைநின்ற செல்வம் (சம்பத்து) - நிலை நின்ற பேறு.[85] பாகவதர்களை முன்னிட்டு எம்பெருமானை வணங்குவது முறை.[86]

நம்முடைய பந்தம் நம்மால் அறுக்கப்போகாது போல் எம்பெருமானுடைய பந்தமும் அவனால் அறுக்கமுடியாது. அதாவது எம்பெருமான் தலைவன் (சேஷி) ஆத்மா அடியவன் (சேஷன்). இந்த ஆண்டான் அடியவன் உறவை நினைத்தல் அடியார்களின் பிறவித் தொடர்பு அறுக்கும்.[87]

இவ்வாறு திருப்பாவையில் ஆய்ப்பெண்களை எழுப்பும் 10 பாசுரங்களின் உள்ளுறை பொருள் மூலமாக அரும்பத உரைகாரர் வைணவர்களின் இயல்புகளைக் கீழ்க்கண்டவாறு எடுத்து இயம்புவது காணமுடிகிறது.

எம்பெருமானைப்பற்றுவதற்கு நன்மையான காலம் சிற்றஞ்சிறு காலை[88]. வைணவர்களின் தன்மையானது எம்பெருமானை அனுபவிப்பதிலேயே ஊற்றமுடையவர்களான அடியவர்களை ஆசாரியன் மூலமாகக் காட்டிக்கொடுப்பதாகும்.[89] எம்பெருமான் திறத்து அறிந்த பொருள்களை ஒருவன் மறந்தால் அவன் நினைவுக்கு வரும்படி சொல்வதும் வைணவனின் தன்மை ஆகும்.[90]

எம்பெருமானை அனுபவிப்பதில் ஆசையுடையவர்களின் திறத்து ஆசையுடையவராய் இருக்கையும் அவர்களை முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானைக் கிட்டுகையும் வைணவனின் தன்மை ஆகும்.[91] அடியார்களிடம் ஓரத்தன்மைக் கொண்டு இருக்கும் எம்பெருமான் திறத்து வைணவர்கள் எப்பொழுதும் அவனிடம் பக்தியுடையவராயிருத்தல் ஸ்வரூபமாகும்.[92] ஆசாரியன் மூலமாக எம்பெருமானைப் பற்றுவது இயல்பானத் தன்மையாகும். அந்த ஆசாரியனும் எம்பெருமானுடைய சம்பந்தத்தை இடைவிடாது பெற்றவராகையாலே அவரும் நம்மால் வணங்கப் படுபவர்.[93]

எம்பெருமானே உபாயமாம் தன்மையில் ஊற்றமுடையவர்களை எம்பெருமானிடம் பக்தியின்

மிகுதியாலே அவனை அனுபவிப்பதிலேயே ஊன்றியிருப்பவர்கள் அவ்வநுபவத்துக்காக தூண்டுகை இயல்பு.[94] எல்லாவற்றையும் சமமாக பார்க்கும் வைணவர்களைக்கண்டால் அந்தக் கூட்டத்தை உகப்பது இயல்பான தன்மையாகும்.[95] எம்பெருமான் திறத்து அவன் விஷயத்திலே மூளச்செய்யும் தலைவர் முன்பாக எம்பெருமானை அனுபவிப்பது இயல்பாகும்.[96] எம்பெருமானை அநுபவிப்பதற்கு ஞானம், வைராக்யம், பக்தி இம்மூன்றும் கருவிகள். இவற்றில் முழுமை பெற்றவர்கள் திறத்து அதன் காரணமாக வைணவர்கள் விருப்பத்தோடு இருப்பது ஸ்வரூபமாகும்.[97] எம்பெருமானுடைய பிரிவை பொறுக்க மாட்டாமல் இறையனுபவத்தில் மூழ்கினவர்கள் தங்களுக்கு வைணவர்கள் ஏற்புடையவராம். அன்றிக்கே அவர்களுடைய உறவுடையவர்களுக்காகவும் உகந்திருக்கை ஸ்வரூபம்.[98]

### 3.2.25 பழம்பெரும் உவமைகளைக் கொண்டு பொருள் தருதல் :

தமிழ் இலக்கியத்திற்கு இன்றியமையாத இலக்கண வகைகளைத் தொல்காப்பியர் உணர்த்தியுள்ளார். தொல்காப்பியம் காட்டிய உவமைக்குரிய இலக்கணத்தை அக்கால புலவர்கள் அறிந்துணர்ந்து உணர்ந்தபடியே உணர்த்துவதற்கு உறுதுணையாக்கிக் கொண்டனர். அவ்வகையிலே ஆழ்வார் பாடல்களின் உரைநடை சிறந்தோங்கவும் அந்தந்த ஆழ்வார்களின் அனுபவத்தை வெளிக் கொணரவும் வைணவ உரையாசிரியர்களுக்கு உவமைகள் உறுதுணையாயின. எனவே நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் ஆகியோர் படைத்த உரைகளில் உவமைகள் விளக்கம் பெறலாயின. இவையெல்லாம் தொல்காப்பியம் உவமை

இயல் கூறும் நூற்பாவிற்கேற்ப, வினை, பயன், மெய், உரு என நான்கு வகையில் அமைந்தன.[99] அந்த வகையில் பெரியவாச்சான்பிள்ளை அருளிய மூவாயிரப்படியில் அமைந்த உவமைகள் இறைவனின் சிறப்பினை எடுத்து உணர்த்தவல்லனவாகவும், தத்துவப் பொருளை விளக்கும் போக்கில் அமைந்ததாகவும் மற்றும் அன்றாட வாழ்க்கை, இராமாயண பாரத நிகழ்ச்சிகள், இயற்கை, வெள்ளம், உயிரினம், மருத்துவம், அரசியல் முதலான அடிப்படை நிலைக்களன்களைக்கொண்டு அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. இந்த வகையில் வந்த உவமைகள் 128 இடங்களில் உள.[100]

### 3.2.25.1 இதிகாச புராணங்கள் :

மூவாயிரப்படியில் ஆண்டாளின் பாடலில் அமைந்த சொற்போக்கை தெளிவுபடுத்தும் வகையில் இராமாயண நிகழ்ச்சிகளைக் கொண்டு 28 இடங்களில் உவமைகள் வந்ததைக் காணலாம்.[100 (அ)]

**சான்று** : 'ஏற்றகலங்கள்' என்ற பாசுரத்தில் வேறு ஒருவனுக்கு ஆட்படாமல் எம்பெருமான் ஒருவனையே சரணமாகப் பற்றவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறார். பகைவர்கள் வலிமையிழந்து, நான், எனது என்ற இயல்புமாறி வேறு போக்கற்று எம்பெருமான் ஒருவனையே பற்றவேண்டும் என்பதைத் தெரிவிக்கும் வகையில் 'மாற்றார் உனக்கு வலிதொலைந்து உன்வாசற்கண் ஆற்றாதுவந்து உன் அடிபணியுமாபோலே' என்னும் தொடருக்குச் சேர பெருமாள் (இராமன்) திருவாசலிலே வந்து விழுந்த காகம் போலே என்று இராமாயணச் செய்தியை உவமையாக உரைப்பர்.[101] இது

தொல்காப்பிய பயன் உவமைக்குச் சான்றாகக் கொள்ளத்தகும். இவ்வாறே கிருஷ்ணாவதார நிகழ்ச்சி பற்றிய உவமைகள் 14 உள.[102]

### 3.2.25.2 இயற்கை :

பிள்ளை தம் உரையில் ஆங்காங்கே இயற்கை வளத்தைச் சுட்டும் வகையில் உவமைகளை அளிப்பது சிறப்பானதாகும். இவ்வாறு 15 இடங்கள் உள.[103]

**சான்று :** 'கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி' என்னும் பாடலில் 'நின்று பால்சோர' என்னும் தொடருக்குப் பொருள் வழங்குகையில் திருமலையில் பாயும் திருவருவிகளானது நில்லாமல் பாய்வதை எடுத்துக்காட்டி, அதுபோல கற்றெருமை களும் பாலை நில்லாமல் சொறிந்து கொண்டிருப்பதாக உரையிடுகிறார்.[104] 'திருமலையில் திருவருவிகள் போலே' என்பது அந்த உவமை. இது தொல்காப்பியர் கூற்றுப்படி வினை அடிப்படையில் எடுக்கப்பட்ட உவமையாகக் கொள்ளலாம்.

### 3.2.25.3 அன்றாட வாழ்க்கை :

பிள்ளை உரையில் மக்கள் வாழ்க்கை பற்றியும் வந்த உவமைகள் உள. அவை 23 இடங்களில் வந்துள.[105]

**சான்று :** சாதாரணமாக கர்ப்பிணிகள் குழந்தை பெறும் வரையில் உட்கார்ந்து எழுந்து கொள்ளும் போது வயிற்றுக்கு நோவு வராமல் கலங்காமல் எழுந்திருப்பர். அந்த வகையில் 'புள்ளும்' என்ற பாடலில் முனிவர்களும் யோகிகளும் மெள்ள எழுந்து அரிஅரியென்று சொல்லுவர். இதனை விளக்கும் வகையில் பிள்ளை இந்த அன்றாட வாழ்க்கை இயல்பை முனிவர்கள் தவத்துக்கு ஒப்பாகச் சொல்லுவர்.[106]

### 3.2.25.4 மருத்துவம் :

*பால் இன்றியமையாத உணவுப்பொருள்; சுவை மிக்கது; இச்சுவை காரணமாகப்பால் குடிப்பவனுக்கு பித்தம் தானாகப் போய்விடும். இக்கருத்தை உணர்த்தும் வகையில் பிள்ளை உரையில் 3 இடங்களில் காணலாம்.*

**சான்று :** *'மாயனை' என்ற பாடலின் அவதாரிகையில் இறை அநுபவம் ஏற்பட உணர்த்தும் போது சேர்ப்பால் இனிமையாகப் பருகுபவனுக்குத் தன்னடையே பித்தம் போமாபோலே என்ற உவமையைக் காட்டிவிளக்குவார்.*[107]

### 3.2.25.5 தத்துவப்பொருள் :

*அறிவுள் பொருளான ஆத்மா உய்யும் பொருட்டு எம்பெருமானுக்கு அடிமை செய்யவேண்டும்; அதற்காக தான் அடியவன் என்பதை உணர வேண்டும்; நம்மாழ்வார் இறை அருளால் ஆத்மாவின் இயல்பை அறிந்து 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே' என்று பாசுர மிடுகிறார். அதாவது இறைவனுக்கு ஆட்செய்வதே தன்னைப் படைத்த பயன் என்று. இதனைக் கொண்டே 'உனக்கே நாமாட் செய்வோம்' என்று ஆண்டாள் பாடிய பாடலுக்கு உவமைப்படுத்திக்காட்டுவர் பிள்ளை.*[108] *இத்தகைய தத்துவக் கருத்துக்கள் கொண்ட உவமைகள் 10 உள.*[109]

### 3.2.26 ஆண்டாளின் உள்ளத்தை வெளிப்படுத்தல் :

*திருப்பாவை பாடிய ஆண்டாள் மார்கழி நீராட என்ற ஒரு போலிக் காரணத்தைக்கொண்டு நோன்பு என்ற ஒரு போலிக் காரணத்தாலே எம்பெருமான் பக்கலிலே சென்று தன்னுடைய ஆத்மாவிற்குத் தக்கதான - அடிமைத் தன்மைக்கேற்ப கைங்கர்யங்களையும் கொடுத்து அதுவும் ஆத்மா இருக்கும் வரை பண்ணவேண்டும் என்றும் வேண்டுவதாகக் கூறுவர்.*[110]

இத்தகைய உள்ளக்கருத்தை வெளிப்படுத்தும் வகையில் பிள்ளை பதினொரு பாடல்களின் உரையில் ஆண்டாளின் திருவுள்ளத்தை எடுத்துக்காட்டுகிறார். எடுத்துக்காட்டாக 'தூமணி மாடத்து' என்ற பாடலில் கண்ணன் வந்தபோது வருகிறான் என்று ஒரு பெண்மணி தானேபோவதை அநாதரித்துக் கிடக்கிறாள். 'அவள் இருக்கிற இடமானது குற்றம் எடுத்துகழிக்க வேண்டாமல் நன்மையையுடைய மணியாலே செய்த மாடமாகும். அந்த மாடத்தில் மாணிக்கத்தின் ஒளியாலே பகல்விளக்கு போலே விளக்கு எரிகிறது என்று கூறிவிட்டு கண்ணன் வந்தால் தன் கையைப் பிடித்து உலாவுமிடமெல்லாம் படுக்கையும் விளக்குமாக்கி வைத்தபடி' என்று ஆண்டாள் நினைவை எடுத்துஇயம்புகிறார்.[111] இவ்வாறு 12 இடங்கள் உள.[112]

### 3.2.27 மேற்கோள் விளக்கம் :

#### 3.2.27.1 வடமொழி நூல் மேற்கோள்கள் :

பெரியவாச்சான்பிள்ளை வடமொழிநூல்களில் உள்ள பலதுறை நூல்களை நன்கு கற்றவராகையால் அவர்தம் உரையில் பெரும்பாலும் அவற்றைப் பயன்படுத்தி யுள்ளமை புலப்படுகின்றது. வேதம், உபநிடதம், ஸ்மிருதி, இராமாயணம், மகாபாரதம், பாகவதம், பகவத்கீதை, விஷ்ணுபுராணம் முதலான 25 வடமொழி நூல்களிலிருந்து 203 மேற்கோள்களைக் கொண்டு உரை வழங்கியதைக் காணலாம்.[113] மேற்கோள் வழங்கிய இடங்களைத் தொகுத்து பார்க்கும் போது ஆண்டாள் சொற்களுக்கு பொருள் விளக்கம் தருவதற்காகவும், சொற்பொருள் காட்டுவதற் காகவும் வடமொழி நூல்களோடு ஒப்புமை காட்டச் சான்றுகளாகவும் காட்டும் வகையில் மேற்கோள்கள் வந்துள்ளன.

### 3.2.27.2 வேதம் :

வேத மேற்கோளாக காட்டிய இடங்கள் பிள்ளை உரையில் இடம் பெற்றுள்ளன. பெரும்பாலும் யஜுர் வேதத்தையும் ஒரு இடத்தில் ருக் வேதத்தையும் கையாண்டது காணமுடிகிறது. 'வேதப் பயன் கொள்ள வல்ல விஷ்ணு சித்தன்' என்கிறபடியே பெரியாழ்வார் மகளாகையாலே ஆண்டாள் வேதத்தை தமிழாகச் சொல்லியதற்கேற்ப மேற்கோள்கள் அமைந்தது காணமுடிகிறது. எடுத்துக்காட்டாக யஜுர் வேதத்தில் 'நிகாமே நிகாமே ந பர்ஜன்யு வர்ஷது' என்ற தொடர் வருகிறது. இதன் பொருளாவது 'நாம் விரும்பிய போதெல்லாம் மழைக்கடவுளான பர்ஜன்யன் மழை பொழியட்டும்' என்பதாகும். இதனையே மேற்கோளாகக் கொண்டு 'திங்கள் மும்மாரி பெய்து' என்பதற்குச் சேர பிள்ளை உரை வழங்கியது அறியற்பாலதாகும்.[114] வேத மேற்கோள்கள் அனைத்தும் பொருள் விளக்கம் பெற அமைந்தது காணமுடிகிறது.

### 3.2.27.3 உபநிடதங்கள் :

வேதத்தின் முடிந்த பாகமானது உபநிடதமாகும். பத்து உபநிடதங்கள் முக்கியமாகக் கருதப்படுகின்றன. இவற்றில் தைத்திரீய, சுபால, சாந்தோக்ய, கௌஷீதகி, கேன, முண்டக, பிரஹதாரண்யக உபநிடதத் தொடர்கள் கொண்டு உரையாசிரியர் ஆண்டாள் பாடல்களுக்கு சான்றுகளாகவும், பொருள் விளக்கம் பெறவும் கையாண்டது குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக, சாந்தோக்ய உபநிடதம் 'தத்யாத இஷீக தூலம் அக்ரௌ பரோதம் ப்ரதுயேத தவம் ஹாஸ்ய ஸர்வே பரம்மாந: ப்ரதூயந்தே' என்று ஓதுகிறது. அதாவது ஈர்க்கு எனப்படும் துடைப்பத்தில் உள்ள புல்லின் நுனியில் உள்ள பஞ்சு போன்ற பகுதியை நெருப்பிலிட்டால் அழிவது போல

இறைவனை தியானம் செய்பவரின் பாவங்கள் எல்லாம் அழிகின்றன் என்றவாறு. இதனை உட்கொண்டே ஆண்டாளும் 'மாயனை' என்ற பாசுரத்தில் இறைவனுடைய நாமங்களை வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்தால் முன்பு செய்த பாவங்களும் மேல்வரும் பாவங்களும் தீயிலிட்ட பஞ்சுக்குவியல் போல் ஆகும் என்கிறாள். இதுபற்றியே 'தீயினில் தூசாகும்' என்பதற்குச் சேர பிள்ளை இந்த மேற்கோளைக் கையாண்டுள்ளார்.[115] இங்ஙனே 18 இடங்களில் உபநிடதத்தொடர்கள் வந்துள்ளதைக்காண முடிகிறது.[116]

### 3.2.27.4 ஸ்ரீவிஷ்ணு புராணம் :

புராணங்களில் மிகப் பழமையானது ஸ்ரீவிஷ்ணு புராணம். இது பிள்ளை உரையில் ஆண்டாள் சொற்களுக்கு பொருள் விளக்கம் தருவனவாகவும், சான்றுகள் காட்டுவனவாகவும், ஒப்புமை காட்டவும் 20 இடங்களில் வந்துள்ளன.[117]

**சான்று** : 'கீழ்வானம்' என்ற பாட்டில் 'தேவாதி தேவனை' என்ற சொல்லிற்கு இரண்டு பொருள்கள் கூறுகின்றார். ஒன்று அயர்வறும் அமரர்கள் அதிபதி; மற்றொன்று மதுரையில் நாகரீகனாக இருந்தவன். இந்த இரண்டு பொருளில் அயர்வறு அமரர்கள் அதிபதி என்ற பொருளை விளக்கும் வகையில் ''ஜாதோஸ் சி தேவ தேவேச'' என்றும் ''ஸோஹம் தே தேவ தேவேச'' என்றும் விஷ்ணு புராணத்திலுள்ள ச்லோகங்களை மேற்கோள் காட்டுகிறார்.[118] அதாவது என்றும் ஒளிவிடும் தேவர்களான நித்ய சூரிகளுக்கு ஆனந்தத்தை அளிப்பவனாகவும் ஈச்வரனாகவும் இருப்பவன்; மற்றொரு மேற்கோளின் பொருளாக தேவர்களுக்கும் தேவர்களான நித்ய சூரிகளுக்கும் தலைவன் என்றும் விளக்கமாக உரை வழங்குவது அறியற்பாலதாகும். இவ்விடத்தில் இந்த

மேற்கோள்களின் பொருள் விளக்கம் பயன்படுத்தப் பட்டது கருதத்தக்கது.

### 3.2.27.5 இராமாயணம் :

பெரியவாச்சான்பிள்ளைக்கு இராமாயணத்தில் அதிக ஈடுபாடு உள்ளமையை அறியும் வகையில் பால காண்டம் முதல் யுத்த காண்டம் வரை மேற்கோள்களைக் காட்டி உரை வழங்கியுள்ளதன் மூலம் அறியலாம்.

**சான்று** : 'மாயனை' என்ற பாடலில் 'தாயைக் குடல் விளக்கம் செய்த' என்ற தொடருக்கு இராமாயண பாலகாண்டத்தொடரைக் காட்டி உரை வழங்குகின்றார். தாயான யசோதைக்கு பெருமை சேர்க்கும் வகையில் வயிற்றில் தழும்பாலே யசோதையை விளங்கப் பண்ணினவன் என்று பொருள் கூறிவிட்டு, இதற்கு ஒப்புமையாக இராமனைப் பெற்றெடுத்த கௌசல்யை ஒளியுடையவளானாள் என்பதற்கேற்ப 'கௌசல்யா சுசுபே தேந புத்ரேணாமிததேஜஸா' என்று வால்மீகியினால் புகழப்பட்டதைக் காண்பிக்கிறார்.[119]

இவ்வாறு மற்ற காண்டங்கள் மூலமாக பொருள் விளக்கம் பெறவும், ஒப்புமை காட்டவும் பிள்ளையின் உரை சிறந்து விளங்குவதைக் காணலாம்.[120] இத்தகைய மேற்கோள்கள் வந்த வடமொழி நூல்களில் இராமாயணத்தை 89 இடங்களில் காட்டிச் சென்றது பிள்ளையின் ஆழ்ந்த புலமையைப் புலப்படுத்துகின்றது.[121] ஆண்டாளுடைய பக்தி நெறியை இராமாயண சுலோகத்தொடர்களைக் கொண்டு ஒப்பிட்டுக் காட்டும் வகை அறியற்பாலதாகும்.

### 3.2.27.6 மகாபாரதம் :

மகாபாரதத்திலிருந்தும் மேற்கோள் காட்டி உரை வழங்கியுள்ளார்.

**சான்று** : 'நோற்றுச்சுவர்க்கம்' என்ற பாடலில் 'புண்ணியன்' என்ற சொல்லுக்கு பொருள் விளக்கம்தரும் வகையில் கண்ணனையே பழமையான தர்மமாக அறிகிறார்கள் என்று ஆய்ச்சியர்களுக்கு உபாயமாக கண்ணன் இருக்கிறான் என்பதை 'கிருஷ்ணம் தர்மம் ஸநாநதம்' என்ற மகாபாரத சுலோகத்தை மேற்கோளாகக் காட்டுகின்றார். இவ்வாறு 14 இடங்களில் உள.[122]

### 3.2.27.7 பகவத் கீதை :

பாடலின் சொற்களுக்கு பொருள் விளக்கம் தரும் போது பகவத் கீதை கருத்துக்களையும் உரையில் வழங்கிச் செல்வதைக்காணமுடிகிறது. அந்த வகையில் நோன்புக்கு அங்கமாக செய்ய வேண்டியதையும் விடவேண்டியதையும் சொல்லும் '**வையத்து** வாழ்வீர்காள்' என்ற பாடலில் '**நெய்யுண்ணோம்** பாலுண்ணோம்' என்று எல்லாம் **கண்ணனாகவே** ஆய்ச்சியர்கள் எண்ணியிருப்பதை **உட்கொண்டு** 'வாசுதேவ: ஸர்வம்' என்கிறபடியே எல்லாம் **கண்ணனாக** நினைத்திருப்பதை கீதையின் முகமாக தெரிவிக்கிறார் உரையாசிரியர்.[123] இவ்வாறு பதினைந்து இடங்களில் கீதையின் தொடர்களைக் காட்டி உரை வழங்கியிருப்பதைக் காணலாம்.[124]

### 3.2.28 திவ்யப்பிரபந்த மேற்கோள்கள் :

பிள்ளையினுடைய பரந்துபட்ட அறிவுத்திறனை வெளிப்படுத்தும் வகையில் ஆண்டாள் அருளிய பாடல்களுக்குச் சான்றாகவும், ஒப்புமையாகவும், பொருள்விளக்கம் பெறவும் மற்ற ஆழ்வார்களுடைய பாடல்களை மேற்கோளாகக் காட்டுவர். அதே சமயத்தில் ஆழ்வார்கள் எல்லோரும் வெவ்வேறு காலத்தவராயினும் பேசிற்றே பேசும் ஏககண்டர்கள் ஆவர். அந்த வகையில் பதினெட்டு பிரபந்தங்களிலிருந்து 143 இடங்களில்

மேற்கோள்களாக கையாண்டுள்ளது குறிப்பிடத்தக் கதாகும்.[124(அ)] எடுத்துக்காட்டாக 'கீசு கீசு' என்ற பாடலில் 'காசும் பிறப்பும் கலகலப்ப' என்பதற்கு அச்சுத்தாலியும் ஆமைத்தாலியும் கடைகின்ற போது உராய்கின்ற ஒலியைக் குறிப்பிடுவதற்காக திருப்பாற்கடலை கடைந்த போது ஏற்பட்ட ஒலிக்கு ஈடாக, 'அரவூறு சுலாய் மலை தேய்க்கும் ஒலி' என்ற நம்மாழ்வார் பாடலின் தொடரை பொருளுக்குச் சேர உரைப்பர்.[125]

### 3.2.29 கருத்து (தாத்பர்யம்) உரைத்தல் :

தமிழ் இலக்கிய நூல்களில் அமைந்த பாடல்களுக்கு உரை வழங்குவது மட்டுமல்லாமல் உரையாசிரியர்கள் படிப்பவர்களின் கருத்துக்கேற்ப குறிப்பிட்ட பொருளைப் புரியும்படியாக ஆங்காங்கே கருத்துக்களை ஒருசேரப் பிடித்து தெளிவாக எடுத்துக்கூறுவர்.இத்தகைய நெறியை வைணவ நூல்களின் உரையாசிரியர்களும் கையாண் டுள்ளனர். பெரியவாச்சான் பிள்ளையும் திருப்பாவை பாடல்களுக்கு பொருள் வழங்குவதோடு நில்லாமல் ஒன்றுக்கு மேல் கருத்துக்கள் வழங்கி படிப்போருக்கு தெளிவை உண்டு பண்ணுவர். இத்தகைய நெறி 40 இடங்களில் அமைந்துள.[125(அ)] எடுத்துக்காட்டாக 'கூடாரை வெல்லும்' என்ற பாடலில் 'உன்தன்னைப்பாடி' என்பதற்கு இரண்டு கருத்துக்களை காட்டியுள்ளார். அதாவது உரிய தலைவனான உன்னை என்றும், இடையர்களுக்கு வல்லவனான உன்னை என்றும் இரண்டு கருத்துக்கள் குறிப்பிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.[126]

### 3.2.30 முன்னோர்களின் நயவுரைகள் :

வைணவ இலக்கியத்தில் ஆழ்வார் பாடல்களுக்கு நாதமுனிகள் காலம் தொடக்கமாக வாய்மொழியாக ஒரு ஆசாரியர் தம் சீடர்களுக்கு சொல்லிவந்த முறை ராமானுஜர்

காலம் வரை இருந்துவந்தது. இத்தகைய வாய்மொழிகள் அந்தந்த ஆசாரியர்களுடைய அனுபவத்திற்கு ஏற்ப வரலாற்றுச் செய்தியாகவும் (ஐதீகங்கள்) பொருளாட்சி யாகவும் (நிர்வாகங்கள்) அமைந்துள்ளன. இவற்றை எல்லாம் ஒருசேரத் தொகுத்து ஏடுபடுத்திய பெருமை 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நம்பிள்ளை என்னும் ஆசாரியரைச் சாரும். அவர் வழிவந்த பெரியவாச்சான் பிள்ளையும் நாலாயிரம் உரைகளிலும் ஆங்காங்கே சிறப்பாக ஆசாரியர்களின் வரலாற்றுச் செய்திகளையும் பொருளாட்சி களையும் எடுத்துக் காட்டியுள்ளார். அந்த வகையில் திருப்பாவை மூவாயிரப்படியில் சிறியாத்தான், எம்பெருமானார், திருவாய்மொழி சிறப்பு, கூரத்தாழ்வான், ஆசாரிய பக்தி, ராமானுஜரின் பெருமை, நஞ்சீயர், அவதாரத்தின் பெருமை, பேறு பெறுதல் ஆகியச் செய்திகள் பற்றி 10 இடங்களில் குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.[127] எடுத்துக்காட்டாக 'அன்று இவ்வுலகமளந்தாய்' என்ற பாடலில் எம்பெருமான் முன்பு செய்த அவதாரங்களான திருவிக்ரம, ராம, கிருஷ்ண அவதாரங்களுக்கு வாழ்த்து பாடுகிறாள். இந்த இடத்தில் பெரியவாச்சான்பிள்ளை ஆண்டாளின் திருத்தகப்பனாரான பெரியாழ்வார் எம்பெருமானுடைய ஒவ்வொரு ஆயுதங்களுக்கும் வாழ்த்து பாடினதை எடுத்துக்காட்டி (கதே ஜலே சேது பந்தம்) தகப்பனாருக்கும் (பெரியாழ்வார்) மகளுக்கும் (ஆண்டாள்) பணி என்று நஞ்சீயர் என்னும் ஆசாரியர் அருளியதை எடுத்துக்காட்டுவதன் மூலம் பிள்ளையின் ஆசாரிய பக்தியை அறிய முடிகிறது.[128]

இவ்வாறே ஆண்டாள் பாடலில் ஆழங்கால் பட்டு தமக்கு முன் இருந்த ஆசாரியர்களில் முக்கியமாக பட்டர், பிள்ளைப் பிள்ளையாழ்வான் ஆகியோர் பாடலுக்குக்

கொண்ட பொருளை பொருளாட்சியாக நான்கு இடங்களிலும் அமைத்ததைக் காணமுடிகிறது.[129] எடுத்துக்காட்டாக 'வங்கக்கடல் கடைந்த' என்ற பாடலுக்கு அவதாரிகை இடும் போது பிள்ளை ''கன்றிழந்த தலை நாகு தோற்கன்றுக்கும் இறங்குமாபோலே இப்பாசுரங் கொண்டு புக பலிக்கும்'' என்று பட்டர் ஈடுபட்ட பொருளாட்சியைச் சுட்டிக்காட்டுவர்.[130]

### 3.2.31 வரலாற்றுச் செய்திகளைக்காட்டி உரை வகுத்தல் :

பெரியவாச்சான் பிள்ளை பாடல்களில் உள்ள சொற்களுக்கு பொருள் வழங்கும்போது தெளிவாக அறியும் வகையில் வரலாற்றுச் செய்திகளை இணைத்துக் காட்டுவர். எடுத்துக்காட்டாக அங்கண்மாஞாலத்தரசர் என்னும் பாடலில் 'மாஞாலத்து அரசர்' என்னும் சொல்லுக்கு பெரிய பூமியில் உள்ள அரசர்கள் என்று பொருள் வழங்கி அந்த அரசர்கள் இப்பரப்பெல்லாம் என்னது என்று அபிமானம் பண்ணுவதைக் காட்டி இதைத் தெளிவுபடுத்தும் வகையில் கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனுடைய நண்பரான பௌண்ட்ரக வாசுதேவனைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அதாவது பௌண்ட்ரக வாசுதேவன் என்பவன் அறிவுள்ள பொருள் அறிவற்ற பொருள் ஆகிய எல்லாமாகிய நாராயணன் நானே என்று அனுகரித்தான். அவ்வாறே இம்மாஞாலம் எல்லாம் நாங்களே என்று அரசர்கள் அபிமானம் தோற்ற இருப்பதை இந்த வரலாற்றைக் காட்டி விளங்கச் செய்வது அறியற்பாலதாகும்.[131] இவ்வாறே நான்கு இடங்களில் வரலாற்றுச் செய்திகள்காட்டி உரை வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[132]

### 3.2.32 பண்டைய நாகரீகம் :

தமிழ் இலக்கிய நூல்கள் யாவும் அந்தந்த கால நாகரீக பழக்கவழக்கங்களைக்கொண்டு அமைந்துள்ளன.

அவற்றை இனங்கண்டு எடுத்து உரைப்பது எளிது. திருப்பாவையில் ஆண்டாள் ஆய்ப்பாடியினுடைய மக்களின் பழக்கவழக்கங்களைக் காட்டிச் செல்வதை பல பாடல்கள் மூலம் அறியலாம். இருப்பினும் அப்பாடல் களுக்கு உரை வழங்கிய உரையாசிரியர் அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த உலக வாழ்க்கையின் பழக்க வழக்கங்களைத் தொடர்பு படுத்தி பல செய்திகளை வழங்கியுள்ளார்.

### 3.2.32.1 தாயன்பு :

தூங்குகின்ற குழந்தையை தழுவிக் கொண்டு கிடப்பவள் தாய்.[133]

### 3.2.32.2 தொழில் :

மலைவாசிகள் மலையை அண்டை கொண்டு வாழ்வார்கள்.[134] சம்சாரிகள் காலம் உணர்த்த உணருமவர்கள்.[135]

### 3.2.32.3 சாதிப்பேச்சு :

மாணிக்கத்தால் படுக்கையைச் செய்தாலும் அதனை இடையர்கள் கட்டில் என்று சொல்லுவர்.[136]

### 3.2.32.4 வசீகரித்தல் :

ஒருவனை தன் வசப்படுத்துவதற்காக அம்மான் பொடி தூவுவர்.[137]

### 3.2.32.5 தாய் - பிள்ளை உறவு :

பிரிந்தால் தாய் பக்கலில் மக்கள் நிற்பர்.[138] பிச்சேறின குழந்தை தாய்முன்னே நின்றால் தாயைக் கொல்லும்; அவள் தூரத்தில் நின்றால் தன்னை முடித்துக்கொள்ளும்.[139] தாயை வெட்டுகிறவன் கைநொந்தால் அம்மா என்று

அழைப்பான்.[140] பிள்ளை தாயை வெறுத்து வெளியில் சென்றாலும் அவனறியாது அவனிருக்குமிடத்துச் சென்று இரவில் உணவு ஊட்டுவாள்.[141] பிள்ளைகளைத் தொட்டிலிலே இட்டு புல் பாய் இட்டு பூரித்து ஆயுதங்களைக்கொண்டு காப்பாற்றுவாள்.[142]

### 3.2.32.6 இயற்கை எழில் :

சூரியனைக் கண்டால் தாமரைப் பூ மலரும்.[143]

### 3.2.32.7 மிருகங்களின் தன்மை :

எருதினுடைய நடையில் வீறும், மதம் பிடித்த யானையினுடைய நடையில் மதிப்பும், புலியினுடைய நடையில் கோபமும், சிம்மத்தினுடைய நடையில் பராஅபிநவ சாமர்த்தியமும் தோற்றும்.[144]

### 3.2.32.8 மருத்துவம் :

அம்பினால் பட்ட புண்ணை மருந்து ஊட்டத்தீர்க்கலாம்.[145] ஒருசேர் பால் இனிய உணவாக பருகுமவனுக்கு பித்தம் தெளியும்.[146] தலையில் ஊற ஊற எண்ணை வைத்துக்குளித்தல்.[147]

### 3.2.33 உரிய பொருளை உணர்த்த உதாரணம் காட்டல் :

பாடல்களுக்கு உரையிடும் பொழுது சொற்களுக்கு உரிய பொருளை வழங்க அந்தப் பொருளின் பின்னணியில் இருக்கின்ற செய்தியை உதாரணத்துடன் காட்டுகின்றார். எடுத்துக்காட்டாக 'ஆழிமழைக்கண்ணா' என்ற சொல்லுக்கு 'கம்பீரமான தன்மையை உடைய மழைக்குத் தலைவனான வருணனே' என்று உரை வழங்கி இந்தப்பொருளை உணர்த்தும் வகையில் எம்பெருமானுடைய படைத்தல், அழித்தல், காத்தல் ஆகியவற்றை ஒவ்வொருவரைக் கொண்டு நடத்துமாபோலே உலகை ஈரக்கையாலே தடவி

காக்கவல்லவன் வருணன் என்று இறைவனால் மதிக்கப்பட்டவனானான். இதனால் மழைக்கடவுளின் பெருமை சொல்லப்பட்டதாயிற்று. இதுபற்றியே ஆண்டாளும் 'ஆழிமழைக்கண்ணா' என்று பெயரிடுவதை அறியமுடிகிறது.[148] இவ்வாறே 'கீழ்வானம்' என்ற பாடலில் ஆண்டாள் ஆய்ச்சியர்களோடு சேர்ந்து ஒரு பெண்பிள்ளையை எழுப்பும் போது அந்தப் பெண்பிள்ளையை தாண்டிச் செல்லாமல் தடுக்கின்றாள். இதற்குப் 'போவான் போகின்றானைப் போகாமற் காத்து' என்று பாசுரமிடுகிறார். இந்த இடத்தில் அர்ச்சிராதிகதி, அக்ரூரயானம், திருவேங்கட யாத்திரை போலே போவதே பயனாக ஆய்ச்சியர்கள் சென்றதைக் காட்டியது அறியற்பாலதாகும்.[149] இவ்வாறு 17 இடங்களில் உதாரணங்களைக் காட்டி உரியபொருளை நிறுவியுள்ளார்.[150]

### 3.2.34 சொல்லாட்சியைப் பயன்படுத்துதல் :

ஆண்டாள் பாடிய பாடல்களுக்கு உரை வழங்கும் போது உரிய பொருளை சொல்லுவதோடு மட்டுமல்லாமல் சொல்லை ஆள்வதில் பெரியவாச்சான்பிள்ளை தனக்கே உரிய உத்தியை உரையில் கையாண்டுள்ளதைக் காணலாம். எடுத்துக்காட்டாக 'தூமணி மாடத்து' என்ற பாடலில் ஒரு பெண்மணி கண்ணன் வரும்போது வருகிறான் என்று அநாதரித்துப் படுத்துக் கொண்டிருக்கிறாள். இக்காட்சியைக் கண்ட ஆண்டாள் 'தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய துயிலணை மேல் கண் வளரும்' என்று பாடுகிறாள். இந்த இடத்தில் மங்களமாக சுற்றிலும் விளக்கு எரிவது மட்டுமல்லாமல் 'தூபம் கமழ' என்பதற்குச் சேர புகை காணமுடியாதபடி பரிமளம் மிக்குயிருப்பதை அகிற்புகை கமழ்வதாக இருக்கிறது என்று உரையாசிரியர் காட்டுகிறார். அதாவது பரிமளத்திற்கு முக்கியத்துவம் அளித்து 'அகிற்புகை காணமுடியாதபடி' என்ற சொல்லாட்சியை

அழகாக அமைத்திருக்கிறார்.[151] இவ்வாறு 15 இடங்களில் சொல்லாட்சியை அமைத்திருப்பதைக் காணலாம்.[152]

### 3.2.35 தாம் உகந்ததை வெளிப்படையாகக் கூறல் :

பாடல்களுக்கு உரிய பொருளை வழங்குவது மட்டுமல்லாமல் தாம் உகந்த பொருளை வெளிப்படுத்தும் நெறியையும் பல இடங்களில் பின்பற்றியிருக்கிறார். எடுத்துக்காட்டாக 'அங்கண் மாஞாலம்' என்ற பாடலில் 'அங்கண்' என்பதற்கு தாமுகந்த பொருளை வழங்குகிறார். அதாவது இந்த பூமியானது பெரியதாகவும் அழகிய இடமுடையதாகவும் இருக்கை. இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்துகிறார். பிரமனுக்கும் தாம் அனுபவிக்கும் கருவிகளோடு அனுபவிக்கலாயிருக்கை; எறும்புக்கும் தான் அனுபவிக்கும் கருவிகளோடே அனுபவிக்கலாயிருக்கை என்று.[153]

இங்ஙனே 12 இடங்களில் காணலாம்.[154]

### 3.2.36 இலக்கணப் புலமை :

தமிழ் மொழிக்கு இன்றியமையாதது இலக்கண மாகும். இலக்கண முறையை ஒட்டி எழுதுவது உரையாசிரியர்களின் சிறப்பாகும். அவர்கள் தரும் இலக்கணக் குறிப்பு யாவையும் அருமையும் நுட்பமும் வாய்ந்தவை. அவை சொல், தொடர், யாப்பு, பொருள், அணி எனும் ஐந்து வகைப்பாட்டில் அமைந்துள்ளன. இவற்றை பின்பற்றியே உரையாசிரியர்கள் தமிழ் இலக்கிய நூல்களை உரையால்வளர்த்தனர். அவர்களைப் போலவே வைணவ இலக்கியங்களுக்கு வியாக்யானம் செய்த உரையாசிரியர்கள் இலக்கண நெறி பிறழாது தங்களுடைய புலமையை வெளிப்படுத்தும் வகையில் உரைகள்

செய்துள்ளனர். அவர்களுள் பெரியவாச்சான் பிள்ளையும் நல்ல இலக்கண புலமை வாய்ந்தவர். குறிப்பாக திருப்பாவைக்கு அமைந்த மூவாயிரப்படி உரையில் சொல், தொடர், அணி என்கிற மூன்று வகைப்பாட்டில் இலக்கண குறிப்பைக் காணமுடிகிறது.

### 3.2.36.1 இடைச்சொற்கள் :

இடைச்சொல்லானது வேற்றுமை, வினை, சாரியை, உவமம், உருபுகள், பின்னர் தத்தமக்கு உரிய பொருளை உணர்த்துவன, வேறுபொருளின்றி செய்யுளிசை நிறைத்தலே பொருளாக வருவன, அசைத்தலே பொருளாக நிற்பன, குறிப்பின் வருவன ஆகிய எட்டுத்தன்மை யுடையனவாகும். அவற்றில் பெரியவாச்சான் பிள்ளை உரையில் வேற்றுமை உருபுகள், தத்தமக்கு உரிய பொருளை உணர்த்தும் இடைச்சொற்கள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

### 3.2.36.2 ஏகார இடைச்சொல் :

பிள்ளை உரையில் இடைச்சொற்கள் தேற்றம், இசைவு, உறுதிப்பொருள், சிறப்புப்பொருள், வினா, வியப்பு, உயர்வு ஆகிய எழுவகைப் பொருளில் வந்துள்ளமை காணலாம்.

### 3.2.36.3 ஏகாரத் தேற்றப்பொருள் :

1. 'முலை வழியே' (பா.12) - கைவழி தவிர.

2. 'நாராயணனே' (பா.1) - ஸமிதை பாதி ஸாவித்ரி பாதியன்றிக்கே தானே சென்று தலைக்கட்ட வல்லனென்கிற உபாயத்தில் விருப்பமில்லாமை 'ஸாதந நைரபேக்ஷ்யம்' சொல்லுகையிலே நோக்கு.

### 3.2.36.4 ஏகார இசைவுப் பொருள் :

*'கீழே' (பா.22) -அந்த ராஜ்யங்களைக் கொடுத்துப் போங்கோளென்றாலும், பழைய எளிவரவை நினைத்து அவை வேண்டா என்று, உன் சிம்மாஸனத்தின் கீழே.*

### 3.2.36.5 ஏகார உறுதிப் பொருள் :

*'அடியே' (பா.29) 'ஸர்வாத்நா பர்யநுநீயமாநோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம்' என்னுமாபோலே.*

### 3.2.36.6 ஏகார சிறப்புப் பொருள் :

*'உனக்கே' (பா.29) - நீ உகந்த அடிமை செய்வோம்.*

### 3.2.36.7 ஏகார வினாப் பொருள் :

*'வல்லீர்கள் நீங்களே' (பா.15)உன் வாசலிலே வந்து எழுப்பு, சில்லென்றழை யேன்மின் என்றது - உன்னதன்றோ வெட்டிமை?*

### 3.2.36.8 ஏகார வியப்புப் பொருள் :

*1. 'நென்னலே'(பா.16) - உன் காலைப் பிடிக்க வேண்டுகிற இன்று போலேயோ அவன் காலைப்பிடிக்க இருந்த நென்னேற்றும் ஒருநாளே! என்கிறார்கள்.*

*2. 'அம்பரமே.......' (பா.17) - இதுவோ இவன் கற்றதென்னும்படி கொடுக்கை.*

### 3.2.36.9 அசை நிலைகள் :

*'உன்மணாளனை' (பா.20) என்ற சொல்லில் ஐகாரம் அசைவற்று உன்மணாளன் என்று வந்தது.*

*'நீராட்டு' (பா.20) என்பது நீராட்ட என்று அகாரம் கடை குறையாக வந்தது.*

**3.2.36.10 பெயரெச்சம் :**

*'உலகளந்த' (பா.17) - இருந்ததே குடியாக.*

*'ஓடாத தோள்வலியன்' (பா.18) - பிற்காலியாத தோள்வலிமை யுடையவன்.*

**3.2.36.11 ஈறுகெட்ட எதிர்மறை பெயரெச்சம் :**

*'கிருஷ்ணன் வளரா நின்றான்' (பா.25) - வளர்ந்தான்.*

**3.2.36.12 ஒருமை பன்மை மயக்கம் :**

*'கோழியழைத்தன காண்' (பா.18) - கோழி கூவா நின்றது.*

**3.2.36.13 போலிகள் :**

*நாயிறு (பா.3) - ஞாயிறு முதற்போலி.*

*ஆர் (பா.25) - யார் முதற்போலி*

*அஞ்சு உரு (பா.18) - ஐந்து உரு முதற்போலி*

*அஞ்சாம்பாட்டு (பா.5) - ஐந்தாம் பாட்டு இடைப்போலி*

**3.2.36.14 உம்மைப் பொருள் :**

*வேண்டற்பாட்டை<u>யும்</u> (பா.23) - 'உம்' நடையழகைச் சொல்லுகிறது.*

*வருத்த<u>மும்</u> (பா.25) - 'உம்' பிரிந்தாற்படும் பாடு அறிய உன்னை நீ பிரிந்தறியாயே.*

*சிறுபேரழைத்தன<u>வும்</u> (பா.28) - தாங்கள் அவனை வெறுத்த வெறுப்பும் தோற்றுகிறது. அவைகளுக்கும் மன்னிப்பு (க்ஷாமணம்) பண்ணுகிறார்கள். அறிவொன்றும் (பா.28) - பக்தியைக் காட்டுகிறது.*

**3.2.36.15 அடுக்குத்தொடர் :**

*இன்னபடியும் இன்னபடியும் (பா. 4)*

*தண்ணீர் தண்ணீர் (பா.10)*

*சிறுச்சிறிதே (பா.22) - ஸாத்மிக்க ஸாத்மிக்க*

**3.2.36.16 எதிர்மறை :**

*சென்று (பா.20) - நீ சென்று உதவக்கடவ உனக்கு, உன் வாசலிலே வந்த எங்களுக்கு உதவலாகாதோ?*

**3.2.36.17 கற்பனை :**

*ஊடு கயலுகள (பா.3) குவளைப்பூவிலே வண்டு மது அருந்தும் போது கயல்ஊடே - உகள, செந்நெல்லும் குவளையும் ஒக்க அசைந்து, தூங்குமெத்தையிலே உறங்கும் ராஜ புத்ரர்களைப்போல வாயில் மதுவோடே வண்டு உறங்குகிறது. இவ்வாறு 15 இடங்களில் கற்பனை நயம்பட உரைத்தது காணலாம்.*[155]

**3.2.36.18 பால் பகா அஃறிணை :**

*சிறுவீடு மேய்வான் (பா.8) - எருமை கன்றுகள் மேய்வதற்காக.*

**3.2.36.19 அணிகள் :**

*பிள்ளை உரையில் அணிகளும் சிறப்பாக இடம் பெற்று விளங்குகிறது. அவையாவன: தற்குறிப்பேற்றணி, உருவக அணி, உவமையணி, அபூத உவமையணி, உயர்வு நவிற்சியணி.*

**3.2.36.20 தற்குறிப்பேற்றணி :**

*'மத்தினால் ஓசைப்படுத்த தயிரரவம் கேட்டிலையோ' என்ற தொடருக்குச் சேர கண்ணனுடைய கண்ணழகில் தோற்றுப் பாடுகின்ற ஓசையும், தயிர் கடைகிற ஓசையும்,*

கழுத்தில் ஆபரணங்கள் உராய்கின்ற ஓசையும் கிளர்ந்து மேலுலகங்களுக்குச் சென்று கிட்டுவதான ஓசையும் உன் செவியில் படவில்லையே என்று உரையிட்டதின் வாயிலாக -குறிப்பாக ஓசையைப்பற்றிச் சொல்வதால் தற்குறிப்பேற்ற அணியாக அமைவதைக் காணலாம்.[156]

### 3.2.36.21 உயர்வு நவிற்சியணி :

'ஓங்குபெருஞ்செந்நெல்' என்ற தொடருக்குச் சேர விடிவோரை நட்டு அதாவது விடியற்காலையிலே நாற்றை நட்டு, சூரியன் மறையும் போது வந்து பார்த்தால் கைகுவித்து பார்க்க வேண்டும்படியாக இருத்தலால் உயர்வு நவிற்சியணியாக திகழ்வது எனலாம்.[157] இங்ஙனே 'சிறுவீடுமேய்வான்' 'பரந்தனகாண்'[159], 'பற்றி வாங்ககுடம் நிறைக்கும்'[159], 'கீழ்வானம்' ..... [160] 'கடைதிறவாய்'[161], 'ஏற்றகலங்கள்'[162] என்று உயர்வு நவிற்சியணி வந்துள்ளதை அறியலாம்.

### 3.2.36.22 உருவக அணி :

'பொற்கொடி' என்ற தொடருக்குச் சேர கணவனாகிற கொள் கொம்பு என்று பெண்ணைக் கொள் கொம்பாக உருவகப்படுத்தியதைக் காணமுடிகிறது.[163]

'ஊடு கயலுகள' என்ற தொடருக்குச் சேர யானைக்கன்றை கடல் மீன்களுக்கு உருவகப்படுத்தியதைக் காணலாம்.[164]

****

## இயல் - 3

### அடிக்குறிப்புகள் :

1. திருவாய்மொழி இருபத்துநாலாயிரப்படி உரை.
2. பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்
வேதமனைத்துக்கும் வித்தாகும் - கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.
3. ஸ்ரீமத் பாகவதம், ஸ்வாமி தபஸ்யானந்தர், பாகம் 3, காண்டம் 10, ப. 172 - 447.
4. நன்னூல் நூற்பா. 47.
5. பெரிய அரும்பத விளக்கம் ப.9.
6. வைணவ உரைவளம், ப.
7. பாவை, உரை அவதாரிகை, ப. 9.
8. பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த: (ரா.பா. 18-27.)
9. பாவை உரை அவதாரிகை, ப. 10.
10. மேலது ப. 10.
11. பாவை பா. 9, உரை ப.182.
12. பின்னிணைப்பு எண். 2, ப. 146.
13. பாவை உரை ப. 56.
14. பாசுரம் 3,5,6,9, 10, 21, 25, 26, 24,
15. இராமாயண சுந்தர காண்டம் 30-30
16. பாவை பா.9, உரை ப. 182.
17. பாவை பா.30 அவதாரிகை உரை ப. 530.
18. பாவை. பா. 17, 23 அவதாரிகை உரை. ப.296,392.
19. பாவை. பா. 10 அவதாரிகை உரை. ப.194.
20. பாவை. பா. 5, அவதாரிகை உரை. ப. 118
21. பாவை. பா. 5, அவதாரிகை உரை. பக்.117-118.
22. பாவை. பா. 25, அவதாரிகை உரை. ப.427.
23. பாவை. பா. 16, அவதாரிகை உரை. ப.235.
24. பாவை. பா. 16, பெ.அ. அவதாரிகை உரை. ப.275.

25. பாவை. பா. 1, அவதாரிகை உரை. ப.23.

26. பாவை. பா. 1, பெ.அ. ப.23, பா.28, பெ.அ. ப.477.

27. பாவை பா. 22, 23, அவதாரிகை ப. 391.

28. பாவை பா. 2, உரை பக்.7, பா. 17, உரை ப. 296,
பா. 18 உரை ப. 310, பா. 19, உரை ப. 331,
பா. 20 உரை ப. 350, பா. 29, உரை ப. 506.

29. பாவை பா. 6 உரை ப. 133.

30. பாவை. பா. 22, உரை ப. 382.

31. பாவை பா.1 உரை ப. 38,
பாவை பா.2, உரை ப. 68, பாவை பா.8, உரை ப. 170,
பாவை பா.9, உரை ப. 185, பாவை பா. 13, உரை ப. 240.

32. பாவை பா. 12, பெ. அ, உரை ப. 223.

33. பின்னிணைப்பு எண். 3, ப.153.

34. பாவை பா. 28 உரை ப. 483.

35. பாவை பா. 1,2,4, 5, 6, 7, 9, 13,15, 16, 17, 18, 19, 20, 21,
22, 24, 25, 27, 28, 29, 30. பின்னிணைப்பு எண். 4, ப. 158.

36. பாவை பா. 18, உரை, ப. 114.

37. பாவை பா. 1, நன்னாளால் உரை. ப. 26.

| | | |
|---|---|---|
| ,, | 2. | வையத்து வாழ்வீர்காள், ப. 59 |
| ,, | 6. | வெள்ளத்தரவில் துயிலமர்ந்த |
| ,, | | வித்தினை, ப. 143. |
| ,, | 11. | புற்றரவல்குல், ப. 211. |
| ,, | 13. | நன்னாளால், ப. 240. |
| ,, | 17. | உம்பர் கோமானே, ப. 299. |
| ,, | 18. | எத்தனையேனும் பிரிவாற்ற |
| ,, | | கில்லாயால், ப. 336. |
| ,, | 19. | குத்துவிளக்கெரிய, ப. 332. |
| ,, | 22. | வந்து தலைப்பெய்தோம், ப. 380. |
| ,, | 23. | ஆராய்ந்தருள், ப. 397. |
| ,, | 24. | சென்றங்கு, ப. 411. |

,, 25. ஓரிரவில், ப. 411.

,, 25. ஒளித்து வளர, ப. 430.

,, 27. நாடு இத்யாதி, ப. 461.

,, 27. உன்தன்னைப்பாடி ப. 461.

,, 28. ஆடையுடுப்போம், ப.468.

,, 28. புண்ணியம் நாமுடையோம், ப. 481.

,, 29. உன்னைச் சேவித்து, ப. 507.

38. பாவை பா. 23, மாரிமலை முழஞ்சில், உரை ப. 391.

39. பாவை. பா. 21, ஆற்றாது வந்து உன் அடி பணியுமாபோலே, உரை, ப. 368.

40. பாவை. பா. 115, நானேதானாயிடுக, உரை ப. 262.

41. பாவை பா. 27. நாடுபுகழும் பரிசினால் நன்றாக, உரை ப. 461.

42. பாவை பா. 3, தேங்காதே புக்கிருந்து, உரை ப. 88.

43. பாவை பா. 3, பெரும் பசுக்கள், உரை ப. 89.

44. பாவை பா. 28, அறிவொன்றும் இல்லாத, உரை ப. 479.

45. பாவை பா. 21, உலகினில் தோற்றமாய், உரை ப. 367.

46. பாவை பா. 2, பாற்கடலில் பையத்துயின்ற பரமனடி பாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்.
பா. 3, வள்ளல், பா. 4, ஊழி முதல்வன்
பா. 5, தூயோமாய் வந்துநாம், பா. 6, வெள்ளை விளிசங்கு
பா. 7, கீசு கீசு, பா. 12, நின்று பால் சோர,
பா. 18, பந்தார் விரலி, உன் மைத்துனன் பேர்பாட
பா. 26, மார்கழி நீராடுவான், வேண்டுவன கேட்டியேல், விதானம்,
பா. 23, யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள்
பா.11 சுற்றும் இத்யாதி, எற்றுக்கு உறங்கு பொருள்.

47. பாவை பா. 2, அடிப்பாடி ப. 63.

48. திருவாய்மொழி 6-2-1, 36 படி.
49. பாவை பா. 6, புள்ளும் சிலப்பினகாண், பா. 7, அவதாரிகை, பா. 8, கீழ்வானம், எருமை பரந்தனகாண், பா. 14, உங்கள் புழக்கடை, பா. 16, தாள்திறவாய், பா. 18 பலகால் கூவினகாண், பா. 23, நீ பூவைப் பூவண்ணா, பா. 26, மாலே மணிவண்ணா.
50. தமிழ் லெக்ஸிகன் பகுதி ப. IV 2258.
51 தமிழ் லெக்ஸிகன் பகுதி ப. II 1114.
52. பாவை பா. 17, அவதாரிகை ப. 296.
53. பாவை. பா. 1, மார்கழித்திங்கள், பா. 4, அவதாரிகை பா.5, தூவி, பா. 6, அவதாரிகை, பா. 17, அவதாரிகை, பா. 18, ஓடாத தோள்வலியன்.
54. தமிழ் லெக்ஸிகன் பகுதி ப. V 3925.
55. பாவை உரை அவதாரிகை சி.அ. ப. 10.
56. பாவை பா. 1, உரை ப. 25
57. சைத்ர ச்ரிமாந் அயம் மாஸ :...................... ஸர்வமேவோபகல்ப்யதாம் (ரா.அ. 3-4)
58. பின்னிணைப்பு எண். 5, ப. 169.
59. பாவை பா. 5 மாயனை, உரை பக். 119-120.
60. பாவை பா. 1, மார்கழித்திங்கள், உரை, ப. 34, பாவை, பா, 5 மன்னு வடமதுரை, உரை ப. 120.
61. நன்னூல் நூற்பா. 14.
62. பாவை. பா. 1, உரை ப. 27.
63. பின்னிணைப்பு எண். 6, ப. 171.
64. பாவை பா. 19, உரை ப. 336.
65. பாவை பா. 1, உரை ப. 30.
66. பாவை பா. 1, உரை ப. 34.
67. பாவை பா. 2, உரை ப.58.
68. பாவை பா. 2, உரை ப. 67.
69. பாவை பா.5, உரை ப. 58.

70. பாவை பா. 25, உரை ப. 427.

71. பாவை பா. 24, உரை ப. 412.

71.(அ) பின்னிணைப்பு எண். 7, ப. 179.

72. பாவை பா.1, நன்னாளால், உரை ப. 26

73. மேலது பா. 1, நீராட, உரை ப. 27

74. மேலது பா. 1, நீராட, உரை ப.28.

75. மேலது பா.1, போதுமினோ, உரை ப. 29.

76. மேலது பா.2, செல்வம், உரை ப. 31

77. மேலது பா. 2, கேளீரோ, உரை ப.61.

78. மேலது பா. 2, செய்யாதன செய்யோம், உரை ப. 67.

79. மேலது பா. 4, அவதாரிகை உரை ப. 100

80. மேலது பா. 5, வந்துநாம், உரை ப. 123

81. மேலது பா. 6, புள்ளும் சிலம்பினகாண், உரை ப. 143

82. மேலது பா. 8, கீழ்வானம், உரை ப. 169.

83. மேலது பா. 10, மாற்றமும், உரை ப. 197.

84. மேலது பா. 18, பந்தார் விரலி, உரை ப, 314

85. மேலது பா. 1, செல்வம், ப. 31.

86. மேலது பா. 2, செய்யாதன செய்வோம், உரை ப. 67.

87. மேலது பா. 5, தாமோதரனை, உரை ப. 123.

88. மேலது பா. 29, சிற்றஞ்சிறு காலே, உரை ப. 506

89. மேலது பா. 6, சி,அ. உரை, ப. 143

90. மேலது பா. 7, சி.அ. உரை, ப. 159

91. மேலது பா. 8, சி.அ. உரை ப. 173

92. மேலது பா. 10, சி.அ. உரை ப. 199

93. மேலது பா. 11, சி.அ. உரை ப. 213

94. மேலது பா. 9, சி.அ. உரை ப. 185

95. மேலது பா. 15, சி.அ. உரை ப. 264

96. மேலது பா. 14, சி.அ. உரை ப. 252

97. மேலது பா. 13, சி.அ. உரை ப. 240

98. மேலது பா. 12, சி.அ. உரை ப. 226

99. தொல். உவமையியல் நுற்பா. 1

100. பின்னிணைப்பு எண். 8, ப. 185.

100. (அ) மேலது ப. 185.

101. பாவை பா.21, உரை ப.294

102. பின்னிணைப்பு - எண். 8, ப. 185.

103. மேலது எண். ப.185.

104. பாவை பா.12, உரை ப.223

105. பின்னிணைப்பு - எண். 8, ப. 185.

106. பாடல் 6, உரை ப.142

107. பாடல் 5, உரை ப. 118

108. பாவை பா.29, உரை ப.436

109. பின்னிணைப்பு - எண். 8, ப. 185.

110. உரை அவதாரிகை ப.10

111. பாவை பா.9. உரை ப.182

112. பாவை பா.9. மாமான் மகளே, உரை ப.183
பாவை பா.9 அவதாரிகை, உரை ப.182
பாவை பா. 14 அவதாரிகை, உரை ப. 250
பாவை பா.16 தூயோமாய் வந்தோம், உரை ப. 279
பாவை பா.18 நந்தகோபாலன் மருமகளே, ப. 312
பாவை பா.21 ஏற்ற கலங்கள், உரை ப.364
பாவை பா.21, அவதாரிகை, உரை ப. 368
பாவை பா. 24 அடி போற்றி, உரை ப. 410
பாவை பா.27 பறைகொண்டு, உரை ப.461
பாவை பா.27, உன்தன்னைப்பாடி, உரை ப.462
பாவை பா.28 அவதாரிகை, உரை ப.478

113. பின்னிணைப்பு எண். 9, ப. 196.

114. பாவை பா.3, யஜுர் வேதம் கா.7.5.44

115. பாவை பா.5, சாந். 5-24-3.

116. பதினெட்டு இடங்கள் : 1. நாராயணனே (1), 2. உய்யுமாறெண்ணி (2), 3. அவதாரிகை (3), 4. தீயினில் தூசாகும் (5), 5. மனத்தினால் சிந்திக்க (5), 6. அரியென்ற (6), 7. அவதாரிகை (10), 8, அவதாரிகை

(10), 9. கந்தம் கமழும் குழலீ (18), 10. மாதவிப் பந்தல் மேல் (18), 11. மேலேறி (19), 12. படைத்தான் மகன் (21), 13. பெரியாய் (21), 14. பிறந்து (25), 15. மார்கழி நீராடுவான் (26), 16. குளிர்ந்து (27), 17. பட்டர்பிரான் கோதை சொன்ன (30), 18. நன்றாக (27).

117. 20 இடங்கள்.
1. அவதாரிகை 2. நன்னாளால் (1), 3. நேரிழையீர் (1) 4. நாம்முடியோம் (2), 5. அவதாரிகை (5), 6. தேவாதிதேவனை (8), 7. தூய (5), 8. தூய (5), 9. தோன்றும் (5), 10. மெள்ள எழுந்து (6), 11. மல்லரை மாட்டிய (8), 12. தேவாதி தேவனை (8), 13. பாட (14), 14. மணிக்கதவம் தாள்திறவாய் (16), 15. உம்பியும் நீயும் உறங்கேல் (17), 16. மலர்மார்பா (19), 17. கப்பம் தவிர்க்கும் (20), 18. ஒருத்தி மகனாய் (25), 19. ஒருத்தி மகனாய் (25), 20. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் (29)

118. பாவை பா. 8 உரை ப. 172

119. பாவை பா.5, பிள்ளை உரை ப. 122

120. பின்னிணைப்பு எண். 9, ப. 196.

121. 1. அவதாரிகை (1), 2. அவதாரிகை (1), 3. அவதாரிகை (1), 4. மார்கழித் திங்கள் (1), 5. மார்கழித் திங்கள் (1), 6. மார்கழித் திங்கள் (1), 7. போதுமினோ (1), 8. செல்வச் சிறுமீர்காள் (1), 9. செல்வச்சிறுமீர்காள் (1), 10. செல்வச்சிறுமீர்காள் (1), 11. சிறுமீர்காள் (1), 12. வையத்து வாழ்வீர்காள் (2), 13. கேளீரோ (2), 14. நாட்காலே நீராடி (2), 15. செய்யாதன செய்யோம் (2), 16. உத்தமன் (3), 17. தீங்கின்றி நாடெல்லாம் (3), 18. தீங்கின்றி நாடெல்லாம் (3), 19. ஓங்கு பெருஞ்செந்நெலூடு கயலுகள (3), 20. நீங்காத செல்வம் நிறைந்து (3), 21. பாழிஅம்தோள் (4), 22. சார்ங்கமுதைத்த (4), 23. சரமழை (4), 24. மாயனை (5), 25. தாயைக்குடல் விளக்கஞ் செய்த (5), 26.

தூயோமாய் வந்துநாம் (5), 27. வந்துநாம் (5), 28. வந்துநாம் (5), 29. வாயினால்பாடி (5), 30. புள்ளரையன் இத்யாதி (6), 31. புள்ளரையன் (6), 32. பாடவும் நீ கேட்டே கிடத்தியோ (7), 33. வந்து (8), 34. நின்றோம் (8), 35. பாவாய் (8), 36. ஆவாவென்று ஆராய்ந்து அருளும் (8), 37. அவதாரிகை (9), 38. சுவர்க்கம் புகுகின்ற (10), 39. அம்மனாய் (10), 40. மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார் (10), 41. பண்டொருநாள் கூற்றத்தின் வாய் வீழ்ந்த (10), 42. தேற்றமாய் வந்துதிற (10), 43. கற்றுக்கறவை (11), 44. கணங்கள் பல (11) 45. சென்று செருச்செய்யும் (11), 46. கோவலர்தம் பொற்கொடியே (11), 47. போதராய் (11) 48. நின்று பால்சோர (12), 49. தங்காய் (12), 50. தென்னிலங்கைக் கோமானை (12), 51. பொல்லா அரக்கனை (13), 52. சினத்தினால் (12), 53. மனத்துக்கினியானை (12) 54. பொல்லா அரக்கனை (13), 55. கீர்த்தியை (13), 56. நாவுடையாய் (14), 57. நானேதான் ஆயிடுக (15), 58. மாற்றாரை மாற்றழிக்க வல்லானை (15), 59. துயிலெழப் பாடுவான் (16), 60. வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே (16), 61. வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே (16), 62. உறங்காதெழுந்திராய் (17), 63. நந்தகோபாலன் மருமகளே (18) 64. செந்தாமரைக்கையால் (18), 65. கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா (19), 66. மைத்தடங்கண்ணினாய் (19), 67. உன்மணாளனை (19),68. தகவு - தத்துவமன்று (19), 69. எம்மை (20), 70. நீராட்டு (20), 71. மாற்றார் இத்யாதி (21), 72.மாற்றார் இத்யாதி (21), 73. கூடாரை வெல்லும் (27), 74. யாம் வந்தோம் (21), 75. சங்கமிருப்பார் போல் (22), 76. வந்து

தலைப்பெய்தோம் (22), 77. வந்துதலைப் பெய்தோம் (22), 78. அங்கணிரண்டுங் கொண்டு (22), 79. அவதாரிகை (23), 80. உன்கோயில் நின்று இங்ஙனே போந்தருளி (23), 81. யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள் (23), 82. யாம் வந்த காரியம் ஆராய்ந்தருள் (23), 83. பொன்ற .....போற்றி (24), 84. திருத்தக்க செல்வமும் (25), 85. சீர் (27), 86. யாம்பெறு சம்மானம் (27), 87. நன்றாக (27), 88. புண்ணியம் நாமுடையோம் (27), 89. உன்னைச் சேவித்து (29), உன் பொற்றாமரை அடியே (29).

122. 14 இடங்கள் : 1. நீராட (1), 2. கதிர்மதியம் போல் முகத்தான் (1), 3. நாராயணனே (1), 4. கேளீரோ (2), 5. தொழுது (5), 6. அவதாரிகை (6), 7. புண்ணியன் (10), 8. புற்றரவல்குல் (11), 9. சினத்தினால் (12), 10. வாய்நேர்ந்தான் (16), 11. போந்தருளி (23), 12. புண்ணியம் நாமுடைவோம் (28), 13. உன்தன்னோடு உற்றோமே யாவோம் (29), 14. உன்தன்னோடு உற்றோமே யாவோம் (29).

123. பாவை பா. 2, பகவத் கீதை 7-19.

124. பதினைந்து இடங்கள் : 1. மார்கழித் திங்கள் (1), 2, நன்னாளால் (1), 3. நன்னாளால் (1), 4. கேளீரோ (2), 5. பாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம் (2), 6. செய்யாதன செய்யோம் (2), 7. எண்ணியுகந்து (2), 8. அவதாரிகை (3), 9. வலம் புரிபோல் நின்றதிர்ந்து (4), 10. குற்றமொன்றில்லாத (11), 11. ஓடாத தோள்வலியன் (18), 12. வாய்திறவாய் (19), 13. சுடரே (21), மேலையார் செய்வனகள் (26), 15. அன்பு (28)

124. (அ) பின்னிணைப்பு எண். 10, ப.231.

125. பாவை உரை ப.156, திருவாய்மொழி 7-4-2.

125. (அ) பின்னிணைப்பு எண். 11, ப. 248.

126. பாவை பா.27, உரை ப. 461

127. பாவை பா.1, சிறியாத்தான் உரை ப.32
(ஆ) 12, எம்பெருமானார், உரை ப.226 (இ) பாவை பாடல் 15, திருவாய்மொழி சிறப்பு உரை ப. 26, (ஈ) பாவை பாடல் 15, கூரத்தாழ்வான், உரை ப.263, (உ) பாவை பாடல் 18, ஆசாரிய பக்தி உரை ப. 315, (ஊ) பாவை பாடல் 22, ராமானுஜரின் பெருமை, உரை ப. 397, (எ) பாவை பாடல் 24 நஞ்சீயர், உரை ப. 413 (ஏ) பாவை பாடல் 27, இராமாவதார நிகழ்ச்சி, உரை ப. 461, (ஐ) பாவை பாடல் 27 கண்ணன் சிறப்பு, உரை ப. 463, (ஒ) பாவை பாடல் 30. பேறு பெறுதல், உரை ப.534

128. பாவை பா. 23 உரை ப. 413.

129. பாவை பா. 1 பட்டர், உரை ப.35 (அ) பாவை பா. 6, பிள்ளைப் பிள்ளையாழ்வான் (ஆ) பாவை பா. 30, பட்டர் ப. 530, உரை ப. 531,

129. (அ) பட்டர் - பாவை பா. 1, உரை ப. 35, பாவை பா. 30, உரை ப. 530; 531 பின்னிணைப்பு எண். 12 (அ) ப. 256.
(ஆ) பிள்ளைப்பிள்ளையாழ்வான் - பாவை பா. 6, உரை ப. 138 பின்னிணைப்பு எண். 12 (ஆ) ப. 259.

130. பாவை பா. 30 உரை ப. 530

131. பாவை பா. 22, மாஞாலத்தரசர் ப. 379

132. (அ) பாவை பா.5, மன்னுவடமதுரை - மதுரையின் பெருமையை வாமனவதாரம் கொண்டு சொல்லுதல். (ஆ) பாவை பா.7, மத்தினால் ஓசைபடுத்த - திருப்பாற்கடலைக் கடைந்தது. (இ) பாவை பா. 15 மாற்றாரை மாற்றழிக்க வல்லானை - சாணூர முஷ்டிகாதிகளைக் கொன்றது. (ஈ) பாவை பா. 27, உன்தனைப்பாடி - நாராயணன் நாமத்தின் பெருமை.

133. பாவை பா. 17, உலகளந்த

134. பாவை பா. 19, கொங்கை

135. பாவை பா. 23, அறிவுற்று
136. பாவை பா. 19, கட்டில்
137. பாவை பா. 9, மந்திரப்பட்டாளோ
138. பாவை பா. 18, உன்மைத்துனன் பேர்பாட
139. பாவை பா. 25, ஒளித்து வளர, உரை ப. 430
140. பாவை பா. 3. உத்தமன் பேர், உரை ப. 85
141. பாவை பா. 4, ஆர்த்து, உரை ப. 103
142. பாவை பா. 4, உரை ப. 105
143. பாவை பா. 22, கிங்கிணிவாய்ச்செய்த, உரை ப. 381
144. பாவை பா. 23, இங்ஙனே போந்தருளி ப. 395
145. பாவை பா. 27, சீர் உரை ப. 460
146. பாவை பா. 5, அவதாரிகை, உரை ப. 119
147. பாவை பா. 3, திங்கள் மும்மாரி பெய்து, உரை ப. 86
148. பாவை பா. 4, உரை ப. 162
149. பாவை பா. 8, உரை ப. 170 அர்ச்சிராதிகதி - இங்கிருந்து பரமபதம்செல்பவன் அர்ச்சிராதிகதி மார்க்கமாகச் செல்லுவது. அக்ரூரயானம் - கம்சனால் அனுப்பப்பட்ட அக்ரூரர் புறப்படும் பொழுதிலிருந்தே கண்ணனைக் காண்பதிலே ஆர்வமுடன் இருந்தான். திருமலையாத்திரை - திருவேங்கடயாத்திரை செய்பவர்கள் புறப்படுவதே பயனாகக்கொள்வர்கள்.
150. பாவை பா. 1, மார்கழித் திங்கள், உரை ப. 24
பாவை பா. 1 நன்னாளால், உரை ப. 26
பாவை பா. 1, மதிநிறைந்த, உரை ப. 26
பாவை பா. 1, நேரிழையீர், உரை ப. 29
பாவை பா. 1, செல்வச்சிறுமீர்காள், உரை ப. 31
பாவை பா. 4, ஆழிமழைக்கண்ணா, உரை ப. 102
பாவை பா. 4, பாழிஅம்தோள், உரை ப. 104
பாவை பா. 8, போவான் போகின்றானா, உரை ப. 170
பாவை பா. 8, வந்து, உரை ப. 170

பாவை பா. 11, கற்றுக்கறவை, உரை ப. 210
பாவை பா. 11, கணங்கள் பல, உரை ப. 210
பாவை பா. 13, கீர்த்திமை, உரை ப. 237
பாவை பா. 25, ஓரிரவில், உரை ப. 429
பாவை பா. 25, ஒளித்துவளர, உரை ப. 430
பாவை பா. 26, மாலே உரை ப. 444
பாவை பா. 27, சூடகமே உரை ப. 462
பாவை பா. 29, மற்றை நம் காமங்கள் மாற்று, உரை ப. 510
பின்னிணைப்பு எண். 13, ப.260 காண்க.

151. பாவை பாடல் 9, உரை ப. 183
152. பா.1 ப.26, பா.5 ப.120, பா. 9. ப. 183, பா.9 184, பா. 13 ப. 236, பா. 17, ப. 299, பா. 17 ப. 299, பா. 19. ப. 334, பா. 19 ப. 335, பா. 23 ப. 393, பா. 24 ப. 411, பா. 24 ப. 412, பா. 28. ப. 480, பா. 28 பக். 480.
பின்னிணைப்பு எண். 14, ப.263 காண்க.
153. பாவை பா.22, உரை ப. 378
154. பா.8 ப. 170, பா.8, ப. 170, பா.12 ப. 224, பா.12 ப. 226, பா. 12 223, பா. 13. ப. 240, பா. 14, ப. 252, பா. 22, ப. 378, பா. 24 ப. 410, பா. 24, 411, பா. 24, ப. 414, பா. 27. பா.463.
155. பின்னிணைப்பு எண். 15, ப. 265.
156. பாவை பா. 7 , உரை ப. 157
157. பாவை பா. 3, உரை ப. 87
158. பாவை பா. 8 , உரை ப. 170
159. பாவை பா. 3, உரை ப. 89
160. பாவை பா. 8, உரை ப. 169
161. பாவை பா. 18, உரை ப. 313
162. பாவை பா. 21, உரை ப. 364
163. பாவை பா. 11.
164. பாவை பா. 3, உரை ப. 87.

# இயல் - 4

# சமயக் கருத்துக்கள்

## 4.0 வைணவ சமய அடிப்படைத் தத்துவம் :

வைணவ சமயத்திற்கு அடிப்படையாக அறியவேண்டியது தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்பவையாகும். தத்துவமாவது சித்து என்கிற அறிவுள்ள பொருளும், அசித்து என்கிற அறிவற்ற பொருளும், இவற்றை உடலாகக் (சரீரமாக) கொண்ட இறைவனாகிய உண்மைப் பொருளுமாகும். ஹிதமாவது உபாயம். புருஷார்த்தமாவது பெரும்பேறு. அறிவுள் பொருள், அறிவற்ற பொருள், இறைவன் என்று மூன்று தத்துவங்களோடு உபாயம், பேறு ஆகிய இரண்டு தத்துவங்களையும் சேர்த்து அர்த்த பஞ்சகம் எனப்படுகிறது. முப்பொருள்களுள் அறிவுள் பொருளாகிய ஆத்மாக்கள் உய்யும் பொருட்டு பரம்பொருளான இறைவனை உள்ளபடி அறிந்து அவனையே நெறியாகப் பற்றி அவனுகப்புக்கே ஆட்பட்டு அடிமை செய்யவேண்டும். இதற்காக அறிய வேண்டிய பொருள்கள் அர்த்த பஞ்சகமான ஐம்பெரும் பொருள்களாகும். இந்த ஐம்பெரும் பொருள்கள் ஹாரீத ஸ்ம்ருதியில் கூறப்பட்டுள்ளது.[1] மேலும் பட்டர் "திருவாய்மொழி அர்த்த பஞ்சகத்தின் விளக்கமாகும்" என்பதற்கேற்ப ஒரு தனியனை அமைத்துள்ளார்.[2]

ஆக, இவ்வைம்பொருள்களான இறை நிலை, உயர்நிலை, தக்கநெறி, தடை, பேறு ஆகியவற்றை பிள்ளை தம் உரையில் சுருக்கமாகக் காட்டியுள்ளார். 'உனக்கு சேஷமாயிருக்கிற இந்த ஆத்மா

அநர்த்தப்படாதபடி பண்ணி, இதுக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களைக் கொடுத்து,அதுதானும் யாவதாத்மபாவியாம்படி பண்ணியருளவேணும்' என்ற விருப்பத்தைக் காட்டுகின்றார்.[3] இதில் 'உனக்கு' என்பதினால் இறைநிலையையும், 'சேஷமாய் இருக்கிற இந்த ஆத்மா' என்பதினால் உயிர்நிலையையும் 'அநர்த்தபடாதபடி பண்ணி' என்பதனால் தடையையும், 'இதுக்கு ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களைக் கொடுத்து யாவதாத்ம பாவியாம்படி பண்ணியருள வேணும்' என்பதினால் தக்க நெறியையும் பேற்றின் இயல்பையும் அறியமுடிகிறது. இவற்றின் விளக்கமாக உரையில் ஐந்து நிலைகள் பற்றியும் காணலாம்.

### 4.1 இறைநிலை :

விஷ்வக்ஸேந ஸம்ஹிதையில் இறைவனுடைய நிலைகள் ஐந்தாகச் சொல்லப்படுகின்றன.[4] அவையாவன: பரம் (விண்ணாட்டு நிலை) வ்யூகம் (அணிவகுப்பு நிலை), விபவம் (பிறப்பு நிலை), அந்தர்யாமி (உள்ளுறை நிலை), அர்ச்சை (மூர்த்தி வழிபடு நிலை).

### 4.1.1 விண்ணாட்டு நிலை (பரம்) :

இவற்றுள் விண்ணாட்டு நிலை (பரம்) பற்றி ஆண்டாள்பாடிய பாடல்களுக்கு ஏற்ப சிறப்பாக பிள்ளைஉரை வழங்கியிருப்பதைக் காணமுடிகிறது.

விண்ணாட்டு நிலையாவது பரமபதத்தில் இறைவன் எழுந்தருளியிருக்கும் நிலையைச் சொல்லுவதாகும். அந்த பரமபதத்தில் இறைவனின்

மேன்மைகளைக் காணலாமே தவிர கருணை முதலான குணங்களைக் காணமுடியாது என்பர்.[5]

பரமபதத்தில் இருக்கும் இறைவனைஆண்டாள் 'மாயன்' என்று சொல்கிறாள். இதற்கு ஏற்ப பரமபதத்தில் அயர்வறுமமரர்களுக்குத் தலைவனாய் தன் செல்வங்களின் வாசி தோற்ற இருக்கும் இருப்பை நினைத்து அதுதான் வாக்குக்கு எட்டாதபடியாக இருக்கையாலே ''மாயன்'' என்று ஆண்டாள் கூறியதாகப் பிள்ளை அநுபவிப்பர்.[6]

இத்தகைய எம்பெருமான் பரமபதத்தில் அடங்காத வஸ்து என்று ''சீர்மல்கும் ஆய்ப்பாடி'' என்ற தொடருக்குச்சேர உரைப்பர்.[7]

இத்தகைய எம்பெருமான் பிராட்டியோடு கூடி மேன்மைக்குத் தகுதியான தேச விசேஷத்தை (தலப்பெருமையை) உடையவன் என்று 'மாதவன் வைகுந்தன்' என்ற தொடருக்குச் சேர உரைப்பர்.[8]

மேலும் எங்கும் பரந்திருக்கும் தன்மைக்குப் பயனாக வேண்டிய இடத்தே தோற்ற வல்லவன் என்பதை 'நாராயணன்' என்ற சொல்லுக்கேற்ப உரைப்பர்.[9]

அந்த எம்பெருமான் ஸம்ஸாரிகளைப் போல பிறக்கப்பிறக்க கறையேறுகை அன்றிக்கே, சாணையில் இட்ட மாணிக்கம் போலே ஒளியுடன் இருப்பான் என்பதை 'சுடரே' என்ற சொல்லுக்குச்சேர உரை வழங்குவர்.[10]

இப்படிப்பட்டஎம்பெருமான் எல்லாருக்கும் தலைவனாய் இருந்து அவரவர்களுடைய விருப்பங்களைத் தலைக்கட்டிக் கொடுப்பவன் என்றும்,

நாம் இசையாத போதும் அவன் விடமாட்டாத தாயன்பு (வாத்ஸல்யம்) உடையவன் என்றும் 'நாராயணனே நமக்கே' என்பதற்குச் சேர உரைப்பர்.[11] அதே சமயத்தில் நம்மிடத்திலிருந்து எதையும் எதிர்பார்த்து செய்வதன்றிக்கே தானே சென்று தலைக்கட்ட வல்லவன் என்று குறிப்பிட்டதையும் அறியலாம்.[12] இறைவன் உலகைக் கூட்டாக படைப்பவன் என்பதைத் தெரிவிக்கும் வகையில் நெடுநாள் தன் பக்கலிலே சேர்ந்துகிடந்த உலகைத் தன் பேறாக எண்ணி உலகத்தை படைக்கச் செய்தான் என்பதை 'ஊழி முதல்வன்' என்பதற்குப் பொருளாக உரைப்பர்.[13] இதனால் ஒரு சேர்ந்த படைப்பு (சமஷ்டிஸ்ருஷ்டி) சொல்லப் பட்டதாகிறது. எனவே இறைவன் உலகப் படைப்புக்குக் காரணமானவன் என்றபடி. அந்த எம்பெருமானே தன் இயல்புக்குச் சேர பாதுகாப்பதை விதிக்கிறான் என்று 'ஆழிமழைக்கண்ணா' என்ற தொடர்மூலம் உணர்த்துகிறார்.[14] எம்பெருமான் சேதனன் அஞ்சலி பண்ணுவதை பொறுக்க மாட்டாதவன்;[15] சேதனனுடைய வருத்தத்திற்கு முற்பட்டவனாய் எம்பெருமான் காக்கும் இயல்பினன்;[16] எம்பெருமான் பிராட்டியோடு கூடியிருக்கும் தன்மையைத் தவிர்த்தாலும் (ப்ரணயித்வம்போனாலும்) துக்கப்பட்டவர்களைக் காப்பதில் தவிர மாட்டாதவன்;[17] பிராட்டியோடு கூடியிருப்பவன்.[18]

### 4.1.2 அணிவகுப்பு நிலை (வ்யூகம்) :

அணிவகுப்பு நிலை என்பது திருப்பாற் கடலிலே பள்ளி கொண்டிருக்கும் நிலையாகும். துக்கப்பட்ட வர்களைக் காப்பதற்காக பரம பதத்திலிருந்து திருப்பாற்கடலினின்றும் ஒருபயணம் எடுத்துக்

கொண்டு உலகைக் காக்கும் சிந்தையிலே ஊக்கமுடைவனாய் கூக்குரலுக்கு செவி கொடுத்துக் கொண்டு கிடக்கிறான் என்றும் வெள்ளை வெளேரென்று இருக்கின்ற பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே கள்ளநித்திரை கொள்கின்றவன் என்றும் உரைப்பர்.[19] அதுமட்டுமன்றி பிராட்டியோடு சேர்ந்து அநுபவிப்பதற்கு இடம்கொடாமல் யாராலே யாருக்கு என்ன நலிவு வருகின்றது என்று அதிலே ஊக்கமுடையவனாய் சாய்ந்திருக்கிறான் என்று எம்பெருமானுடைய காக்கும் தன்மையை 'பையத்துயின்ற' என்ற சொல்லுக்குத் திறம்பட உரைப்பதுகுறிப்பிடத்தக்கதாகும்.[20] மேலும் 'பரமன்' என்ற சொல்லுக்கு ஏற்ப வெள்ளியில் அழுத்தின மாணிக்கம் போலே பாம்பின் மேலே சாய்ந்து அதனால் இறைவடிவில் பிறந்த புகரின் பெருமையை எடுத்துரைப்பர்.[21] 'பரமன்' என்பதினால் திருமேனி குணப்பெருமையும் 'துயின்ற பரமன்' என்பதால் ஸ்வரூப குணப்பெருமையும் 'பையத்துயின்ற பரமன்' என்பதனால் எல்லாவற்றாலும் பெரியவன் என்பதையும் குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.[22] மேலும் ''வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்து '' என்று திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட நிலையை ஆண்டாள் பாடியதற்கேற்ப ''வெள்ளம்'' என்பதினால் மென்மைக்குச் சேர குளிர்ச்சி உண்டான படியையும், "அரவில்" என்பதினால் அந்தத் தண்ணீர் உறுத்தாமைக்கு மென்மை, குளிர்த்தி, நாற்றங்கள் ஆகியவை இயற்கையாக உடைய பாம்பையும் பாம்பாகிய படுக்கையையும் சொல்லி, 'துயில்' என்பதினால் உலகைக்காக்கும் சிந்தனையையும் உடையவன் என்று உரையிட்டது அறியற்பாலதாகும். மேலும் ''வித்து'' என்பதினால் அவதாரங்களுக்கு நாற்றங்காலாக திருப்பாற்கடலைச் சொன்னதும் அறியற்பாலதாகும்.[23]

### 4.1.3 பிறப்பு நிலை (விபவம்) :

பிறப்புநிலை என்பது கருமத்தினால் பிறப்ப தன்றியே உலக உயிர்களை ஆட்கொள்ளும் பொருட்டு அருள்உள்ளம் கொண்டு மண்ணுலகில் பிறப்பெடுக்கும் நிலையை அவதாரமென்பர்.[24] அவதாரங்கள் அனைத்தும் இறைவனுக்கு பெருமை தருவதாகையால் விபவங்கள் எனப்படுகின்றன.[25] திருப்பாவையில் திருவிக்கிரம அவதாரம், ராமாவதாரம் பற்றிய பாடல்கள் மூலம் அந்தந்த அவதாரத்தின் பெருமையை அறியமுடிகிறது. திருப்பாவையில் வெளிப்படையாக ஆண்டாள் கண்ணன் பெயரைக் கூறாவிடினும் கிருஷ்ணாவதாரச் செயல்களைப் பல பாடல்களில் காட்டியிருப்பதற்கு பிள்ளை சிறப்பான உரையமைத்ததன் மூலம் கண்ணனுடைய பிறப்பு, இயல்பு, குணங்கள், விளையாடல்கள் ஆகியவற்றை அறியமுடிகிறது.

#### 4.1.3.1 உலகளந்த உத்தமன் :

ஆண்டாள் தாம் பாடியருளிய திருப்பாவையில் உலகளந்த உத்தமனைக் குறித்து மூன்றிடங்களில் குறிப்பிட்டுள்ளார்.[26]

'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்ற தொடருக்குப் பாற்கடலில் பையத்துயின்ற பரமன், மகாபலியின் துன்பம் பொறுக்கமாட்டாத இந்திரன் முதலான தேவர்களின் கூக்குரலுக்கு செவிசாய்த்து அழகிய வாமனனாய் வந்து சிறிய வடிவைக்காட்டி பெரியவனாகி சிறுகாலைப் பெருகாலாலே நீட்டி உலகையெல்லாம் அளந்து, அது காரணமாக உத்தமன் என்று பெயர்பெற்றான் என்று உரைப்பர் பிள்ளை. அதாவது தன்னை அழிய மாறியாகிலும் பிறர்வாழ வகை

செய்பவன் உத்தமன். இந்நிலையில் மற்றவர்கட்கு உதவி செய்ததாக நினைக்கை அன்றிக்கே எம்பெருமான் தன் பேறாக நினைத்திருக்குமவனாகக் குறிப்பர் பிள்ளை.[27] இதனால் எம்பெருமானுடைய திருநாமச்சிறப்பு சொல்லப்பட்டதாயிற்று.

அடுத்து, 'அம்பர மூடறுத்து ஓங்கி உலகளந்த உம்பர் கோமான்' என்ற இடத்தில் வேறு பயனைக் கருதுவதில் ஊற்றமுடைய இந்திரன் முதலான தேவர்களுக்காக ஆகாயம் உள்ளீடாக உள்ள எல்லா உலகையும் ஒருவரம்பின்றி ஊடறுத்து விம்ம வளர்ந்தான் வாமனன்; வளர்ந்தோடல்லாமல் வரையாதே எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்துப் பூமியை அளந்து கொண்டான். இதனால் இன்னார், இனியார் என்ற வேறுபாடு தோன்றாது வேறு காரணமின்றியே இயற்கையான காத்தற்தன்மையை உடையவன் எம்பெருமான் என்பதைப் பிள்ளை உரையில் காணமுடிகிறது.[28] இதனால் எம்பெருமானுடைய காத்தற்தன்மைக்கு ஏற்ப வீரச்செயல் புரிந்ததைச் சொன்னபடி.

மேலும், 'அன்று இவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி' என்ற இடத்தில் காலம் கடந்த காட்சியின் அநுபவத்தை கூறுமுகமாக மகாபலி உலகையெல்லாம் தன்னுடையது என்று அபிமானித்திருந்த அன்று என்றும், இவ்வபிமானத்தைத் தவிர்ந்து தன்னுடையது என்று எம்பெருமான் மகாபலியிடமிருந்து மீட்ட அன்று என்றும், அவன் எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து அதனால் தூளிதானம் பண்ணின அன்று என்றும் அக்காலத்து நிகழ்ச்சியின் சிறப்பைக் காட்டப் படுவதோடு உலகளந்த உத்தமனது திருவடியானது

பெரியபிராட்டியாருக்கும், பூமிப்பிராட்டியாருக்கும் பூதொடுமா போலே கூசிப்பிடிக்கும் படியாக இருந்தது என்றும், அத்திருவடியாலே காட்டையும் அதிலுள்ள ஓடையையும் அன்று அளந்த அந்த ஆயாசம் தீர இன்று 'அடிபோற்றி' என்று பல்லாண்டு பாடுவதாக பிள்ளை தம் உரையில் கூறியிருப்பது அறியற்பாலதாகும்.[29] இதனால் எம்பெருமானுடைய வீரச்செயலுக்கு அன்று வாழ்த்துக்கூறாத குறைதீர இன்று அத்திருவடிகளுக்கு மங்களாசாசனம் செய்ததாகப் பிள்ளை உரைப்பர்.[30]

### 4.1.3.2 இராமன் :

இறைவன் தோன்றிய அவதாரங்களில் இராமவதாரமும் முக்கியமானதாகும். இந்த இராமாவதாரத்தைப் பற்றி மூன்று பாடல்களில் ஆண்டாள் பாடியுள்ளார்.[31]

#### 4.1.3.2.1 மனத்துக்கினியான் :

'கனைத்திளங் கற்றெருமை' என்னும் பாடலில் கண்ணனைப் பிரியாமல், இலக்குவனைப்போலே இருக்கிறவனுடைய தங்கையை எழுப்புகிறாள் ஆண்டாள். இப்பாடலில் உள்ளே இருக்கின்ற பெண்மணி பேசாமலே இருந்ததால் 'சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக் கினியானை' என்று பாசுரமிடுகிறாள். இதனால் இராமனுடைய கருணை உள்ளமும் மனத்துக்கினிமை தருபவனாக இருக்கும் தன்மையும் சொன்னபடி. 'சினத்தினால்' என்பதனால் குளிர்ச்சியாக இருக்கிற இராமனுக்கும் கோபம் வருவதற்கு காரணம் யாதெனில் அடியார்களுடைய பகைவர்கள் இவருக்கும் பகைவர்களாவர் என்று சொன்னபடி. எடுத்துக்காட்டாக

தன் நண்பனான சுக்ரீவனுக்கு சீற்றம் பிறந்தபோது வாலியைக் கொன்றார்; சுக்ரீவன் அழுத போது இராமனும் அழுதார் என்று கூறவே இராமனுடைய கருணை உள்ளம் அறியமுடிகிறது.[32] அதே சமயத்தில் 'மனத்துக்கினியானை' என்பதினால் பெண்களைப் படுகுலை அடிக்கும் கண்ணனைப் போலன்றிக்கே இராமன் ஒரு மனைவியை உடையவன் என்றும், பெண்களைத் துன்புறுத்தி பின்னர் இரக்க மில்லாமல் இருக்கும் கண்ணனைப் போலன்றிக்கே பகைவர் களையும் அழியச்செய்யும் தன்மையுடையவன் இராமன் என்றும் பிள்ளை குறிப்பிட்டுள்ளது நோக்கத் தக்கதாகும்.[33]

### 4.1.3.2.2 இராமனது வீரம் :

'புள்ளின் வாய் கீண்டானை' என்றபாடலில் கண்ணழகு படைத்த பெண்ணை எழுப்பும் போது 'பொல்லா அரக்கனைக் கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமை' என்று இராமனுடைய வீர சரிதத்தைக்காட்டி பாசுரமிடுகிறார். இவ்விடத்தில் இராவணனுடைய தங்கையான சூர்ப்பணகை வாயால் விபீஷணனை நல்ல அரக்கன் என்றும், இராவணன் பொல்லா அரக்கன் என்றும் சொன்னதற்கு ஏற்ப தோட்டத்தில் புழுக்கள் இருக்கின்ற இலையைக் கிள்ளி பொகடுமா போலே இராவணனுடைய தலைகளை இராமன் துணித்ததை அவனுடைய வீரச்செயலுக்குச் சேர உரைப்பர்.[34] அதே சமயத்தில் 'கீர்த்திமை' என்ற சொல்லுக்கேற்ப எதிரிகளுக்கும் நெஞ்சு பயத்தினை உண்டுபண்ணும் படியான வீரசரிதத்தை உடையவன் என்றும், உகவாதாருக்கும் விடவொண்ணாத வீரம் படைத்தவன் இராமன் என்றும் இராவணன் இராமன் (பெருமாள்) வீரத்துக்கு இலக்கானான்; தங்கை சூர்ப்பணகை

இராமன் அழகிலே கண்கலங்கினாள்; தம்பியான விபீஷணன் குணத்துக்கு இலக்கானான் என்று இராமனுடைய வீரம், அழகு, குணம் ஆகியவற்றை முறையே பிள்ளை அழகாக எடுத்துரைப்பது காணமுடிகின்றது.[35]

மேலும் வீரத்தைப் பற்றிச் சொல்லும் போது அன்று இராமனுடைய மிடுக்குக்குப் பல்லாண்டு பாடாத குறைதீர 'சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி' என்று பாசுரமிடுகிறாள். இந்த இடத்தில் 'தென்னிலங்கை செற்றாய்' என்ற பொழுது இலங்கைக்குச் செல்லுகை நிச்சயமாயிருக்க 'அங்கு சென்று' என்று புலிகிடந்த புதரிலே செல்லுமாபோலே பிராட்டியைப்பிரித்த இராவணன் இருந்த இடத்திற்கு இராமன் சென்றான் என்பதை வியப்புத் தோன்றச் சொல்லுவது அறியற் பாலதாகும். மேலும் 'சென்று' என்பதினால் வழிபோக்கிலே கபந்தன், விராதன் முதலானவர்களை அழியச்செய்ததைச் சொன்னபடி.[36]

### 4.1.3.3 பலராமன் :

பலராமனுடைய அவதாரத்தைப் பற்றித் திருப்பாவையில் ஒரே ஒரு இடத்தில் வந்துள்ளதை அறியலாம். 'அம்பரமே தண்ணீரே' என்ற பாடலில் நந்தகோபன், நப்பின்னை, யசோதை இவர்களை எழுப்பி கண்ணனை எழுப்புவதற்கு முற்பட்டு அவன் உலகளந்த வீரச்செயலைச் சொல்லி எழுந்திராமையால் முந்துற நம்பி மூத்தபிரான் என்று கண்ணனுக்கு அண்ணனான பலராமனை எழுப்பாமல் முறைகேடாக செய்தோம் என்றெண்ணி, 'செம்பொற்கழலடிச் செல்வா பலதேவா' என்று பலராமரை எழுப்பப் பாசுரமிடுகிறாள். இவ்விடத்தில் 'பிள்ளை பிறக்கைக்கு பொற்கால்

பொலியப்பிறந்த சீமானே' என்று பலராமனை விளித்து உரையிடுவர்.[37] அதாவது கண்ணன் பிறப்பதற்கு விரும்பத்தக்க சந்ததியின் உயர்த்தியில் பிறந்த சீமான் என்றபடி. அப்படிப்பட்ட பலராமன் மூலமாக கண்ணனைப்பெற 'உம்பியும் நீயும் உறங்கேல்' என்று பலராமனுக்கு அடங்கியவனான கண்ணனையும், கண்ணனுக்கு அடங்கியவனான பலராமனையும் உறங்காது இருக்கச் சொல்லுகின்றனர்.

**4.1.3.4 கண்ணன் :**

இறைவன் தோன்றிய அவதாரங்களில் கிருஷ்ணாவதாரம் முழுமை பெற்றதாகும். பெரியாழ்வாருடைய திருமகளான ஆண்டாளும் இறைபக்தி மிகுதியாலே ஆய்ப்பாடியிலே கண்ணனும் பெண்களுமாய் திருக்குரவை கோத்த நிகழ்ச்சியை அனுகரித்து தாம் பிறந்த திருவில்லிபுத்தூரே ஆய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்கள் இடைப்பெண்களாகவும், ஆண்டாளும் அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலே நந்தகோபர் திருமாளிகையாகவும், உள்ளே நிற்கிறவன் கண்ணனாகவும் நினைத்து ஆண்டாளுடைய உள்ளடங்கா பக்தி முற்றி இடையர்களுடைய நடையும், இடையர்களுடைய தலைமுடியும், இடையர்களுடைய பேச்சும் ஆண்டாளுக்கு இயல்பாக அமைந்ததைப் பிள்ளை உரைமூலமாகக் காட்டவே ஆண்டாளுடைய ஆராத கண்ணனிடம் உள்ள பக்தி அறிய முடிகிறது. ஆகவே கண்ணனுடைய பிறப்பு தொடக்கமாக வீரச்செயல்கள் செய்ததனைத்தும் சுட்டப்பட்டிருப்பதை அறியலாகும். அவையாவன: கண்ணன் பிறப்பு, பேய்முலை உண்டது, சகடத்தை முறித்தது, கபிதாசுரனைக் கொன்றது, பகாசுரனைக் கொன்றது,

மலையைக் குடையாகப் பிடித்தது, கேசியைக்கொன்றது, குவலயாபீடத்தைக் கொன்றது, மல்லரைக் கொன்றது, கம்சனைக் கொன்றது, நப்பின்னையின் உறவு ஆகியனவாகும்.

### 4.1.3.4.1 கண்ணன் பிறப்பு :

ஆண்டாள் அருளிய திருப்பாவையில் கண்ணனுடைய பெயர் நேராக இடம்பெறவில்லை என்பது அறியற்பாலதாகும். ஏனெனில் ஆண்டாள் அனுகரித்தது கிருஷ்ணாவதார நிகழ்ச்சிகளாகையாலே கண்ணன் பெயரை கூறிவிட்டால் கம்சன் காதுக்கு எட்டிவிடும் என்று பெயர் காட்டாமையே கண்ணனுடைய பிறப்பு, செயல் இவைகள் மூலமாக ஆண்டாள் வெளிப்படுத்துகிறாள் என்று பெரியோர் பணிப்பர். இப்படிப்பட்ட இடங்களை எல்லாம் பெரியவாச்சான் பிள்ளை விளக்கி நிலைநாட்டுவது அறியற்பாலதாகும். ஆண்டாள் கண்ணனுக்கு 'கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்' என்று பெயரிடுகின்றாள். இதற்கு உரையிட்ட பிள்ளை கண்ணன் பிறப்பதற்கு முன்பு நந்தகோபனுடைய பசும்புல்சாவமிதியாத கருணையையும் கண்ணன் பிறந்த பின்பு அவன் மேல் உண்டான அன்பினாலே அவனுக்கு தீங்கொன்றும் வராமல் இருக்க வேலை ஒளிவீசும்படியாக தீட்டிப் பிடித்துக் கொண்டிருந்த தாகவும் உரைப்பர். அப்படிப்பட்ட நந்தகோபன் முன் மற்றவர்கள் வந்து முறைப்பட்டாலும் கண்ணன் விநயம் தோற்ற இருப்பதனாலே 'குமரன்' என்று பெயர் வழங்கியதை காட்டுவர். இப்படி நந்தகோபன் நன்மையைச் செய்பவர் என்று கண்ணன் அங்கு விநயம் தோற்ற நின்றபடியைச் சொல்லி 'யசோதை

இளஞ்சிங்கம்' என்று யசோதையானவள் பிரியமாக நடத்துமவளாகையாலே கண்ணனானவன் செருக்கும் மேனாணிப்பும் தோற்ற இருப்பதை எண்ணி 'இளஞ்சிங்கம்' என்ற சொல் அமைத்ததைக் காணலாம். அதுமட்டுமின்றி சிறுமியர்க்கு ஒத்தப்பருவமாக இருக்கையாலே 'இளஞ்சிங்கம்' என்றபடி. இதுபற்றியே பட்டரும் 'சிங்கக்குருகு' என்று அழைத்ததாகக்கூறுவர்.[38]

கண்ணன் பிறப்பும் வளர்ப்பும் வியப்பானது. இதுபற்றியே ஆண்டாளும் 'ஒருத்தி மகனாய் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளித்துவளர' என்கிறாள். கண்ணனைப் பெற்றெடுத்த தேவகியானவள் எல்லா உலகங்களையும் நியமிப்பவனையும் கூட நியமிக்குமவளாகியும் நாட்டில் தனக்கு ஒப்பற்று இருக்குமவள் என்பதற்குச் சேர 'ஒருத்தி' என்று தேவகியை குறிப்பிட்டதை காட்டி உரைப்பர் பிள்ளை. அதே சமயத்தில் எல்லா உலகங்களுக்கும் தந்தையானவன் ஒருத்தி மகனாவதே என்று வியப்புத்தோற்ற 'ஒருத்தி மகனாய்' என்றதாக உரைப்பர்.[39] அவ்வாறே 'ஒருத்தி மகனாய் ஒளித்து வளர' என்ற தொடருக்கு ஏற்ப ஒருத்தியான யசோதையைச் சொல்லும் பொழுது இவனை மகனாகப்பெறவேணும் என்று தேவகிக்கு அவதார சுவையைக் (ரஸத்தைக்) கொடுத்தான் என்றும், யசோதைக்கு லீலா ரஸத்தை அனுபவிப்பித்தான் என்றும் உரைப்பர்.[40]

கண்ணன் ஆயர்குலத்தினில்பிறந்தான். இதுபற்றியே ஆண்டாளும் 'பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்து நீ' என்று பாசுரமிடுகிறாள். அதாவது, பசுக்கள் மேய்த்து உண்ணக்கடவதான இடைச்சாதியிலே வந்து பிறந்ததால் எளியவன் என்றும், காக்கவேண்டிய

பசுக்கள் வயிறு நிறைந்தால்அல்லது தாங்கள் உண்ணாத குலத்தில் பிறந்ததால் காப்பாளன் என்றும், கண்ணனாய் பிறந்த பிறவியின் சிறப்பை எடுத்துரைப்பர்.[41]

கண்ணனுடைய தீம்புக்குப் பயந்து அவனை கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுகிறாள் யசோதை. அதனால் கண்ணன் வயிற்றில் தழும்பு ஏற்படுகிறது. இதுபற்றியே ஆண்டாளும் 'தாயைக்குடல்விளக்கஞ் செய்த தாமோதரன்' என்று பெயர் இடுகிறாள். இதற்கு வயிற்றில் தழும்பாலே யசோதைப் பிராட்டியை விளங்கப்பண்ணினவன் என்று பிள்ளை உரையிடுவது நோக்கத்தக்கதாகும். அதே சமயத்தில் கண்ணன் யசோதையிடம் அடங்கியிருப்பதாலும் அவனை நாட்டார் கொண்டாடும் படி பண்ணினவன் என்ற பொருளுக்குச் சேர தாமோதரன் என்று பெயர் சூட்டியதையும் உரைப்பர் பிள்ளை.[42]

### 4.1.3.4.2 பேய்முலை உண்டது :

கம்சனால் ஏவப்பட்ட பூதனையைக் கண்ணன் முடித்தான். இச்செயலைக் கருத்தில் கொண்டு ஆண்டாள் 'பேய்முலை நஞ்சுண்டு' என்று பாசுரமிடுகிறாள். இதற்கு 'பெற்ற தாயும் உதவாத தனிமையிலே பாதிக்கவந்த பூதனையை முடித்து, கண்ணனை முடிக்க வந்தவள் தன்னோடே போம்படி பண்ணி' என்று உரையிடுவர்.[43]

### 4.1.3.4.3 சகடத்தை முறித்தது :

யசோதை வண்டியின் பக்கத்தில் கண்ணனை விட்டு வைக்கிறாள். அந்த வண்டியே கண்ணனுக்கு காப்பு என்று நினைத்தாள். ஆனால் அந்த வண்டியிலே

அசுரன் ஆவேசித்து கண்ணனுக்கு அபாயத்தைச் செய்ய எண்ணினான். அத்தகைய வண்டியின் கட்டுக்கோப்புக் குலையும்படி குழந்தையான கண்ணன் திருவடிகளை வீசினான். ஶ்ரீநிமித்த திருவடிகள் பட்டு அந்த வண்டியானது முறிந்தது. இதுபற்றியே ஆண்டாள் 'கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி' என்று குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[44] இப்படி தாயும் கூட உதவாத நிலைமையிலே முயலாமல் திருவடிகளாலே சகடாசுரனை அழித்த புகழைச் சொல்லும் வகையில் ''பொன்றச்சகடம் உதைத்தாய் புகழ் போற்றி'' என்று ஆண்டாள் அருளியதாக உரைப்பர் பிள்ளை.[45]

### 4.1.3.4.4 கபிதாசுரனைக்கொன்றது :

கம்சனால் ஏவப்பட்ட ஓர் அசுரன் விளாங்கனியாய் இருந்தான். மற்றொரு அசுரன் கன்றாய் நின்றான். கன்றாய் நின்ற அசுரனை எறிதடியாகக் கொண்டு விளாங்கனியாய் இருந்த அசுரன் மீது எறிந்தான் கண்ணன். அவ்வாறு எறிந்தபோது ஒரு கால் மடக்கி நின்றதை போற்றும் வகையில் 'கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி' என்று பாசுரமிடுகிறாள். எனவே குஞ்சித்த திருவடிகளுக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறார்கள் என்று உரை வழங்கியது குறிப்பிடத்தக்கதாகும்.[46]

### 4.1.3.4.5 பகாசுரனைக்கொன்றது :

கண்ணழகு படைத்த ஒரு தோழியை எழுப்பும் வகையில் கண்ணனின் வீரச்செயல்களைச் சொல்லி எழுப்புகிறாள். அப்பொழுது மேய்கிற கொக்கிலே ஒரு அசுரன் ஆவேசித்தான். இதனை அறிந்த கண்ணன் பறவை உருகொண்டு வந்த பகாசுரனுடைய வாயைப் பிளந்தான். இதுபற்றியே 'புள்ளின்வாய் கீண்டான்' என்று பாசுரமிடுகிறாள் ஆண்டாள்.[47]

### 4.1.3.4.6 மலையைக்குடையாகப் பிடித்தது :

இந்திரன் செய்த செயலுக்காக கண்ணன் மலையைக் குடையாக எடுத்து பசுக்களுக்கும் இடையர்களுக்கும் வந்த ஆபத்தைப் போக்கினான். மலையை எடுத்துக்கொண்டு நின்ற கண்ணனுடைய கருணை என்னும் குணத்திற்குச் சேர 'குன்றுகுடையாய் எடுத்தாய் குணம் போற்றி' என்று பாடுகிறாள்.[48]

### 4.1.3.4.7 கேசியைக் கொன்றது :

எல்லோரும் வந்து அழைக்கும்படி கண்ணனாலே விரும்பப்படுகின்ற ஒருத்தியை எழுப்பும்பொழுது அவனுடைய வீரசரிதங்களைச் சொல்லுகிறாள். கம்சனாலே ஏவப்பட்ட குதிரையை இடைச்சிகளுக்கு உதவுவதற்காக அதனுடைய வாயைப் பிளந்தான். எனவே 'மாவாய் பிளந்தானை' என்பதற்கு விளக்கமாக நமக்காக கேசி என்ற குதிரையைப் பிளந்து நம்மையும் தன்னையும் உண்டாக்கி தந்தவன் என்பர் பிள்ளை.[49]

### 4.1.3.4.8 குவலயாபீடத்தைக் கொன்றது :

கண்ணனை நலிவதற்காக வலிமை மிக்க உலகுக்கெல்லாம் அலங்காரமான குவலயாபீடம் என்னும் யானையை வாசலிலே நிறுத்தி வைத்தான் கம்சன். அதனைக்கொன்று தன் வலிமையைக் காட்டினான் கண்ணன். அத்தகைய கண்ணனுக்குத் தோற்று 'வல்லானை கொன்றானை' என்று பாட அழைக்கிறாள் ஆண்டாள்.[50]

### 4.1.3.4.9 மல்லரைக்கொன்றது :

முரடனான சாணூரனோடு போர்புரிய கண்ணன் வருகிறான்; அவர்களைக்கொன்று பெண்களுக்கு

உதவினான். பெரிய மேன்மை உடையவராய் இருக்கிறவன் இவ்வாறு சாணூர முஷ்டிகனை அழியச்செய்து அரண்மனையில் பெண்பிள்ளைகளோடு உண்டான பழக்கத்தாலே பெரிய நாகரீகம் படைத்தவனானான் கண்ணன். இதுபற்றியே ஆண்டாளும் 'மல்லரை மாட்டிய தேவாதிதேவன்' என்று பாசுரமிடுகிறாள்.[51]

### 4.1.3.4.10 கம்சனைக்கொன்றது :

கண்ணன் ஆய்ப்பாடியில் மறைந்து வளர்வதைக் கேட்ட கம்சன் தரிக்கமாட்டாதிருந்தான். பயந்து, பரிந்து வாழ்த்த வேண்டிய இறைவனாகிய கண்ணனிடத்திலே தீமையை நினைத்தான், இதுபற்றியே ஆண்டாள் 'தான் தீங்கு நினைத்த' என்று பாசுரமிடுகிறாள். இதில் 'தான்' என்பதற்கு கம்சனைக்கொடியவன் என்று கூறுவர் பிள்ளை. அதாவது அசுரத்தன்மை யுடையவன் என்றபடி. மேலும் அவன் நிலையற்றவன் என்பதற்குச் சேர மேல் நொடியிலே படப்புகுகிற பாடறியாத 'தான்' என்றும் உரைப்பர்.[52] மேலும் கம்சனுடைய தீய நினைவை அவன்தன்னோடே போகும்படி பண்ணினான் கண்ணன் என்பதற்குச் சேர 'கருத்தை பிழைப்பித்து' என்கிறாள் ஆண்டாள். கம்சன் வெகுகாலமாக சேர்த்து வைத்த பாவங்களனைத்தையும் கண்ணனைக் கண்ட காட்சியிலே அனுபவித்து முடியும்படி நின்றவன் என்றும், தேவகி வசுதேவர்கள் வயிற்றில் நெருப்பை கம்சன் வயிற்றில் கொளுத்தினவன் கண்ணன் என்றும் கூறுவர். இப்படி அடியார் பக்கல் அதிகமான ஆசையாலே கண்ணன் செய்ததை நினைத்து ஆண்டாள் "நெடுமாலே" என்கிறாள்.[53]

**4.1.3.4.11 நப்பின்னையின் உறவு :**

நப்பின்னை என்பவள் ஆய்ப்பாடியிலே கும்பனுடைய மகள். கும்பன் வைத்த பந்தயத்தில் ஏழு எருதுகளை வென்று நப்பின்னையை மணந்தவன் கண்ணன்; அவள் புருஷகாரமாக கண்ணனைப் பற்றுவது முறையாகும். அந்த நப்பின்னையானவள் நந்தகோபனுடைய மருமகளுமாவாள். ஆண்டாள் உள்ளிட்ட ஆய்ச்சியர்கள், 'நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்' என்று நப்பின்னையை மருமகளாக அழைப்பதில் ஆசையுடையவர்கள். அந்த நப்பின்னையினுடைய திருக்குழலோ பரிமளம் தான் வாசனை பெறும்படியாக இருப்பது பற்றி 'கந்தம் கமழும் குழலி' என்கிறாள். அதுமட்டுமின்றி அவளுடைய திருக்குழலானது எல்லா வாசனைகளும் நிறையப்பெற்ற இறைவனான கண்ணனுக்கும் கொடுக்கும்படி பரிமளம் மிக்கிருப்பதாக உரைப்பர் பிள்ளை.[54] 'பந்தார் விரலீ' என்பதற்குச் சேர நப்பின்னை யானவள் கண்ணனோடு பந்தடித்து அவனைத் தோற்பித்து அவனை ஒரு கையிலும் பந்தை ஒரு கையிலும் அணைத்துக்கொண்டு கிடப்பதாக உரைப்பர். கண்ணன் நப்பின்னைக்கு அனுபவிக்கும் கருவி என்றும் பந்து அவளுக்கு விளையாட்டுக் கருவி என்றும் அவள் ஒரு கையில் நாரமாகிய பந்தையும் ஒரு கையில் நாராயணனாகிய இறைவனையும் வைத்திருக்கிறாள் என்றும் உரைப்பது குறிப்பிடத் தக்கதாகும். இது தன்னையே 'ஒருகையில் விபூதியாய்த்து ஒரு கையிலே விபூதிமானாய்த்து' என்று உரைப்பர். அவள் கையோ 'செந்தாமரை கை' என்பதற்கு ஏற்ப கண்ணனும் ஆசைப்படும் கையாகும். அவள் முன் கையில் வளை கழலாதிருக்கும்.[55] இங்ஙனே நப்பின்னையினுடைய

தன்மைகளை 'குத்து விளக்கெரிய', 'முப்பத்து மூவர் ஆகிய பாடல்களிலும் குறிப்பிட்டது அறியற் பாலதாகும்.[56]

### 4.1.3.4.12 கண்ணனின் பண்பு நலன்களைக் காட்டல்:

கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனும் ஆய்ச்சியரும் சேர்ந்து நோன்பு நோற்பதின் அடிப்படையில் ஆண்டாளும் அதனை அப்படியே அநுகரித்து திருப்பாவை பாடுகிறாள். இத்திருப்பாவையில்கண்ணனுடைய பெயரை நேராக ஆண்டாள் சுட்டவில்லையாயினும், அவன் செய்த தொழில்களின் அடிப்படையில் அமைந்த பெயர்கள் பல பல. முக்கியமாக கண்ணனுடைய எளிவந்த தன்மையை எடுத்துக்காட்டும் வகையில் பாடல்களில் உள்ள சொற்களுக்கு உரை வழங்கியுள்ளார் பெரியவாச்சான் பிள்ளை. அவை பின்வருமாறு :

**4.1.3.4.12.1** 'மாயன்' என்ற சொல் அடிப்படையில் ஆய்ப்பாடிக்கு தன்னைக்கொடுத்த நீர்மையைச் சொன்னபடி.[57]

**4.1.3.4.12.2** 'வையத்து வாழ்வீர்காள்' என்றசொல் அடிப்படையில் இங்கு வாழ்ச்சிக்கு பரமபதமும் ஒப்பில்லை என்று சொல்லி, அங்கு மேன்மை குணத்தைத்தான் காணலாம். ஆனால் இங்குகண்ணனின் நீர்மை கண்டு அனுபவிக்கலாம்.[58]

**4.1.3.4.12.3** 'பெரும் பசுக்கள்' என்ற சொல் அடிப்படையில் புல்லும் தண்ணீரும் இட்டுவளர்த்தவை யன்றிக்கே கண்ணனுடைய தொடுதலாலே பசுக்கள் வளமாக இருக்கும். இதனால் கண்ணனுடைய நீர்மை சொல்லப்பட்டது.[59]

**4.1.3.4.12.4** 'சீர்மல்கும் ஆய்ப்பாடி' என்ற சொல் அடிப்படையில் கண்ணனுடைய நீர்மை பரமபத்திலும் சென்று அலை எறிக்கும்படி இருக்கும்.[60]

**4.1.3.4.12.5** 'கற்றுக்கறவை' என்ற சொல் அடிப்படையில் பரமபதத்திலே நித்யசூரிகள் இறைவனுடைய சம்பந்தத்தாலே 25 வயது உடையவர்களாவர். அதுபோல ஆய்ப்பாடியில் பசுக்களுடைய வயது கண்ணனுடைய சம்பந்தத்தாலே கீழ்நோக்கி போகும். இதனால் கண்ணனுடைய நீர்மை சொல்லப்பட்டது.[61]

**4.1.3.4.12.6** 'நந்தகோபனுடைய கோயில்' என்ற சொல் அடிப்படையில் அடியார்கள் இட்ட வழக்காய் அவர்களைத் தலைவராக வைத்து அவர்களோடு கலந்து பரிமாற இங்குவந்து அவதரித்தான் என்று நீர்மைசொல்லப்படுகிறது.[62]

'மணிவண்ணன்' என்ற சொல் அடிப்படையில் தாழநில்லாவிடினும் விடவொண்ணாத வடிவழகு என்று கண்ணனுடைய எளிவந்த தன்மையை உரைப்பர்.[63]

**4.1.3.4.12.7** 'மாலே' என்ற சொல்அடிப்படையில் சரம ச்லோகத்தில் 'மாம்' என்ற சொல்லுக்கு உரிய குணங்களில் எளிவந்த தன்மையைச் (சௌலப்யத்தை) சொல்கிறார். இதனால் கண்ணனுடைய எளிவந்த தன்மை சொன்னபடி. மேலும் ஆய்ச்சியர்கள் மகாபாரதத்திற்கு உள்ளீடான மையல் குணத்தையும் இவர்கள் நிலைநாட்டியதைச் சொன்னபடி.[64]

**4.1.3.4.12.8** 'கோவிந்தா :' என்ற சொல் அடிப்படையில் ஆய்ச்சியர்களை விட்டுச்செல்லாமையாலே ஆய்ப்பாடியில் வந்து அவதரித்து ஆய்ச்சியர்களுக்கு கையாளாய் இருந்த நீர்மையைச்சொன்னபடி.[65]

### 4.1.4 அந்தர்யாமி (உள்ளுறைநிலை) :

எம்பெருமான் ஒருவனே எல்லா ஆத்மாக்களையும் தூண்டுபவனாக இருக்கிறான் என்பதை 'கறந்து' என்ற சொல்லுக்கு பொருளாக உரைப்பர்.[66] இதனால் உள்ளுறை நிலையைச் சொன்னபடி. நாராயணன் என்ற சொல்லுக்கேற்ப முகந்தோற்றாமே நின்று தாயன்பாலே (வாத்சல்யத்தாலே) காப்பாற்றக்கடவன் எம்பெருமான் என்று உள்ளுறை நிலையை எடுத்து இயம்புவர்.[67] 'மார்கழித்திங்கள்' என்ற பாடலில் 'நாராயணன்' என்பதினால் இத்தலை (சேதனன்) இசையாதவன்றும் தான் விடமாட்டாத தாயன்பு உடையவன் என்று உள்ளுறை நிலையைக் காட்டுவது அறியற்பாலதாகும்.[68]

### 4.1.5 அர்ச்சாவதாரம் (மூர்த்தி வழிபடு நிலை):

ஆண்டாள் அருளிய திருப்பாவையில் இறைவனுடைய பர, வ்யூக, விபவ, அந்தர்யாமி ஆகிய நிலைகளைப் பற்றி ஆங்காங்கே குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் அர்ச்சாமூர்த்தியாக எந்தத் திருத்தலத்தைப் பற்றிய குறிப்பும் திருப்பாவையில் இல்லை. எனினும் 'புள்ளும் சிலம்பினகாண்' என்ற பாடலில் 'புள்ளரையன் கோயில்' என்று ஆண்டாள் அருளியதற்கேற்ப கண்ணன் அவதரித்து ஆய்ப்பாடியிலே இருந்த அனைவரும் அவனழகிலே ஈடுபட்டுச் செல்லும் காலத்திலே கொண்டாடுகைக்கு ஒரு திருமுற்றம் - கோயில்

உண்டோ? என்று கேள்வி எழுப்பி இராமாவதாரத்தில் இராமன் பெரிய பெருமாளை வணங்கினாற் போலே கண்ணனையும் கும்மீடு கொள்ளுகைக்கு ஒரு திருமுற்றம் உண்டு என்பர். 'புள்ளரையன்' என்றது பெரிய திருவடியாகிய கருடனை அடையாளமாக - வாகனமாக உடையவன் என்றபடி.[69]

## 4.2 உயிர்நிலை :

ஜீவாத்மா எம்பெருமானுக்கு அடியவனாய் இருப்பவன்.[70] இறையருளுக்கு இலக்காகப்பெற்ற நாள் இந்த ஆத்மாவிற்கு நன்னாளாகிறது.[71] மேலும் இறைவனோடு எதிரம்பு கோர்க்கை தவிர்ந்து அவன் நமக்கு காப்பாளன் என்னும் நம்பிக்கை பிறந்தநாள் நன்னாள் என்று உரைப்பர். இதனால் மெய்யான உயிர்நிலை சொன்னபடி.[72] மேலும் இந்த ஆத்மாவிற்கு இறைவன் திறத்து இழிய இச்சையே அதிகாரம் என்பர்.[73] அதாவது ஆற்றலும் உரிமையும் எம்பெருமான் திறத்து முழுமையாய் இருக்கையாலே இச்சைக்கு மேற்பட வேண்டுவதில்லை என்பர். இதனால் சேதனனுக்கு இச்சையே அவசியம் என்றபடி. இந்த ஆத்மாவிற்கு நிலைநின்ற செல்வமானது இறைவனுடைய சம்பந்தம் (பகவத் பிரத்யாஸத்தி).[74]

சேதனன் கைம்முதல் இல்லாதவனாய் அத்தலையாலே பேறு என்று அவன் கை பார்த்து இருக்க வேண்டுமென்பர்.[75]

ஜீவாத்மா எம்பெருமான் விஷயத்திலே மூழ்கையாவது எம்பெருமானுடைய அடியவர்களான பாகவதர்களோடு கலந்து இருக்கும் வரை செல்வதாகும்.[76]

ஜீவாத்மா கர்மத்தினாலே பிறவியில் உறங்குகிறது.[77] ஜீவாத்மாவிற்கு எம்பெருமானுடைய சம்பந்தமே (பகவத் சம்மந்தம்) கௌரவத்தைத் தரும்.[78] அளவிடற்கரிய எம்பெருமானாகிற விஷயத்திற்கு துணை தேவை.[79] சேதனன் தன் பொருட்டு செய்யும்போது விலக்கப்பட்டது. எம்பெருமானுக்கு என் வருகின்றதோ என்று அஞ்சிச் செய்தால் அவை தர்மமாகும்.[80] எம்பெருமானிடம் 'பக்தியாகிய பிரேமம்' முறைபார்க்க ஒட்டாது.[81] சேதனர்களுக்கு தலைவனான பிரமன் வேறு வேறு படைப்புகளுக்கு காரணமானவன்.[82]

எம்பெருமானை அடைந்தவர்களுக்கு மற்ற தேவதைகள் குற்றேவல் செய்யும்.[83] இச்சையுடையவர்கள் இறைவனைப் பற்றி செய்நன்றி அறிந்தவனாய் இருக்கை (கிருத கிருத்யராகை).[84] இறைவனுக்கு அடிமையாய் இருக்கிற ஆத்மா துன்பப்படாதபடி அடிமைக்கு தக்க கைங்கர்யங்களை எம்பெருமான் தருவான்.[85] அத்தலைக்கு (எம்பெருமானுக்கு) என் வருகின்றதோ என்று அஞ்சிச் செய்வது ஜீவாத்மாவின் தர்மம்; தன் பொருட்டு செய்வது தள்ளத்தக்கது.[86] அளவிடற்கரிய விஷயமான எம்பெருமானுக்கு (அபரிச்சன்ன விஷயத்திற்கு) துணையாகிற பாகவதர்கள் அவசியம்.[87] இல்லாத குற்றத்தையும் சிலர் உண்டு என்றால் இல்லை செய்யாதே இசைவதன்றோ வைணவத்தன்மையின் அடையாளம் (வைஷ்ணவத்துவ லக்ஷணம்).[88] எடுத்துக்காட்டாக இராமாயணத்தில் பாபத்தின் பயன் என்று சொன்னதை உரையாசிரியர் குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.[89]

எம்பெருமான் எல்லோருக்கும் நன்மை பயப்பவனாக இருப்பினும் அவன் அடியார்களை

கொண்டல்லது முன்னிடக்கூடாது என்பது முன்னோர்கள் ஆசாரம். இதனால் பாகவத ஸ்வரூபம் சொல்லப்பட்டது.[90]

ஆத்மாவிற்கு இயல்பான தன்மையாவது மற்றவர்களுக்கு ஆட்படாது எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மையும் (அநந்யார்ஹ சேஷத்வம்), மற்றவர்களை தவிர்த்து எம்பெருமான் ஒருவனையே உபாயமாக பற்றுகையும் (அநந்ய உபாயத்வம்), மற்றவர்களுக்கன்றி எம்பெருமான் ஒருவனையே அனுபவிக்கும் தன்மையும் (அநந்ய போக்யத்வம்) ஆகும். இதனை மணவாள மாமுனிகள் திருமந்திரத்தில் உள்ள மூன்று பதங்களின் (ஓம் நம: நாராயணாய) பொருளாக உரைப்பர்.[91] இது தன்னை அறியும் வகையில் பெரியவாச்சான் பிள்ளையும் 'உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்' என்பதனால் இறைவன் தலைவனாகவும், ஆய்ச்சியர்கள் அவன் சொத்தாகவும் இருக்கும். இந்த உறவு என்றும் நிலைத்திருக்கும் இத்தனையே வேண்டுவது என்று உரையிடுவர்.[92] இதனால் எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மை (அநந்யார்ஹ சேஷத்வம்) சொல்லப்பட்டது. மேலும் 'அங்கண் மாஞாலத்து' என்ற பாடலில் அபிமான சூன்யராய் அரசர்கள் ராஜ்யங்களை இழந்து எளிவந்த தன்மையோடு எம்பெருமானுடைய 'பள்ளிக்கட்டின் கீழே' என்கிறபடியே எம்பெருமானுடைய சிங்காசனத்தின் கீழே கூடியிருப்பர் என்பதனால் அநந்யார்ஹ சேஷத்வம் சொல்லப்பட்டது என்பர்.[93]

'நீ குற்றேவல் எங்களைக்கொள்ளாமற் போகாது' என்பதினால் எம்பெருமானை ஒழிய வேறொருவர்

காப்பாறில்லாதவர்கள் என்று உரை வழங்கியதற்கு ஏற்ப எம்பெருமானைத் தவிர வேறொருவரன்றி எம்பெருமானே உபாயம் என்று (அநந்ய உபாயத்வம்) சொல்லப்பட்டது.[94] 'உன் பொற்றாமரை அடியே போற்றும்' என்பதனால் விலை உயர்ந்ததாய் விரும்பத் தக்கதாய், வகுத்ததாயும் இருந்த திருவடிகளிலே வேறொரு பயனை விரும்பாது எம்பெருமானுக்கே மங்களாசாசனம் பண்ணுகை என்று பிள்ளை உரைத்ததினால் மற்றவர் அன்றி எம்பெருமானையே அனுபவிக்கும் தன்மை (அநந்ய போக்யத்துவம்) சொல்லப்பட்டதாயிற்று.[95]

## 4.3 தக்க நெறி :

எம்பெருமான், தன்னை அடைவதற்கு கர்ம, ஞான, பக்தி, யோகங்கள் மற்றும் பிரபத்தி ஆகியவற்றை அடைவிக்கும் வழியான உபாயமாக காட்டியிருக்கிறார். அதில் பிரபத்தியாவது எம்பெருமானையே உபாயமாக பற்றுவது.[96] இதுதன்னையே ஆண்டாளும் திருப்பாவையில் பாடியுள்ளதை பெரியவாச்சான் பிள்ளை வெளியிட்டுள்ளதனால் அறியலாம். 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்பதினால் எல்லார்க்கும் தலைவனானவனே நம்முடைய விருப்பங்களை தலைகட்டிக் கொடுப்பான் என்று வேறு உபாயம் இல்லாமையைச் சொல்லுகையிலே நோக்கு. அதாவது வேறு கைம்முதல் இல்லாதவராய் எம்பெருமான் கைபார்த்து நிற்கிற நமக்கு.[97] இதனால் எம்பெருமானே உபாயம் என்று தக்க நெறியின் இயல்பு சொல்லப் பட்டதாயிற்று.

'நாயகனாய்' என்ற பாடலில் 'தூயோமாய் வந்தோம்' என்பதனால் எம்பெருமான் ஒருவனையே

பயனாகக்கொண்ட நாங்கள் அவனுக்கு மங்களாசாசனம் பண்ணுவது ஒழிய, தங்களுக்கு என்று ஒன்று இன்றிக்கே இருக்கை' என்று பிள்ளை உரையிட்டதற்கு ஏற்ப எம்பெருமானே உபாயம் என்பது பெறப்படுகிறது.[98] மேலும் 'ஏற்ற கலங்கள்' என்ற பாடலில் 'யாம் வந்தோம்' என்பதற்கு ......... சொரூப ஞானத்தாலே நாங்கள் ஆற்றாமை இருக்க வொட்டாமையாலே வந்தோம் என்று உரையிடுவர். ஸ்வரூப ஞானமாவது எம்பெருமானாகிய உபாயத்தில் நம்பிக்கையோடு இருக்கை என்று அரும்பத உரைகாரர் கூறியதற்கேற்ப தக்கநெறியாகிய உபாயம் சொல்லப்பட்டதாயிற்று.[99]

மேலும் 'கறவைகள் பின்சென்று' என்னும் பாடலில் 'இறைவா நீ தாராய் பறை' என்பதில் 'பறை' என்ற சொல்லுக்கு உபாயமாகச் சொல்லி எம்பெருமானை நீயே உபாயமாக வேணும் என்பதைக் காட்டுகிறார். இதனால் தக்கநெறி சொல்லப்பட்டதாயிற்று.[100]

## 4.4 தடை இயல்பு :

எம்பெருமானை உபாயமாக பற்றினவர்களுக்கு புண்யபாபமான இருவினைகள் விரோதிகளாகும். அந்த வகையில் நோன்பிலே இழிகின்றவர்களுக்கு ஆண்டாள் மறைவாகக் குறிப்பிடும் எம்பெருமானோடு கலத்தல் என்பதற்கு 'தங்களிடம் உள்ள பாவங்களைப் போக்க இறைவனுடைய நாமங்களை பக்தியோடு சொல்லவே பாவங்கள் உருமாய்ந்து போகும்' என்பதற்குச் சேர 'மாயனை' என்ற பாடலில் 'போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்' என்று தடையியல்பை அருளியது நோக்கத்தக்கதாகும்.[101] மேலும் 'சிற்றஞ்சிறுகாலே' என்ற பாடலில் 'மற்றை

நங்காமங்கள மாற்று' என்பதற்கு 'நாங்கள் எங்களுக்கு என்று இருக்குமதுவும் நீயும் இவர்களுக்கு என்று இருக்குமதுவும் ஆகிய இரண்டும் விரோதியாகையாலே அத்தைத் தவிர்த்துத்தரவேணும்' என்கிறார்கள். இதனால் தடையியல்பு சொல்லப்பட்டதாயிற்று.

## 4.5 பேற்றின் இயல்பு :

திருப்பாவையின் கருத்தாக, எம்பெருமானுக்கு அடிமையாய் இருக்கிற இந்த ஆத்மா துன்பப்படாதபடி பண்ணி இந்த ஆத்மாவின் அடிமைக்குத் தக்கபடி கைங்கர்யங்களையும் கொடுத்து, அந்த கைங்கர்யமும் இந்த ஆத்மா சரீரத்தோடு உள்ளவரை இருக்கும்படி பண்ணி அருள வேணும் என்று உரைப்பர்.[102] இதுவே பேற்றின் நிலையாகும். இதுதன்னையே ஆண்டாள் சிற்றஞ்சிறுகாலையில் 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்பதினால் பேற்றின் இயல்பை உறுதிப்படுத்துகிறாள். இவ்விடத்தில் பரதனோடு இராமனுக்கு சம்பந்தம் ஒத்திருக்கச் செய்வதே, பரதனைப்போலே பிரிந்திருக்கை அன்றிக்கே இளைய பெருமாளைப்போலே சேர்ந்திருந்து அடிமை செய்யவேணும் என்றும், 'உனக்கே' என்கிற பிரிநிலைக்கு எம்பெருமான் உகந்த அடிமை செய்வோம் என்றும், அகங்காரத்தினால் உண்டாகிற அடிமை உறுதிப்பொருளாகாது (புருஷார்த்தமாகாது) என்றும் உரைத்ததினால் பேற்றின் இயல்பு அறியலாயிற்று.[103] இப்படி எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவதில் ஊற்றமுடையவர்களுக்கு (சித்தோபாய நிஷ்டர்க்கு) காலதாமதம் என்ற காரணம் இல்லாமையாலே எம்பெருமானை அடைவதில் உள்ள வேகத்தாலே (துறையாலே) பதறுகிறார்கள்[104] என்று 'நோற்று' என்ற சொல்லுக்கேற்ப உரைப்பர். மேலும் எம்பெருமானை

உபாயமாக பற்றினவர்களுக்கு கர்ம, ஞான, பக்திகள் உண்டு என்றும் இவர்களுடைய கர்மமாவது கைங்கர்யத்திலே புகும் என்றும், ஞானமாவது ஆன்மாவினுடைய இயல்பாகிய தன்மையிலே புகும் என்றும், பக்தியாவது எம்பெருமானை அடைவதிலே உண்டாகிற ருசியிலே புகும் என்றும் கூறியுள்ளதால் எம்பெருமானாகிய உபாயத்தின் இயல்பு அறியப்பட்டதாயிற்று.[105]

## 4.6 மும்மறைகளின் ஆழ்பொருள் காட்டல் :

மேற்கூறிய அர்த்த பஞ்சகத்தைச் சுருக்கமாக மும்மறைகளான (ரகஸ்யத்திரயம்) பெரிய திருமந்திரம், துவயம், சரமச்லோகம் என்னும் மூன்று ரகஸ்ய மந்திரங்களில் காணலாம்.

'ஓம் நமோ நாராயணாய' என்கிற திருமந்திரத்தை ஸ்ரீபதரிகாச்சிரமத்திலே நாராயணன்தானே சீடனாயும் ஆசாரியனாயும் இருந்து வெளியிட்டான் என்றும், 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:' என்கிற துவய மந்திரத்தை ஸ்ரீவிஷ்ணு லோகத்தில் தான் பிராட்டிக்கு உபதேசித்தான் என்றும், 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச :' என்கிற சரம ச்லோகத்தைப் பாரதப் போரில் திருத்தேர்த்தட்டில் தன்னைப் பற்றிய அருச்சுனனுக்கு உபதேசித்தான் என்றும் மணவாள மாமுனிகள் கூறுவர்.[106] இம்மும்மறைகளின் பொருள்களை பிள்ளை மூவாயிரப்படியில் ஆங்காங்கே குறிப்பிட்டது அறியற்பாலதாகும்.

**4.6.1 திருமந்திரம் :**

திருமந்திரத்தில் 'நாராயணாய' என்கிற சொல்லுக்கு வேற்றுமைத்தொகையாகவும், (தத்புருஷ ஸமாஸம்) அன்மொழித் தொகையாகவும் (பஹுவ்ரீஸமாஸம்) பொருள் வழங்குவர் மாமுனிகள்.[107] வேற்றுமைத் தொகையாவது நாரங்களான நித்திய வஸ்துக்களான திரளுக்கு இடமாக இருப்பவன் (தங்குமிடம்) எவனோ அவனே நாரயணன் (நாராயணாம் அயநம் ய: ஸ: நாராயண:) என்றபடி. பிள்ளையும் 'வையத்து வாழ்வீர்காள்' என்ற பாட்டில் 'பரமன்' என்ற சொல்லுக்கு அந்தத் திருமந்திரத்தின் பொருளான குண பூர்த்தியைச் சொல்லுகிறது என்பர். குண பூர்த்தியாவது வேற்றுமைத் தொகையால் சொல்லப்பட்ட குணயோகமாகும். அதாவது தகட்டிலே அழுத்தின மாணிக்கம் போலே திருவனந்தாழ்வான் மேலே படுத்த பிறகு வடிவிலே பிறந்த ஒளியின் பெருமை என்றும், உலகைக் காக்கும் பொருட்டு வந்து படுத்திருக்கையாலே கருணை என்னும் குணத்தின் ஏற்றம் என்றும், எல்லாவற்றாலும் பெரியவன் என்றும் உரைப்பர் பிள்ளை.[108] இதனால் முறையே வடிவின் குணமும், ஸ்வரூபத்தின் குணமும், எல்லாவற்றாலும் பெருமையும் ஆகிய குணயோகம் சொல்லப்பட்து என்பர் அரும்பத உரைகாரர்.[109]

அன்மொழித்தொகையாவது நாரங்களாவன நித்திய வஸ்துக்களுடைய திரளை இடமாக உடையவன் எவனோ அவனே நாராயணன் (நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:) ஆகும். இக்கருத்தையே 'ஓங்கி உலகளந்த' என்கிற தொடருக்கு ஏற்ப இவை தன்னை இடமாக உடையவன் என்று அன்மொழித் தொகையின்

பொருளை குறிப்பிட்டது அறியற்பாலதாகும். ஆக, முதல்பாட்டில் 'நாராயணன்' என்ற சொல்லும் இரண்டாம் பாட்டில் 'பாற்கடலில் பையத்துயின்ற பரமன்' என்கையாலே வேற்றுமைத் தொகையில் சொன்ன குணயோகமும், 'ஓங்கி உலகளந்த' என்னும் பாட்டில் அன்மொழித்தொகையில் எங்கும் பரந்துள்ளமையும் சுட்டிக்காட்டியது குறிப்பிடத்தக்கதாகும்.[110]

'ஆழிமழைக்கண்ணா' என்கிற பாடலில் 'ஊழி முதல்வன்' என்பதற்கு 'உலகுக்கு காரணமானவன்' (ஜகத்காரண பூதன்) என்று உரையிடுவர்.[111] இதனால் திருமந்திரத்தில் அகாரத்தின் இயல்பான பொருளான காரணமாம் தன்மை சொல்லப்பட்டதாயிற்று.[112]

**4.6.2 துவயம் :**

துவய மந்திரத்தில் முதல் பதமான 'ஸ்ரீ' என்பதனால் பெரிய பிராட்டியாரின் திருநாமம் என்றும், இவள் புருஷகாரம் - சிபாரிசு செய்தாலல்லது எம்பெருமான் காரியம் செய்யான் என்றும் கூறுவர்.[113] இதனை உட்கொண்டே 'உந்து மதகளிற்றன்' பாடலில் நப்பின்னை பிராட்டியை எழுப்பும் போது தங்களுக்கு புருஷகாரமான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிறார்கள் என்று உரையிடுவர் பிள்ளை. மேலும் அவள் சிபாரிசு செய்யும் தன்மையைச் சொல்லும் வகையில் அவள் புருஷகாரமாக எம்பெருமானைப் பற்றுவதால் பேற்றின் சம்பந்தம் உண்டாகும் என்றும் இதனை காகாசுரன், விபீஷணன் முதலானோர் பக்கலில் காணலாம் என்றும் உரைப்பர்.[114] இதனை விளக்கும் வகையில் சீதையை அநாதரித்து இராமனைப் பற்றின சூர்ப்பணகை துன்பப் பட்டதையும் ராமனை விட்டு சீதையைப் பற்றின இராவணன் மாண்டதையும்,

இருவரையும் பற்றினாலன்றோ விபீஷணனைப் போல வாழலாம் என்று புருஷகாரத்தின் பெருமையைச் சுட்டிக்காட்டுவர். அந்த வகையில் ஆண்டாள் உள்ளிட்ட ஆய்ச்சியர்கள் அதிகமான ஆசையின் தூண்டுதலாலேமுந்துற முன்னம் கண்ணன் பக்கலிலே சென்று அங்கு கார்யம் பயன்படாமையால் முறையாக போக வேண்டும் என்று புருஷகாரத்திலே இழிந்தார்கள் என்று நப்பின்னை பிராட்டியை எழுப்புவதின் முக்கியத்துவத்தை பிள்ளை குறிப்பிடுவது அறியற்பாலதாகும்.[115] இதனால் துவயத்தின் 'ஸ்ரீ' சப்தத்தின் பொருள் சொல்லப்பட்டதாயிற்று. மேலும் புருஷகாரத்தின் பெருமையை வலியுறுத்தும் வகையில் எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால் 'ஸ்ரீமத்' சப்தத்தில் உள்ள 'மது'ப்பாலே எம்பெருமானோடு உள்ள நித்திய யோகத்தைச் சொல்லி 'தத்துவமன்று தகவு' என்பதற்கு பிராட்டியினுடைய புருஷகாரத்திற்கும் கருணைக்கும் சேராது என்று ஆண்டாள் பாடல் வழி புருஷகாரத்தை பிள்ளை வலியுறுத்துவதைக் காணலாம்.[116] மேலும் 'வங்கக்கடல் கடைந்த' என்ற பாடலில் 'மாதவனை' என்பதற்கு 'பற்றப்படுவதாய் அனுபவிக்கும் படியான உயர்ந்த பொருளான பிராட்டியோடு கூடியிருக்கும் எம்பெருமான்' என்று பிள்ளை உரையிட்டது துவயத்தின் முதல்பதமான 'ஸ்ரீமத்' என்பதன் பொருள் சொல்லப் பட்டதாயிற்று. அதே சமயத்தில் பற்றப்படுபவர்களின் குற்றத்தை பொறுப்பித்து விருப்பங்களைச் செய்விப்பவனான பிராட்டி அருகே உண்டு என்பதை புருஷகாரத்தின் பெருமையும் சொல்லப்பட்ட தாயிற்று.[117] மேலும், அதே பாடலில் 'செல்வத் திருமாலால்' என்பதற்குச் சேர மண்ணாடும் விண்ணாடும் கூடிய திருமகள் கேள்வன் என்று சொல்லியதால் துவயத்தின் இரண்டாவது தொடரில்

'ஸ்ரீமதே' என்பதன் பொருள் சொல்லப்பட்டதாயிற்று. இதுபற்றியே, இப்பாட்டின் தொடக்கத்திலே (உபக்ரமத்திலே) 'மாதவனை' என்று பிராட்டி சம்பந்தம் சொல்லி, முடிவிலும் 'செல்வத்திருமாலால்' சொல்லுகையாலே துவயத்தில் சொல்லியபடியே இங்கும் (திருப்பாவையிலும்) சொல்லிற் றென்கை என்று பிள்ளை துவயத்தின் ஆழ்பொருளை ஒப்பிட்டுக்காட்டியது அறியற்பாலதாகும்.[118]

### 4.6.3 சரமச்லோகம் :

சரம ச்லோகத்தில் 'மாம்' என்ற பதத்தாலே எம்பெருமானை தஞ்சம் என்று பற்றுகைக்கு உரித்தான குணச்சிறப்புக்களை எல்லாம் சொல்லுவதாகக் கூறுவர். அதாவது 'மாம்' என்ற பதத்திலே தாயன்பு (வாத்ஸல்யம்), தலைவனாம் தன்மை (ஸ்வாமித்வம்), நீர்மை (சௌசீல்யம்), எளிவந்த தன்மை (சௌலப்யம்) ஆகிய குணச்சிறப்புக்கள் நேராக பிரகாசிக்கிறது என்றபடி.[119] இதுபற்றியே மகாபாரதத்துக்கு உள்ளீடான மையல் (வியாமோக) குணத்தை 'மாலே' என்கிற பாட்டின்நிலையிட்டார்கள் என்று உரைப்பர்.[120] இதனை உட்கொண்டே அரும்பத உரைகாரர் 'மாம்' என்ற தன் கருத்தான எளிவந்த தன்மை, தாயன்பு, வடிவழகு ஆகியவற்றை 'மணிவண்ணா' என்ற சொல்லுக்குச் சேர எடுத்துக்காட்டுவர்.[121] மேலும் 'மாலே மணிவண்ணா' என்கிற இத்தால் 'மாம்' என்கிற இடத்தில், சௌலப்யத்தைச் சொல்லிற்று என்று குறிப்பிடுவர்.[122]

சரம ச்லோகத்தில் இரண்டாவது வாக்கியத்தில் 'அஹம்' என்பதற்கு எம்பெருமான் அடியார்களின் செயலைத் தலைக்கட்டிக்கொடுப்பதற்கு உரிய

குணங்களை எடுத்துரைப்பர். அதாவது எல்லாவற்றையும் அறிந்தவனாய் (ஸர்வக்ஜ்ஞனாய்) எல்லா ஆற்றலையும் உடையவனாய் (ஸர்வ சக்தியாய்) உரியனான (பிராப்தனான) நான் என்றபடி[123] இது தன்னையே 'மாலே மணிவண்ணா' என்ற பாடலில் 'ஆலினிலையாய்' என்பதற்கு சிறியதொரு வடிவைக்கொண்டு எல்லா உலகத்தையும் சிறுவயிற்றிலே வைத்து முளைத்துக்கொண்டேயிருக்கிற ஆலந்தளிரிலே படுத்துக்கொண்டிருக்கின்ற ஆற்றலை எடுத்து உரைப்பர். எனவே 'ஆலினிலையாய்' என்கிற அடைமொழியில் 'அஹம்' என்கிற இடத்தில் வேறு உபாயங்களை விரும்பாது இருக்கிற எம்பெருமானாகிற உபாயமாம் தன்மையைச் (ஸஹாயாந்தர நிரபபேக்ஷமான உபாயவேஷம்) சொல்லிற்று என்று உரைப்பர்.[124]

## 4.7 திருப்பாவையில் திருநாமச்சிறப்பு

திருப்பாவையில் எம்பெருமானைப்பற்றி, அவன் குணங்கள் வாயிலாகவும், அந்த குணங்கள் செய்வித்த வீரச்செயல்கள் வாயிலாகவும் ஆண்டாள் இட்ட திருநாமங்கள் பலப்பல. அந்த வகையில் எம்பெருமானுடைய திருநாமங்கள் சிறப்புடையன. பிஞ்சியிலேயே பழுத்த ஆண்டாள் மானிடவர்க் கென்று வாழமாட்டாத தன்மையுடையவளாய் கண்ணனைக் கண்டு அவனுக்கு கைங்கர்யம் செய்வதிலேயே நோக்குடைய வளாய் இருக்கிறாள். இதைக் கருத்தில்கொண்டு ஆண்டாள் அருளிய திருப்பாவையில் திருநாமங்கள் பொலிவு பெறுகின்றன.

ஆய்ப்பாடி பெண்களைச் சொல்லும் பொழுது 'செல்வச் சிறுமீர்காள்' என்று அழைக்கிறாள்.

சிறுமிகளுக்குச் செல்வமாவது கண்ணனோடு ஒக்க ஆய்ப்பாடியில் பிறந்ததை எண்ணியே சொல்லுகின்றாள்.[125]

கண்ணன் பிறப்பதற்கு முன்பு நந்தகோபன், எறும்பையும் சாவமிதியாத சாதுவாக இருந்தார். கண்ணன் பிறந்த பின்பு தொட்டிலிலே குழந்தையை இருத்தி அவனுக்கு கம்சனால் ஆபத்து வராமல் பயந்து வேலை புகரெழத்தீட்டிப் பிடித்திருப்பார். இதுபற்றியே நந்தகோபனை 'கூர்வேல் கொடுந் தொழிலன்' என்கிறாள் ஆண்டாள். அப்படிப்பட்ட நந்தகோபனிடம் கண்ணன் பவ்யனாக இருக்கிறான். இதுபற்றியே 'நந்தகோபன் குமரன்' என்று திருநாமம் இடுகிறாள். ஆனால் அன்னையான யசோதையிடம் தான் கற்ற வித்தைகளையெல்லாம் காட்டுவான்; கண்ணனை மாறாமல் பார்த்ததினால் அவன் கண்ணழகையெல்லாம் தன் கண்ணிலே குடிகொண்டு 'ஏரார்ந்த கண்ணி யசோதை' என்று தாம் பெயர்பெற்று, அதனால் ஆண்டாள் கண்ணனை 'இளம் சிங்கம்' என்று சொல்லுகின்றாள்.[126]

அப்படிப்பட்ட கண்ணன் மேகம் போன்ற கறுமைநிற திருமேனியைக் கொண்டும் சிவந்த கண்ணுடைய வனாகவும் இருக்கின்றான்; மேலும் ஒளிவிடுகின்ற முழுமதி போன்ற முகத்தையும் உடையவன்; இவற்றைச் சேர்த்தே 'கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்' என்கிறாள் ஆண்டாள்.[127] ஆய்ப்பாடியில் கண்ணனாய்ப் பிறப்பதற்கு முன்பு அயர்வறும் அமரர்களுக்கு அதிபதியானவன் விண்ணாட்டுக்கும் மண்ணாட்டுக்கும் தலைவனுமாவான்; அறிவுள் பொருளென்ன, அறிவில் பொருளென்ன ஆகிய இரண்டையும் இயங்க வைப்பவன்; ஞானம், சக்தி முதலான குணங்களென்ன, தாயன்பு, எளிவந்த தன்மை, அறப்பெரியவன் அறத் தாழ்ந்தவனோடு புரையறக்கலக்கும்

தன்மை முதலான குணங்களென்ன இவற்றுக்கெல்லாம் இருப்பிடமான பெயரையுடைய வனை 'நாராயணன்' என்கிறாள் ஆண்டாள்.[128]

எம்பெருமான் பரமபதத்தில் இருக்கும் நிலையை எண்ணி 'மாயன்' என்று சொல்லுகின்றாள். அப்படி இருக்கும் மாயன் பரமபதத்தைவிட்டு வடமதுரையிலே மிடுக்குதோற்ற பிறந்தான். இதுபற்றியே 'வடமதுரைப் பிறந்த மைந்தன்' என்கிறாள். அந்த மிடுக்கு தோற்றச் செய்த செயல்களோ பல பல. கண்ணனும் கோபியர்களும் களித்து விளையாடிய இடம் யமுனை. அந்த யமுனைக்கரையிலே ஒருவருக்கொருவர் நீரைக்கொப்பளித்து விளையாடுவர். பெண்கள் படும் துறையே கண்ணன் படும் துறையுமாயிற்று. அவர்கள் வாய்நீரே யமுனையைத் தூய்மை செய்தது. இது தோற்ற 'தூயபெருநீர் யமுனைத் துறைவன்' என்கிறாள் ஆண்டாள்.[129] யசோதையோ ஆயர்குலத்துக்கு விளக்குபோன்றவள். அந்த விளக்குக்கு அணிசேர்க்க வந்தவன் ஆயர்மகனான கண்ணன். இதுபற்றியே 'ஆயர்குலத்தில் தோன்றும் அணிவிளக்கு' என்கிறாள் ஆண்டாள். அவன் யசோதையிடம் கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு தன் அழகையெல்லாம் தாய் அனுபவிக்கும் படி இருந்தான். இதுபற்றியே பிள்ளை 'தாயைக்குடல்விளக்கம் செய்த தாமோதரன்' என்று ஆண்டாள் சொல்லியதாக உரைப்பர்.[130]

திருப்பாவையை வேதமனைத்துக்கும் வித்து என்பர். அந்த வேதம் போற்றிய எம்பெருமானை ஆண்டாள் சொல்லும்போது 'வெள்ளத்தரவில் துயில்அமர்ந்த வித்து' என்று திருநாமம் இடுகிறாள். அதாவது, எம்பெருமான் தன்னுடைய அடியவனான திருவனந்தாழ்வான்மேல் படுத்திருக்கிறானாம். அத்திருவனந்தாழ்வான் மென்மை

யாகவும், குளிர்ச்சியாகவும், நாற்றங்களுடையவனாகவும் இருப்பர். அவர் மூச்சுப்பட்டு மதுகைடபர்கள் மடிந்தார்கள். இப்படிப்பட்ட பெருமை பொருந்திய திருவனந்தாழ் வானோ கடலின் நீர் எம்பெருமானுக்கு உறுத்தாமைக்குப் படுத்த படுக்கையாக இருப்பர். இவன்மேல் எம்பெருமான் உலகத்தைக் காப்பதற்காக கள்ள நித்திரை கொள்ளுகின்றான். அருகில் இருக்கும்பிராட்டிமார்கள் திருமுலைத் தடத்தாலே நெருக்கினாலும் உணராது உலகைக் காக்க துயில்கின்றான். திருவவதாரத்திற்கு நாற்றங்காலன்றோ! திருப்பாற்கடல் என்பர் பிள்ளை. பிறந்த பிறவிகள் பொறாமையாலே மறுபடியும் பிறக்கைக்கு அடியிட்டபடியை 'வித்து' என்ற சொல்லாலே சொன்னதாக உரைப்பர்.[131]

கண்ணன் தன்னுடைய வியப்பான திருவிளையாடல் களாலே இளம்பெண்களை எழுதிக்கொண்டு அவர்கள் விருப்பத்திற்கேற்ப அடங்கியிருப்பவன். இதுபற்றியே 'மாமாயன்' என்கிறாள். இப்படிப் பெண்களை அடிமை கொண்டு ஒரு நாட்டுக்காக (பரமபதம்) கையாளாய் இருக்கின்றான். இதனால் 'வைகுந்தன்' என்று சொல்கின்றாள். இப்படி மேன்மைக்குக் காரணமான 'வைகுந்தன்' என்ற திருநாமமென்ன, நீர்மைக்கு காரணமான 'மாமாயன்' என்ற திருநாமமென்ன இவ்விரண்டுக்கும் ஒப்பான பிராட்டியோடு கூடியிருக்கும் தன்மையான 'மாதவன்' என்ற திருநாமம் முதலான ஆயிரக்கணக்கான திருநாமங்கள் எம்பெருமானுக்கு உண்டு என்று உரைப்பர் பிள்ளை.[132]

****

## இயல் - 4

### அடிக்குறிப்புகள் :

1. ப்ராப்யஸ்ய ப்ரமணோரூபம் ப்ராப்துச்ச ப்ரத்ய காத்மந:
   ப்ராப்தயுபாவம் பலம்ப்ராப்தே : ததா ப்ராப்தி விரோதி: ..............(ஹாரீதஸ்ம்ருதி 8-141)
2. மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
   தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்
   ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
   யாழினிசை வேதத்தியல். (திருவாய்மொழித் தனியன்.)
3. பாவை. உரை அவதாரிகை ப.10
4. விஷ்வக்ஸேந ஸம்ஹிதை
5. பாவை. பா. 2, உரை ப. 53
6. பாவை. பா. 5, உரை ப. 133
7. பாவை. பா.1 உரை ப. 30
8. பாவை. பா. 9. உரை ப. 185
9. பாவை. பா. 10. உரை ப. 197
10. பாவை. பா. 21. உரை ப. 366
11. பாவை பா. 1. உரை ப. 37
12. பாவை பா. 1. நாராயணனே ப. 37
13. பாவை பா.4, ப. 104.
14. பாவை பா.4 உரை ப. 101
15. பாவை பா. 5 தொழுது, உரை ப.124
16. பாவை பா.4 தாழாதே உரை ப.104
17. பாவை பா.8 ஆவாவென்று ஆராய்ந்தருளும் உரை ப. 173

18. பாவை பா. 9 மாதவன் உரை ப. 185
19. பாவை பா. 2 பாற்கடலுள் பையத்துயின்ற உரை ப. 62
20. மேலது ப. 62
21. மேலது ப. 62
22. பாவை சி.அ. உரை ப. 62
23. பாவை பா. 6, உரை ப. 142
24. சித்திரச்சிலம்பு ப. 103
25. பகவத் அவதார ரஹஸ்யம் ப. 4
26. பாவை பா. 3, 17, 23.
27. பாவை பா. 3 உரை ப. 83.
28. பாவை பா. 17 உரை பக். 298, 299.
29. பாவை பா. 24 உரை பக். 409, 410.
30. பாவை மேலது ப. 410
31. பாவை பா. 12, 13, 24.
32. பாவை பா. 12 உரை ப. 225
33. பாவை பா. 12 மேலது ப. 225
34. பாவை பா. 13 மேலது ப. 237
35. பாவை பா. 13 பக். 237, 238.
36. பாவை பா. 24 ப. 411
37. பாவை பா. 17 உரை பக். 299-300.
38. பாவை பா. 1 உரை பக். 33, 34
39. பாவை பா. 25 உரை ப. 427
40. பாவை பா. 25 உரை ப. 429
41. பாவை பா. 29 உரை ப. 508
42. பாவை பா. 6 உரை ப. 122
43. பாவை பா. 6 உரை ப. 141
44. மேலது ப. 141
45. பாவை பா. 24 உரை ப. 412
46. மேலது ப. 412.
47. பாவை பா. 12, உரை ப. 236.

48. பாவை பா. 24, உரை ப. 413.
49. பாவை பா. 8 , உரை ப. 172.
50. பாவை பா. 15, உரை ப. 264.
51. பாவை பா. 8, உரை பக். 172-173.
52. பாவை பா. 25, உரை ப. 430.
53. பாவை பா. 25, உரை ப. 431.
54. பாவை பா. 18, உரை ப. 313.
55. பாவை பா. 18, பந்தார்........வரை பக். 314-315.
56. பாவை பா. 19 கொத்தலர்பூங்குழல்... பக். 333-335.
பாவை பா. 20 செப்பென்ன..... பக். 352-353.
57. பாவை பா. 5, உரை ப. 119.
58. மேலது பா. 2, உரை ப. 58.
59. மேலது பா. 3, உரை ப. 89.
60. மேலது பா. 1, உரை ப. 30.
61. மேலது பா. 11, உரை ப. 209.
62. மேலது பா. 16, உரை ப. 276.
63. மேலது பா. 16, உரை ப. 279.
64. மேலது பா. 26, உரை ப. 449.
65. மேலது பா. 28, உரை ப. 482.
66. பாவை பா. 10 உரை ப. 210
67. பாவை பா. 7 உரை ப. 158
68. பாவை பா. 1 உரை ப. 31
69. பாவை பா.6, உரை பக். 137-140.
70. உரை அவதாரிகை ப. 10
71. பாவை பா.1, உரை ப. 26.
72. பாவை பா.1, உரை ப. 27
73. பாவை பா. 1, உரை ப. 28
74. பாவை பா. 1, செல்வச்சிறுமீர்காள், உரை ப.31.
75. பாவை பா. 1, நமக்கே, உரை ப. 37.
76. பாவை பா. 6, உரை ப. 141

77. உரை அவதாரிகை ப. 9
78. பாவை பா. 1, நீராட, உரை ப. 28.
79. பாவை பா. 1, போதுவீர் போதுமினோ, உரை ப. 29.
80. பாவை பா. 1, கொடுந்தொழிலன் ப. 33.
81. பாவை பா. 5, தூவி ப. 123
82. பாவை பா. 4, பாழியந்தோளுடை, உரை ப. 105.
83. பாவை பா. 4, அவதாரிகை உரை ப. 100
84. பாவை பா. 3, பற்றிவாங்க உரை ப. 89.
85. உரை அவதாரிகை ப. 10.
86. பாவை பா. 1, கொடுந்தொழிலன், உரை ப. 33
87. பாவை பா. 1, போதுவீர் போதுமினே, உரை ப. 29.
88. பாவை பா. 15, நானேதான் ஆயிடுக உரை ப. 262.
89. மேலது ப. 262.
90. பாவை பா. 2, செய்யாதன செய்யோம், உரை ப. 67.
91. முமுட்சுப்படி சூத். எண். 2, மாமுனிகள் உரை ப.4.
92. பாவை பா. 28, உரை ப. 509.
93. பாவை பா. 22, அவதாரிகை ப. 378
94. பாவை பா. 29, உரை ப. 508
95. பா. 29 உரை பக். 507-508.
96. பகவத் விஷயம் ஈடு முதல் தோற்றுவாய் (முதல் ச்ரிய.பதிப்படி) ப. 16.
97. பாவை பா. 1, உரை ப. 37.
98. பாவை பா. 16, உரை ப. 216.
99. பாவை பா. 21, உரை ப. 368.
100. பாவை பா. 28, பெ.அ.ப. 478; பா. 29, அவதாரிகை உரை ப. 506.
101. பாவை பா. 5, ப. 124.
102. பாவை அவதாரிகை உரை ப. 10.
103. பாவை பா. 29, உரை ப. 509.

104. பாவை பா. 10, உரை ப. 196.
105. பாவை பா. 10 உரை ப. 196.
106. முமுட்சுப்படி வியாக்கியானம் முன்னுரை; ப. 2.
107. திருமந்திர ப்ரகரணம் சூத். 95, உரை ப. 74.
108. பாவை பா. 2, உரை ப. 62.
109. பாவை பா. 2, சி.அ. ப. 62.
110. பாவை பெ.அ. பக். 84-85.
111. பாவை பா. 4, ப. 104, உரை ப. 104.
112. முமுட்சுப்படி சூத். 35, உரை ப. 38.
113. முமுட்சுப்படி சூத். 123, 119.
114. பாவை பா. 18, உரை ப. 310.
115. பாவை பா. 18, உரை ப. 311.
116. பாவை பா. 19, உரை ப. 336.
117. பாவை பா. 30, உரை ப. 531.
118. பாவை பா. 30, உரை பக். 531-533.
119. முமுட்சுப்படி சரமச்லோக பிரகரணம் சூத். 217.
120. பாவை பா. 26, உரை ப. 441.
121. பாவை பா. 26, சி.அ. ப. 444.
122. பாவை பா. 26, உரை ப. 449.
123. சரமச்லோக ப்ரகரணம் சூத். 244.
124. பாவை பா. 26, உரை பக். 448-449.
125. பாவை பா.1, உரை ப.32
126. பாவை பா.1, உரை ப.33
127. பாவை பா.1, உரை ப.35
128. பாவை பா.1, உரை ப.36-37.
129. பாவை பா.5, உரை ப.119.
130 பாவை பா.5, உரை ப.120.
131. பாவை பா.6, உரை ப.142.
132. பாவை பா.9, உரை ப.185.

# இயல் - 5

## முடிவுரை

**5.0** இந்த ஆய்வினால் மூவாயிரப்படி உரையாசிரிய ரான பெரியவாச்சான்பிள்ளையின் உரை மூலம் பின்வரும் முடிவுகள் கண்டறியப்பட்டன.

**5.1** 'தோற்றுவாய்' ஆக அமைந்த முதல் இயலில், தமிழ் இலக்கியத்தில் வைணவ சமய உரை வளர்ச்சியின் உயர்ந்த இடமானது பெரியவாச்சான் பிள்ளையருளிய நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தினுடைய உரையினால் முழுமை பெற்றது காணமுடிகிறது. குறிப்பாக இவரது முதல் உரையான திருவாய்மொழிக்கு அமைந்த இருபத்து நாலாயிரப்படிக்கு அடுத்து, திருப்பாவைக்கு எண்ணிக்கை அடிப்படையில் மூவாயிரப்படி உரை எழுதியதால் திருப்பாவைக்கு உரிய பெருமை புலப்படுத்தப் பட்டுள்ளது. அதே சமயத்தில் பிற்காலத்தில் மூன்று அரும்பத உரைகள் இவர்தம் உரைக்கு அமைந்து மூவாயிரப்படிக்கு மேலும் பெருமை சேர்ப்பதாகத் திகழ்வது கண்டெடுக்கப் பட்டுள்ளது.

**5.2** 'பெரியவாச்சான்பிள்ளையின் வாழ்வும் பணியும்' என்ற இரண்டாவது இயலில் திவ்வியப்பிரபந்த வியாக்யான பரம்பரையின் உட்பிரிவில் நம்பிள்ளைக்கு அடுத்தபடியாக பெரியவாச்சான்பிள்ளை உரையாசிரியராகத் திகழ்வது காணமுடிகிறது.

**5.2.1** பிள்ளை தம் ஆசாரியரிடம் காட்டும் பரிவும், ஆசாரியரான நம்பிள்ளை பிள்ளையை ஆட்கொண்டு அவர்தம் அருளால் எண்ணற்ற உரைகள் வெளிவந்ததும் காணமுடிகிறது.

**5.3** 'உரை அமைப்பும் உரை உத்திகளும்' என்ற மூன்றாவது இயலில் உரையமைப்பை ஆய்வு செய்யும் பொழுது நன்னூல் கூறும் பாயிரத்தின் பதினோரு கூறுகளும் பிள்ளை வழங்கிய உரைக்கு முன்னுரையாக உள்ள அவதாரிகை வழி முழுமையாக அமையப்பெற்றது புலனாகிறது. அதே சமயத்தில் நுவல்வோர் சிறப்பு, நூற்சிறப்பு, நுவல் பொருட்சிறப்பு என்ற வகைப்பாட்டில் அவதாரிகையை பிரித்து ஆயப்பட்டது உரையின் சிறப்பை வெளிப்படுத்தப்பட்டனவாக அறியலாம்.

**5.3.1** 'உரை உத்திகள்' என்ற தலைப்பின் கீழ் பிள்ளை கையாண்ட 36 உரை உத்திகளைக் காணும் பொழுது அவற்றால் பெறப்படும் முடிந்த கருத்துக்கள் நிறுவ முடிகிறது.

**5.3.1.1** பாடல்களின் சொற்கொண்டு அவதாரிகை வைக்கும் நிலையில், பாடலின் உட்பொருளுக்கு ஏற்ப தத்துவ நோக்கில் அவதாரிகை இடுவது, பாடல் கருத்துக்கேற்ப வரலாற்றுச்செய்திகளோடு ஒப்புமை காட்டி அவதாரிகை இடுவது, தமக்கு முன்பு இருந்த ஆசாரியர்களின் வாய்மொழிகளை எல்லாம் பின்பற்றி பொருளாட்சியாக அவதாரிகை இடுவது, மேலும் அந்தந்த பாடலின் உயிரான சொற்களையோ, பொருள்களையோ கொண்டு அவதாரிகை இடுவது, குறிப்பாக 'நோற்றுச் சுவர்க்கம்' என்ற பாடல் அவதாரிகையில் கண்ணனுடைய எண்ணம், பெண்பிள்ளையுடைய எண்ணம், பெண்பிள்ளை பெற்ற பயன் ஆகிய வகைப்பாட்டில் மூன்று வகையாக அவதாரிகை அமைந்தது ஆய்வில் விளக்கப்பட்டுள்ளது.

**5.3.1.2** மேலும் அவதாரிகையில் சொல்லியபடி கருத்தை நிறுவும் வகையில் பாடல்களின் கொண்டுகூட்டு

முறையை அவதாரிகையில் காட்டுவது, பாடல் கருத்தை உரையாடல் போக்கில் அவதாரிகையில் காட்டுவது, அரிமா நோக்கில் அவதாரிகை இடுவது, முதலும் முடிவும்கொண்டு அவதாரிகை இடுவது, முன் பாடலில் சொன்ன கருத்து விளக்கம் பெறுவதற்காக அடுத்த பாடலின் அவதாரிகையில் முன்பாட்டின் கருத்தை இயைபு படுத்துவது, பாடலின் அடிப்படைச் சொல்லையோ, தொடர்களையோ எடுத்துக்கொண்டு அவதாரிகை இடுவது ஆகிய அவதாரிகைக்குரிய உரை உத்திகள் முழுவதையும் பிள்ளை கையாண்டதை உரிய சான்றுகளோடு நிறுவப்பட்டுள்ளது. இத்தகைய உரை உத்திகள் ஆண்டாள் பாடிய பாடல்களின் இயல்புக்கு மூவாயிரப்படி வித்திட்டதாகும்.

இவ்வாறே பாடலின் இயல்பான பொருளோடு சம்பந்தப்பட்ட கருத்தை தெரிவிக்கும் வகையில் வேறு கருத்துப்பொருளையும் காட்டி உரைப்பர். அதே சமயத்தில் தம்மனதில் தோன்றிய வரலாற்றுச் செய்திகளை பாடல் சொல்லோடு ஒப்புமைப்படுத்திச் சொல்லுவது புலனாகிறது. பாடல்களின் குறிப்பை உட்கொண்டு சொல் தொடர்களுக்கு ஆண்டாள் அகத்தே எழுந்த வினாவிற்கு ஏற்ப விடையை உரை மூலம், விளக்குவது 'வையத்து வாழ்வீர்காள்' என்ற பாடல் மூலம் அறியலாகிறது. 'புள்ளும் சிலம்பினகாண்' என்ற பாடலின் உரையாடல் போக்கில் உரை வழங்குவது பிள்ளையின் உரைத்திறன் வெளிப்பாடாகும். வடமொழி நூல் வல்லமை பெற்ற பிள்ளை வாக்குவாத நெறிமுறையில் உரை வழங்கியதால், நுட்பமான பொருள் விளக்கப்பட்டதாயிற்று.

**5.3.1.3** பாடலின் சொற்களுக்கு பொருள் வழங்கும் போது தனக்கே உரிய பொருள் இருப்பினும் அதன்ன

மேம்பட உரை நயமாக உரைக்கும் நெறி சிறந்து விளங்குகிறது. பாடலின் சொற்களுக்கோ தொடர்களுக்கோ சந்தேகம் தீரும் வகையில் வெளிப்படையான் பொருள் வழங்கும் உத்தி சிறந்து விளங்குகிறது.

**5.3.1.4** பாடலில் உள்ள சொற்றொடர்களுக்கு பல்வகையான பொருளைச் சுட்டும் உத்தியால் ஆண்டாள் திருவுள்ளம் அறிந்து பல புதுப் பொருள்களைத் தோண்டி எடுத்து நமக்கு அளிப்பதாக உள்ளது.

**5.3.1.5** உள்ளுறை பொருள் (ஸ்வாபதேசம்) என்ற உத்தியின் வாயிலாக ஆன்மாவிற்குரிய பல்வேறு இலக்கணங்களை, பாடலுக்குரிய பொருளை உள்ளூர ஆழ்ந்து அளித்ததைத் தொகுத்துக்காணும் பொழுது உலக மக்கள் அறிய வேண்டியதின் அவசியத்தை வெளிப்படுத்தப் பட்டதாய் உள்ளது.

**5.3.1.6** பழம்பெரும் உவமைகளை எடுத்தாளும் போது இறைவனின் சிறப்பினை உணர்த்த வல்லனாகவும், தத்துவ பொருளை விளக்கும் போக்கில் அமைந்ததாகவும். மற்றும் அன்றாட வாழ்க்கை, இராமாயண பாரத, நிகழ்ச்சிகள், இயற்கை, உயிரினம், மருத்துவம், அரசியல் முதலான உவமைகளை எடுத்தாளும் பொழுது பாடலின் சொற்கருத்தை நன்கு உணர கையாண்டதை அறிகிறோம்.

**5.3.1.7** மற்ற ஆழ்வார் பாடலைக் கொண்டும் மற்ற வடமொழி நூல் மேற்கோள்களைக்கொண்டும் ஆண்டாள் பாடல்களைத் தெளிவு செய்ய இந்த உரை அமைகிறது. இதனால் வேத, உபநிடத, இதிகாச புராணச்செய்திகள் பகவத்கீதை, திவ்வியப்பிரபந்தம் விளக்கம் பெறுவதை காணலாம்.

**5.3.1.8** முன்னோர்களின் நயஉரையின் கீழ் வரலாற்றுச் செய்திகளும், (ஐதீகங்களும்) பொருளாட்சி களும் (நிர்வாகங்களும்) தனிச்சிறப்பு பெறுகிறது.

**5.3.1.9** பண்டைய நாகரீகத்தின் அடிப்படையில் உலக வாழ்க்கையின் பழக்க வழக்கங்களான தாயன்பு, தாய்பிள்ளை உறவு முதலானவை ஆங்காங்கே உரை போக்கில் பொதியவைத்துள்ளமை குறிப்பிடத் தக்கது. இவ்வாறு உரை உத்திகளைக் கண்டறிய முடிகிறது.

**5.3.1.10** இலக்கண முறையை ஒட்டி எழுதும் பிள்ளையின் உரையில் தம்முடைய புலமையை வெளிப்படுத்தும் வகையில் இவர்தம் உரையில் சொல், தொடர், அணி என்ற மூன்று வகைப்பாட்டில் இலக்கண குறிப்பு காணமுடிகிறது. இதனால் இவருடைய இலக்கண பயிற்சி புலப்படுகிறது.

**5.4** 'சமயக்கருத்துக்கள்' என்னும் நான்காவது இயலில் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு பரம்பொருளான இறைவனை உள்ளபடி அறிந்து அவனையே நெறியாகப்பற்றி அவனுகப்புக்கே ஆட்பட்டு அடிமை செய்ய வேண்டும் என்ற கருத்தை விளக்கும் வகையில் ஐம்பெரும் பொருள்களான இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடை, பேறு ஆகியவற்றை உட்கொண்டு பிள்ளைதம் உரையில் சுருக்கமாக காட்டியது இந்த இயலில் ஆயப்பட்டுள்ளது.

**5.4.1** இறைநிலை என்ற வகைப்பாட்டில் இறைவனுடைய ஐந்து நிலைகளான விண்ணாட்டுநிலை (பரம்), அணிவகுப்புநிலை (வியூகம்), பிறப்பு நிலை (விபவம்), உள்ளுறை நிலை (அந்தர்யாமி) மூர்த்தி வழிபடுநிலை (அர்ச்சை) ஆகியவற்றை ஆண்டாள் பாடல்கொண்டு நிலைநாட்டப்பட்டுள்ளது. இதில் பரமபதத்தில் இருக்கும் இறைவன் அயர்வறு அமரர்களுக்குத் தலைவன் என்றும், பிராட்டியோடு கூடி மேன்மைக்குத் தகுதியான தலப்பெருமையை உடையவன்

என்றும், எல்லாருக்கும் தலைவனாய் இருந்து அவரவர்கள் விருப்பங்களை முடித்துக்கொடுப்பவன் என்றும் பலபடியான குணங்கள் ஆண்டாள் பாடல்கொண்டு கண்டெடுக்கப்பட்டுள்ளது.

**5.4.1.1** அவ்வாறே 'பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்' என்ற தொடர்மூலம் இறைவனின் அணிவகுப்பு நிலைக்கேற்ப அவன் திருமேனியில் பிறந்த புகர், திருமேனிகுணப்பெருமை, ஸ்வரூப குணப்பெருமை மற்றும் 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்து' என்பதனால் பாற்கடலில் பள்ளிகொண்ட தன்மையும் புலனாகிறது.

**5.4.1.2** இறைவனுக்குப் பெருமை தரும் அவதாரங்களில் உலகளந்த உத்தமனாய் இருந்த இருப்பை சொல்லும் பொழுது இறைவன் உலகளந்ததை தன்பேறாக நினைத்திருந்து செய்தான் என்றும் வரையாதே எல்லார் தலைகளிலும் திருவடியை வைத்து பூமியை அளந்து, வேறு காரணமின்றியே இயற்கையான காத்தற்றன்மையை நிரூபித்தான் என்றும், இப்படிப்பட்ட வீரச்செயலுக்கு அன்று வாழ்த்துக்கூறாத குறை தீர இன்று அத்திருவடிகளுக்கு வாழ்த்துக்கூறி இந்த அவதாரத்திற்குப் பெருமை சேர்த்தது நிறுவப்பட்டுள்ளது.

**5.4.1.3** அவ்வாறே இராமாவதாரத்தில் இராமனுடைய கருணை உள்ளம், வீரம் அழகு ஆகியவை ஆண்டாள் பாடல் மூலம் பிள்ளை நிறுவியது புலனாகிறது.

**5.4.1.4** பலராமனின் அவதாரமும் கண்ணன் பிறப்பதற்கு உறுதுணை என்பதை பிள்ளை நிறுவுகிறார். ஆண்டாளின் உள்ளடங்கா பக்தி முற்றி இடையர்களுடைய நடையும், இடையர்களுடைய தலைமுடியும், இடையர்களுடைய பேச்சும் ஆண்டாளுக்கு இயல்பாக அமைந்து, கண்ணனிடம் உள்ள ஆறாத பக்தியின்

வெளிப்பாட்டால் கண்ணனுடைய பிறப்பு தொடக்கமான வீரச்செயல்கள், பேய்முலை உண்டது, பகாசுரனைக் கொன்றது, மலையைக் குடையாகப் பிடித்தது, கேசியைக் கொன்றது, குவலயா பீடத்தைக் கொன்றது, மல்லரைக் கொன்றது, கம்சனைக் கொன்றது ஆகியன விளக்கம் பெரும் வகையில் பிள்ளை நிறுவியது புலனாகிறது.

**5.4.1.5** ஆண்டாள் போற்றிய நப்பின்னையின் சிபாரிசு செய்யும் தன்மைகளை பிள்ளை உரை மூலம் விளக்கம்பெற்றுள்ளது.

**5.4.1.6** கண்ணனின் பண்பு நலன்கள் மாயன், வையத்து வாழ்வீர்காள், பெரும் பசுக்கள் சீர்மல்குமாய்ப்பாடி, கற்றுக்கறவை, நந்தகோபனுடைய் கோயில், மாலே, கோவிந்தா என்ற சொற்களின் அடிப்படையில் நீர்மை, எளிவந்த தன்மை ஆகிய குணங்கள் உரை மூலம் நிறம் பெறுவது பிள்ளை உரை புலப்படுத்துகிறது.

**5.4.2** மூவாயிரப்படி தோற்றுவாயில் 'உனக்கு அடிமையாயிருக்கிற (சேஷமாயிருக்கிற) இந்த ஆத்மா' என்று பிள்ளை சொல்லியதற்கேற்ப ஆத்மாவின் உண்மை நிலையை உரையில் ஆங்காங்கே எடுத்துச் சொல்வதால் உயிர்நிலையின் உண்மையான இயல்பு அறிய முடிகிறது.

**5.4.2.1** ஆத்மாவிற்கு இறைவன் திறத்து இச்சையே அதிகாரம் என்றும் ஆத்மாவிற்கு நிலைநின்ற செல்வமானது இறைவனுடைய சம்மந்தம் என்றும் கூறியது பாடல்வழி புலனாயிற்று. மேலும் ஆத்மாவின் முக்கியமான இயல்புகளான ஆண்டவன் அடியவன் உறவு, 'உற்றோமேயாவோம் உனக்கே நாமாட்செய்வோம்' என்பதனால் நிறுவப்பட்டது புலனாகிறது.

**5.4.2.2** 'அங்கண்மாஞாலத்து' என்ற பாடலில் ராஜ்யங்களை இழந்த அரசர்கள் எளிவந்த தன்மையோடுகூடிய எம்பெருமானுடைய சிங்காசனத் தின் கீழே கூடியிருந்ததைச் சொல்லியதால் எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மை (அநந்யார்ஹ சேஷத்வம்) நிறுவப்பட்ட தாயிற்று.

**5.4.2.3** 'நீ குற்றேவல் எங்களைக்கொள்ளாமல் போகாது' என்பதனால் எம்பெருமான் ஒருவனே உபாயம் என்கிற அநந்ய உபாயத்வம் சொல்லப்பட்டது. அவ்வாறே 'உன் பொற்றாமரை அடியே போற்றும்' என்பதனால் எம்பெருமானுக்கே மங்களாசாசனம் பண்ணி அவனையே அனுபவிக்கும் தன்மையாகிற அநந்ய போக்யத்துவம் நிறுவப்பட்டது.

**5.4.3** இத்தகைய ஆத்மா எம்பெருமானை அடையும் பொருட்டு அவனை உபாயமாக பற்றவேண்டும் என்பது 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்பதனால் நிறுவப்பட்டது. இதுதன்னையே 'தூயோமாய் வந்தோம்' என்பதனாலும் 'இறைவா நீதாராய் பறை' என்பதினாலும் எம்பெருமானே உபாயம் என்பது நிறுவப்பட்டது.

**5.4.4** இவ்வாறு எம்பெருமானை உபாயமாகப் பற்றுபவர்களுக்கு பாப புண்யமான இருவினைகள் விரோதிகளாய் அவை இறைவனுடைய நாமங்களை பக்தியுடன் சொல்லவே உருமாய்ந்து போகும் என்பதை 'போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்' என்பதற்குச் சேர பிள்ளை தடை இயல்பை நிலைநாட்டுகிறார்.

**5.4.5** 'உனக்கே நாமாட்செய்வோம்' என்பத னால் இந்த ஆத்மாவின் அடிமைக்குத் தக்கப்படி கைங்கர்யங்களையும் கொடுத்து அந்த கைங்கர்யமும் இந்த

ஆத்மா உடலோடு உள்ள வரை இருக்கும்படி பண்ணி அருள வேண்டும் என்று பேற்றின் இயல்பை பிள்ளை உறுதிப்படுத்துகிறார்.

**5.5** இவ்வாறு கண்டெடுக்கப்பட்ட ஐம்பெரும் பொருள்களைத் தெளிவாக்கும் மும்மறைகளான (ரஹஸ்யத்ரயம்) திருமந்திரம், துவயம், சரமச்லோகம் ஆகியவற்றின் கருத்துக்களும் பிள்ளை உரையில் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

**5.5.1** திருமந்திரத்தில் 'நாராயண' என்ற சொல்லுக்குரிய வேற்றுமைத் தொகைப்பொருளான 'பரமன்' என்ற சொல் மூலமாக எம்பெருமானின் கருணை என்னும் குணத்தின் ஏற்றமும் எம்பெருமான் எல்லாவற்றாலும் பெரியவன் என்பதும் பெறப்பட்டது. அன்மொழித்தொகை பொருளாக 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பதனால் எம்பெருமான் எங்கும் பரந்துள்ளமையும் நிறுவப்பட்டது. வைணவத்தில் எம்பெருமானை அடைவதற்கு பிராட்டி சிபாரிசு செய்தல் வேண்டும் இதுதன்னையே 'உந்து மதகளிற்றன்' என்ற பாடலில் நப்பின்னை பிராட்டியை எழுப்புவதன் மூலம் அறியலாயிற்று.

**5.5.2** அவ்வாறே 'மாதவன்' என்பதனால் எம்பெரும்ான் பிராட்டியோடு கூடியிருக்கும் தன்மை பெறப்பட்டது. 'செல்வத் திருமால்' என்பதனால் துவயத்தின் இரண்டாவது தொடரில் உள்ள 'ஸ்ரீமதே' என்பதன் பொருள் பெறப்பட்டது.

**5.5.3** சரம ச்லோகத்தில் 'மாம்' என்ற பதத்தின் பொருளான தாயன்பு, வடிவழகு, எளிவந்தத்தன்மை ஆகியன 'மாலே மணிவண்ணா' என்பதனால் நிறுவப்பட்டது புலனாகிறது. அவ்வாறே 'ஆலினிலையாய்'

என்பதனால் சரம ச்லோகத்தில் இரண்டாவது வாக்கியத்தில் உள்ள 'அஹம்' என்பதன் பொருளான எம்பெருமான் அடியார்களின் செயலை தலைகட்டி கொடுப்பதற்கு உரிய குணங்களான எல்லாவற்றையும் அறிந்தவன் என்றும், எல்லா ஆற்றலையும் உடையவன் என்றும் நிறுவியது புலனாகிறது.

இவ்வாறு திருமந்திரம், துவயம், சரமச்லோகம் ஆகியவற்றின் முக்கியக் கருத்துக்களின் மூலம் உரையின் பெருமை நிலை நாட்டப்பட்டதாயிற்று.

**5.6** ஆண்டாள் உள்ளத்தே எழுந்த ஒவ்வொரு பாட்டிலே வழங்கிய எம்பெருமானுடைய திருநாமங்களுக்கெல்லாம் காரணங்களையும் அந்த காரணத்தை உட்கொண்டு வெளிவந்த எம்பெருமானுடைய இயல்பு, வடிவு, குணங்கள், திருவிளையாடல்கள் ஆகியன பற்றியச் செய்திகள் திருநாமச்சிறப்பின் கீழ் பெறப்பட்டது.

**5.7** மூவாயிரப்படியின் சொல்லாற்றலையும் நுட்பமான கருத்துக்களையும் தத்துவங்களையும் வெளிப்படுத்தும் அரும்பதக்காரர்களின் தொண்டு மூவாயிரப்படிக்கு பெருமை சேர்க்கிறது.

**5.8** இவ்வாறு பெரியவாச்சான்பிள்ளை அருளிய மூவாயிரப்படி பல்வேறு வகையில் தனித்தன்மை பெற்று மற்ற உரையாசிரியர்களுக்கு வழிகாட்டியாக அமைந்தது அறியமுடிகிறது.

**5.9** இந்த ஆய்வு, திருப்பாவைக்கு அமைந்த நான்கு முக்கிய உரைகளை ஸ்வாபதேச உரைகளோடு தொடர்புக் கொண்டு திறனாய்வு செய்ய உதவும்.

**கோதை பிறந்த ஊர் கோவிந்தன் வாழுமூர்**
**சோதி மணிமாடம் தோன்றுமூர் - நீதியாய்**
**நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்**
**வில்லிபுத்தூர் வேதக் கோனூர்.**

**பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்**
**வேதமனைத்துக்கும் வித்தாகும் - கோதை தமிழ்**
**ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை**
**வையம் சுமப்பதும் வம்பு.**

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

****

பின்னிணைப்பு எண். 1

## பழநடை விளக்கம் (குருபரம்பரை அடைவு)

**ஓராண்வழி ஆசிரயண குருபரம்பரை**

எம்பெருமான்
பெரியபிராட்டியார்
சேனை முதலியார்
நம்மாழ்வார்
நாதமுனிகள்
உய்யக்கொண்டார்
மணக்கால்நம்பி
பெரியநம்பி
உடையவர்
எம்பார்
பட்டர்
நஞ்சீயர்
நம்பிள்ளை
வடக்குத்திருவீதிப்பிள்ளை
லோகாசாரியர்
திருவாய்மொழிப்பிள்ளை
பெரியசீயர்

***ஆசிரயண குருபரம்பரை**

**கிரந்த குருபரம்பரை**

**ரகஸ்ய க்ரந்த பரம்பரை**

உடையவர்
எம்பார்
பட்டர்
நஞ்சீயர்
நம்பிள்ளை
வடக்குத்திருவீதிப்பிள்ளை
பிள்ளைலோகாசாரியார்
கூரகுலோத்தம தாஸர்
திருவாய்மொழிப்பிள்ளை
பெரிய சீயர்

**திவ்வியப்பிரபந்த வியாக்கியான பரம்பரை**

உடையவர்
திருக்குருகைப்பிரான்பிள்ளான்
எம்பார்
கூரத்தாழ்வான்
பட்டர்
நஞ்சீயர்
நம்பிள்ளை
வடக்குத்திருவீதிப்பிள்ளை
ஈயுண்ணிமாதவர்
ஈயுண்ணி பற்பனாபர்
கோலவராக நாயனார்
நாலூர் தேவராஜர்
திருவாய்மொழிப்பிள்ளை
பெரியசீயர்

**ஸ்ரீபாஷ்ய சுருதப்ரகாசிகா பரம்பரை**

உடையவர்
எம்பார்
பட்டர்
நஞ்சீயர்
நம்பிள்ளை
பெரியவாச்சான்பிள்ளை
நாயனாராச்சான்பிள்ளை
வாதிகேசரி அழகியமணவாளச்சீயர்
வாதிகண்டீரவர் முதலானோர்

* 74 சிம்மாஸனாதிபதிகளுடைய வம்சத்தவருக்கு தனித்தனியே உடையவர் தொடங்கி ஆசிரயண குருபரம்பரை இருக்கிறது.

பின்னிணைப்பு எண். 2

## பாட்டின் தொடர்களைக்கொண்டு அவதாரிகை இடுதல்

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 01. | 1 | மார்கழி | இந்நோன்புக்கு ஒரு காலம் நேர்படுவதே என்று காலத்தைக் கொண்டாடுகிறார்கள் | திங்கள் - ''மார்கழி'' நாள் - ''மதிநிறைந்த நாள்'' |
| 02. | 1 | மார்கழி | ப்ராப்யம் (அடையத்தக்க பயன்) | 'மார்கழித்திங்கள்' முதல் 'சிறுமீர்காள்' வரை |
| 03. | 1 | மார்கழி | ப்ராபகம் (பறை - நீராடுதல்) | கூர்வேல்....... படிந்து |
| 04. | 2 | வையத்து | க்ருத்யா க்ருத்ய விவேகம் பண்ணுகிறது (செய்ய வேண்டியது, செய்யக்கூடாதது ஆகியவற்றை பகுத்தறிதல்) | 'பரமனடி பாடி', 'நாட்காலே நீராடி', 'ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி' என்னுமளவும் செய்யவேண்டியது சொல்லப்பட்டது. 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' 'மையிட்டெழுதோம் மலரிட்டுநாம் முடியோம்...' 'தீக்குறளைச் சென்றோதோம்' என்னுமளவும் செய்யக்கூடாதது சொல்லப்பட்டது . |
| 05. | 3 | ஓங்கி | ஸ்வர்க்கார்த்தமாக...... சொல்லுகிறார்கள் | ''தீங்கின்றி... செல்வம் நிறைந்து'' |
| 06. | 4 | ஆழி | உபயவிபூதியுக்தனான...... .... ஸ்வரூபலாபமாயிருக்கு மிறே | 'ஆழிமழைக்கண்ணா......... வாழ உலகினில் பெய்திடாய்' |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 07. | 5 | மாயனை | அவர்களிலே வேதாந்த ஜ்ஞாநமுடையா ளொருத்தி... அகலவேண்டா என்கிறாள் | 'மாயனை..........தீயினில் தூசாகும்' |
| 08. | 6 | புள்ளும் | பகவத் விஷயத்தில் புதியளாகையாலே இந்நோன்பின் சுவடறியாத ஒருத்தியை எழுப்புகிறார்கள் | "பிள்ளாய்" |
| 09. | 7 | கீசுகீசென்று | பகவத் விஷயத்தில் சுவடறிந்தே மறந்து கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள் | 'நாயகப்பெண் பிள்ளாய்' என்றதைப்பற்ற 'பேய்ப்பெண்ணே' என்பதில் நோக்கு. "சுவடறிந்தே என்றது" "மறந்து கிடக்கிறாள் என்றது" |
| 10. | 8 | கீழ்வானம் | எல்லோரும்......... எழுப்புகிறார்கள் | 'கோதுகலமுடைய பாவாய்' என்பதில்நோக்கு. 'எல்லாரும்' என்றது 'மிக்குள்ள பிள்ளைகளும்' என்றதைப் பற்ற |
| 11. | 9 | தூமணிமாடத்து | க்ருஷ்ணன் வந்தபோது வருகிறான் | 'தூமணி மாடம்... துயிலணைமேல் கண் வளரும் |
| 12. | 9 | தூமணிமாடத்து | தான் போவதை அநாதரித்துக்கிடக்கிறாள் | 'மாமீர்......... மந்திரப் பட்டாளோ' |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 13. | 10 | நோற்றுச் சுவர்க்கம் | பெண்கள்.... வீறுடையாள் ஒருத் தியை எழுப்புகிறார்கள் | 'அருங்கலமே' என்ற சொல்லைக்கொண்டு சொன்னபடி (சொல்) |
| 14. | 10 | நோற்றுச் சுவர்க்கம் | 'ஆநந்தம் ...... என்றிருப்பாள் ஒருத்தி' | 'சுவர்க்கம்' என்ற(பொருள்) பதத்தைக் கொண்டு சொன்னபடி |
| 15. | 10 | நோற்றுச் சுவர்க்கம் | கண்ணன் அசல் திருமாளிகையாய் நடுவிட்ட வாசலாகையாலே ஒரு போகியாக அநுபவிக்கிறாள் | 'புகுகின்ற' என்ற (காலம்) பதத்தைக்கொண்டு சொன்னபடி |
| 16. | 11 | கற்றுக்கறவை | எல்லாவற்றாலும் உயர்ந்தவளாய் (அபிஜாதை)யிருப்பாளொருத்தியை ............................ | ''கோவலர் தம்பொற்கொடியே'' என்பதனால் குலமும் 'புற்றரவல்குல் புனமயில்' என்பதனாலே உருவமும், 'செல்வப்பெண்டாட்டி' என்பதனாலே குணமும் சொல்லப்படுகிறது. |
| 17. | 12 | கனைத்திளங் கற்றெருமை | கண்ணனை..... இளையபெருமாளைப் போலே இருப்பான் ஒருவன் தங்கையாகையாலே....எழுப்புகிறார்கள் | நற்செல்வன் தங்காய் |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 18. | 13 | புள்ளின்வாய் | நம் கண் உண்டாகில்...எழுப்புகிறார்கள் | போதரிக்கண்ணினாய் |
| 19. | 14 | உங்கள் புழைக்கடை | ...தானே கடவளாய் எல்லாரையும் தானே எழுப்பக்கடவதாக.... எழுப்புகிறார்கள் | ''நங்காய்'' என்றதையும் எங்களை ''முன்ன மெழுப்புவான் வாய்பேசும்'' என்பதைப்பற்றிச் சொன்னபடி |
| 20. | 15 | எல்லே இளங்கிளியே | எல்லாருடைய திரட்சியும் காணவேண்டி யிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள் | ''எல்லாரும் போந்தாரோ?'' என்பதைப்பற்றிச் சொன்னபடி. |
| 21. | 16 | நாயகனாய் நின்ற | ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையில் சென்று கோயில் காப்பானையும் திருவாசல் காப்பானையும்எழுப்புகிறார்கள் | 'கோயில் காப்பான்' 'வாயில் காப்பான்' |
| 22. | 17 | அம்பரமே | இவர்களை .....ஸ்ரீநந்தகோபர் தொடக்க மானாரை எழுப்புகிறார்கள் | 'நந்தகோபாலா எழுந்திராய்' 'யசோதா அறிவுறாய்' 'உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்', பலதேவா..... |
| 23. | 18 | உந்து மதகளிற்றன் | இப்படி எழுப்பினவிடத்திலும் ... நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகிறார்கள் | நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய் |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 24. | 19 | குத்து விளக்கெரிய | இவள்திறக்கப்புக.....கட்டிக்கொண்டு கிடக்கிற கண்ணனை எழுப்புகிறார்கள் | ''நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா'' |
| 25. | 20 | முப்பத்து மூவர் | அவனுக்கும் எங்களுக்கும்........ எழுப்புகிறார்கள் | உன் மணாளனை - எம்மை நீராட்டு - விமலா துயிலெழாய் |
| 26. | 21 | ஏற்ற கலங்கள் | நப்பின்னை... அவன் குணங்களில் தோற்றார் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள் | 'மாற்றார் உனக்கு வலி தொலைந்துஉன் வாசற் கணாற்றாது வந்துஉன்அடிபணியுமாபோலே' |
| 27. | 22 | அங்கண்மா ஞாலத்து | எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மை ('அநந்யார்ஹசேஷத்வம்') | 'நின் பள்ளிக்கட்டில் கீழே சங்கமிருப்பார் போல்' |
| 28. | 23 | மாரிமலை முழைஞ்சில் | ......நாங்கள் வந்த காரியத்தைக் கேட்டருளவேணும் என்கிறார்கள் | ''யாம்வந்த காரியமாராய்ந்தருள்'' |
| 29. | 24 | அன்றிவ்வுலகம் | தாங்கள் விரும்பியபடியே (அபேக்ஷித்த படியே) பரியுமித்தனையிறே | உன் சேவகமேயேத்திப் பறைகொள்ளுவான்..... யாம் வந்தோம் |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 30. | 25 | ஒருத்தி மகனாய் | உங்களுக்கு வேண்டுவது ....... என்கிறார்கள் | 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற' என்பதையும், 'வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து' என்பதையும் கொண்டு 'மாரிமலை முழைஞ்சல்' என்கிற பாட்டோடு இயைபுபடுத்தி அவதாரிகையிடுகிறார் |
| 31. | 26 | மாலே மணிவண்ணா | உங்களுக்கு விருப்பம் (அபேக்ஷிதம்) என்? என்ன............ விரும்புகிறார்கள் (அபேக்ஷிக்கிறார்கள்) | 'ஞாலத்தையெல்லாம் .............. விதானமே' |
| 32. | 27 | கூடாரை வெல்லும் | நோற்றால் அவன் பக்கல் பெறக்கடவேண்டிய பேறு சொல்லுகிறார்கள் | 'கூடியிருந்து குளிர்ந்து' |
| 33. | 28 | கறவைகள் பின்சென்று | நாட்டார் இசைக்காக..... ..... தங்கள் ஆகிஞ்சன்யத்தையும் பிராப்யத்தையும் முன்னிட்டு நீயே உபாயமாக வேணும்...... | 'கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம் அறிவொன்றுமில்லாத ஆய்குலம்' என்பதனால் கை முதலில்லாமை(ஆகிஞ்சின்யம்)சொல்லப்பட்டது; 'உன்தன்னைப்பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாமுடையோம்' என்பனால் உறவு (ப்ராப்தி)சொல்லப் பட்டது; ''சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே'' என்பதனால் க்ஷாமணம் பண்ணியது சொல்லப்பட்டது; |

| வ. எண் | பாடல் எண். | பாடல் தொடர் | அவதாரிகை | அவதாரிகைக்கு ஏற்ப பாடல் சொற்றொடர்கள் |
|---|---|---|---|---|
| 34. | 29 | சிற்றஞ்சிறு காலே | இதில் கைங்கர்யம் (ப்ராப்ய) ருசியையும் ப்ராப்யம் தான் இன்னதென்னுமிடத்தையும் அத்தை அவனே தரவேணும் என்னும் இடத்தையும் தங்கள் ப்ராப்யத்வரையையும் அறிவிக்கிறார்கள். | 'போற்றும் பொருள் கேளாய்' என்பதனால் ப்ராப்ய ருசி சொல்லப்பட்டது; 'எற்றைக்கும்' என்பதனால் ப்ராப்யம் தான் இன்னது என்று சொல்லப்பட்டது; 'குற்றேவல் எங்களைக கொள்ளாமற்போகாது' என்ற தொடரால் அவனே தரவேணும் என்னும் இடம் சொல்லப்பட்டது; 'சிற்றஞ்சிறுகாலே வந்து' என்பதனால் ப்ராப்ய த்வரை சொல்லப்பட்டது.<br><br>'இறைவா நீதாராய் பறை' என்பதனால் ப்ராப்ய ப்ரார்த்தனை சொல்லப்பட்டது. |
| 35. | 30 | வங்கக்கடல் | இப்பிரபந்தம் கற்றார், பிராட்டியாலும் எம்பெருமானாலும் எல்லாக் (ஸர்வ) காலமும் எம்பெருமான் திறத்து இலக்காவர்கள் ( விஷயீகரிக்கப்படுவர்கள்) என்கிறார்கள். | 'திருமாலால் எங்குந் திருவருள் பெற்று இன்புறுவர்'. |

பின்னிணைப்பு எண். 3

## கொண்டுகூட்டு முறையை உரையில் காட்டல்

| வ. எண். | பாடல் தொடர் | பாடல் எண். | பிள்ளை வழங்கிய உரை | உரைக்கு ஏற்ப அரும்பத உரைகாரர்கள் காட்டும் கொண்டு கூட்டு முறை |
|---|---|---|---|---|
| 1. | வாங்கக்குடம் நிறைக்கும் | 3 | இட்ட குடங்கள் வாங்க வாங்க நிறைக்கும் | குடம் வாங்க நிறைக்கும் (பெ.அ.) |
| 2. | ஒன்றும் நீ கைகரவேல் | 4 | உன்னுடைய ஔதார்யத்தில் ஒன்றும் மாறாதபடி தோற்றவேணும் | நீ, கையில், ஒன்றும் - (அல்பமும்), கரவேல் |
| 3. | கீசு கீசு என்று எங்கும்..... | 7 | ஆனைச்சாத்தன்கீசுகீசு என்னா நின்றது..... கலந்துபேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே! வாசப் பூங்குழலாச்சியர். | ஆனைச்சாத்தன் - கீசு கீசு என்று எங்கும் |
| 4. | ஆழிமழைக்கண்ணா...... | 4 | நாங்களும் நோன்பு நோற்றோமாய், அந்த நோன்புக்கும் பலமான வர்ஷம் உண்டாய்த் ததாய், க்ருஷ்ணனோட்டை ஸம்ச்லேஷத் தாலே மகிழ்ந்து நீராடக்கடவோம். | மகிழ்ந்து மார்கழி நீராட உலகினில் தாழாதே பெய்திடாய். |
| 5. | ஆவாவென்று ஆராய்ந்து அருள் | 8 | ஆவாவென்று ஆராய்ந்தருளும்; கோதுகல முடைய பாவாய் எழுந்தருளாய் | பாடிப்பறைகொண்டு என்று தொடங்கி, அருளும். கீழ்வானம் என்று தொடங்கி எழுந்திராய் |
| 6. | எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண் | 8 | பனிப்புல் மேயக்காலத்திலே விட்டு வயல்களெங்கும் பரந்தனகாண் | எருமை - மேய்வான் - சிறுவீடு - பரந்தனகாண். |

| வ. எண். | பாடல் தொடர் | பாடல் எண். | பிள்ளை வழங்கிய உரை | உரைக்கு ஏற்ப அரும்பத உரைக்காரர்கள் காட்டும் கொண்டு கூட்டு முறை |
|---|---|---|---|---|
| 7. | குற்றமொன்றில்லாத | 11 | எடுத்துவரப்பார்த்திருக்கும் குற்றமில்லை; கையில் ஆயுதம் பொகட்டவர்களை எதிர்க்கும் குற்றமில்லை. | குற்றமொன்றில்லாதே சென்று குற்றமில்லாதே - செருச்செய்யும். |
| 8. | நனைத்து இல்லம் சேறாக்கும் | 12 | பாலின் மிகுதியாலே அகம் வெள்ளமிடும்; அத்தாதே துகையுண்டு சேறாகும்; இத்தால்- சேறாகையாலே புகுர வொண்கிறதில்லை யென்கை | இல்லம் - நனைந்து சேறாக்கும் |
| 9. | அம்பரமே இத்யாதி | 17 | ஏவகாரத்தாலே இதுவோ இவன் கற்ற தென்னும்படி கொடுக்கை | அம்பரம் கொடுக்கையே அறஞ்செய்யும், தண்ணீர் கொடுக்கையே அறஞ்செய்யும், சோறிடுகையே அறஞ்செய்யும். |
| 10. | உள்ளம் புகுந்து குளிர்ந்து | 6 | படுக்கைக்கீழே வெள்ளங் கோத்தாற்போலே திருநாமம் செவிவழியே புகுந்து வவ்வலிட்டது.... ஆகையாலே எழுந்திராய் என்கிறார்கள். | "புள்ளும் சிலம்பினகாண்" என்று தொடங்கி, உள்ளம்புகுந்து குளிர்ந்து, பிள்ளாய் எழுந்திராய் |
| 11. | பாவாய் எழுந்திராய் பாடிப்பறை கொண்டு | 8 | 'நாரீணாமுத்தமா வதா:' என்கிறபடியே ஒரு காரணமின்றி இயற்கையான பெண்மையை (நிருபாதிக ஸ்த்ரீத்வ)உடையாளாகை; எம்பெருமான் இட்டவழக்கின் எல்லையில் (பாரதந்த்ரிய-பராகாஷ்டை)யுடையளன்றோ என்கை. | பாடிப்பறை கொள்ளுகைக்காக - பாவாய் எழுந்திராய். |

| வ. எண். | பாடல் தொடர் | பாடல் எண். | பிள்ளை வழங்கிய உரை | உரைக்கு ஏற்ப அரும்பத உரைகாரர்கள் காட்டும் கொண்டு கூட்டு முறை |
|---|---|---|---|---|
| | எழுந்திராய் | 8 | எழுந்திருக்கும் போதை அசைவு (பரிஸ்பந்தம்) காண்கைக்காக; நாங்கள் உணர்த்த உணர்ந்தா யாகிற ஏற்றத்தை எங்களுக்குத்தாராய் | பாடிப்பறை கொள்ளுகைக்காக - பாவாய் எழுந்திராய். |
| | பாடிப்பறை கொண்டு | 8 | இதுக்கு முன்பு நாம் பெற்ற ஐச்வர்யம் போலே யோ இப்போது நாம் பெறப் புகுகிற ஐச்வர்யம். | ,, |
| 12. | மாதவன் வைகுந்தன் | 9 | ச்ரிய: பதித் வத்தாலே வந்த மேன்மைக்குத் தகுதியான தேசவிசேஷத்தை உடையவன் | வைகுந்தன் என்றதுக்கு மாதவன் என்றத் தோடே சேர்த்து கருத்து |
| 13. | வைகுந்தன் மாதவன் மாமாயன் | 9 | அப்பெரிய மேன்மையுடைய ச்ரிய: பதியான கிடீர் பெண்களுக்கு எளியனானா னென்கை | வைகுந்தன் மாதவன் மாமாயன் என்று கூட்டி வேறு கருத்து. |
| 14. | மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று நாமம் பலவும் | | மேன்மைக்கு அடியான திருநாமங்களும், நீர்மைக்கு அடியான திருநாமங்களும்......... சொல்லிற்றென்கிறார்கள். | வைகுந்தன் மாமாயன் மாதவன் என்று பல நாமங்களைக் காட்டியபடி. |
| 15. | தூமணி மாடத்து | 9 | நாமம் பலவும் நவின்று - மாமீர் அவளை எழுப்பீரோ | தூமணி..... நவின்றோம், சொன்னாலும் மெழுந்திராள், அவளை எழுப்பீரோ |
| 16. | புள்ளின்வாய் | 13 | கலந்து - குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக் கிடத்தியோ | புள்ளின் வாய் கீண்டானை போதறிக் கண்ணையுடைய பாவாய்! நீ நன்னாளால் - கள்ளம் தவிர்ந்து கலந்து - குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே பள்ளிக் கிடத்தியோ |

| வ. எண். | பாடல் தொடர் | பாடல் எண். | பெ.பிள்ளை வழங்கிய உரை | உரைக்கு ஏற்ப அரும்பத உரைகாரர்கள் காட்டும் கொண்டு கூட்டு முறை |
|---|---|---|---|---|
| 17. | பாட | 15 | நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப்பாட | பாடப் போந்தார் |
| 18. | எல்லே இளங்கிளியே | 13 | எதிரிகளைத் தான் தோற்பிக்குமா போலே நம் கையிலே தோற்ற ஆச்சர்ய பூதனை நமக்கு அவன் தோற்கும் தோல்விக்குத் தோற்றுப்பாட எங்களுக்கு ஒருக்ஷணமும் உன்னை ஒழியச் செல்லாமையாலே எங்கள் திரளிலே சடக்கெனப்புகுந்து கொடு நில்லாய். | வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனைப்பாட |
| 19. | எல்லே இளங்கிளியே | 15 | — | மாயனைப் பாடுகைக்கு எல்லே இளங்கிளியே என்று தொடங்கி போற்றெண்ணிக்கொள்; முழு உரையைக்கொண்டு கூட்டுமுறை |
| 20. | ஏற்ற கலங்கள் | 21 | — | யாம் - போற்றி - புகழ்ந்து - வந்தோம். |
| 21. | ஏற்ற கலங்கள் | 21 | — | ஏற்ற கலங்கள் என்று தொடங்கி துயிலெழாய். |
| 22. | அன்றிவ்வுலகம் | 24 | அடியார்களின் பகையான எதிரிகளை (ஆச்ரித விரோதிகளான ப்ரதிபக்ஷத்தை) அறச்செய்து மாய்க்கை. | பகையை - வென்று கெடுக்கும் |

| வ. எண். | பாடல் தொடர் | பாடல் எண். | பிள்ளை வழங்கிய உரை | உரைக்கு ஏற்ப அரும்பத உரைகாரர்கள் காட்டும் கொண்டு கூட்டு முறை |
|---|---|---|---|---|
| 23. | ஒருத்தி மகனாய் | 25 | எங்களுக்கு உத்தேச்யம் செய்தியாகில் பண்டே வ்யாமுக்தனான உன்னை அர்த்திக் கையாலே பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம்; கைவல்யம் போலே து:க்க நிவ்ருத்தி மாத்ரமேயன்று, ப்ரீதிக்குப் போக்குவிடும்படியாக வேணும். | பறை தருதியாகில், அருத்தித்து வந்தோம், மகிழும்படி பண்ண வேணும். |
| 24. | கூடாரை வெல்லும் | 27 | சூடகமே தோள்வளையே...யாமணிவோம்; ஆடை ..... குளிரும்படி உண்போம்; இது கூடாரை வெல்லும் சீர்கோவிந்தா உன்றன்னைப் பாடிப் பெறு சம்மானம். | கூடாரை இத்யாதி பாடிப்பறை கொண்டுயாம் சம்மானம் பெறக்கடவோம்; நாடுபுகழும் இத்யாதி யாம் அணிவோம்; அதன் பறை கொண்டு நன்றாக நாடு புகழும்படி யாம் பின்னே நெய்சோறு மூடப்பெய்துமுழங்கை பாற்சோறு உண்ணக் கடவோம்; இப்படி உன்னோடு கூடியிருக்கக்கடவோம் |

பின்னிணைப்பு எண். 4

## வேறு கருத்துப்பொருள் (தாத்பர்யாந்தரம்) உரைத்தல்

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 1. | 1 | அயம் மாஸ: | அபிஷேகம்நேராத ஸமயத்தில் ஸந்நிஹத மான தன்னேற்றம் | அங்கு தலைவனை (சேஷியை) அடியவன் (சேஷபூதன்) பெறுகைக்குக் (லபிக்கைக்குக்) கொண்டாடுகிற கொண்டாட்டம்; இங்கு சேஷபூதரை சேஷி லபிக்கைக்கு கொண்டாடுகிற கொண்டாட்டம். | இராமகிருஷ்ண அவதாரத்தின் பெருமையை எடுத்துக் காட்டுவதில் நோக்கு. |
| 2. | 1 | நன்னாளால் | மாதத்துக்கும் பக்ஷத்துக்கும் நாயகக்கல் போலே இருப்பதொரு நாள் நேர்பட்டபடியென் | நம்மை க்ருஷ்ணனோடு கிட்டவொட்டாத வர்கள் தாங்களே, க்ருஷ்ணனோடு சேருகைக்கு ப்ரமாணம் பண்ணிக்கொடுத்த நாளாகப் பெற்றதே | கண்ணனோடு சேருகைக்கு அவர்கள் நிர்ணயம் பண்ணிக்கொடுத்த நாள் என்று சொல்லுவதில் நோக்கு |
| 3. | 1 | அவதாரிகை மார்கழி திங்கள் | | ப்ராப்ய ப்ராபக ஸங்க்ரஹமென்றுமாம். 'மார்கழி திங்கள்' என்று தொடங்கி 'செல்வச் சிறுமீர்காள்' என்னுமளவும் ப்ராப்யத்தை ஸங்க்ரஹித்தபடி; மேலெல்லாம் ப்ராபகத்தை ஸங்க்ரஹிக்கிறது. | இப்பாட்டு மேல் வரும் 29 பாடல்களில் தெரிவிக்கும் உபாய உபேயங்களின் சுருக்கம் என்றபடி. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 4. | 1 | ஆய்ப்பாடி | பரமபதம் போலே வேறொரு சரீரம் கொண்டு (தேஹாந்தரபரிக்ரஹம்) சென்று அநுபவிக்க வேண்டாத ஊர். | ஆசாரப்ரதாநரான வசிஷ்டாதிகள் இருக்கிற (வர்த்திக்கிற)திருவயோத்யை போலன்றிக்கே, இடக்கையும் வலக்கையுமறியாத இடையர் வர்த்திக்கிற ஊர். | இடைச்சேரியைச் சொல்லுவதில் நோக்கு |
| 5. | 1 | போதுமினோ | பகைவர்களையெல்லாம் தேந...... என்னுமவர்கள் விருப்பமுடையாரைப் பெற்றால் விடுவீர்களோ! | நாங்கள் வாழும்படி புறப்பட்டு இங்ஙனே நடக்கலாகாதோ? | 'ஓ' என்ற ஒலிக்கு உரிய பொருளைச் சொன்னபடி. |
| 6. | 1 | இளஞ்சிங்கம் | செருக்கும்மேனாணிப்பும் தோற்றநின்ற நிலையைச் சொல்லுகிறது. | சிறுமியர்க்கு ஒத்த பருவமாயிருக்கை | ஒப்புமை காட்டுவதில் நோக்கு |
| 7. | 1 | செங்கண் | திருமேனிக்கு பரபாகமான சிவப்பையுடைய திருக்கண்கள். | அகவாயில் வாத்ஸல்யம் எல்லாம் திருக்கண்களிலே தோற்றும்படியாயிருக்கை | கண்ணன் குணத்தைக் காட்டுவதில் நோக்கு. |
| 8. | 1 | கதிர்மதியம் போல் முகத்தான் | பராக்ரமத்துக்கும் குளிர்ச்சிக்கும் சூரியனுடைய புகரை ஊட்டின.... | ஒளியுடையதாய் மகிழ்ச்சியை உண்டு பண்ணும் | முகத்தின் தன்மையில் நோக்கு. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 9. | 1 | கார்மேனி | நம்முடைய எல்லா வருத்தங்களும் ஆறும்படியான வடிவு. | மாத பிதாக்கள் தங்களை மறைத்து வைத்தாலும் விடவொண்ணாத வடிவழகு. | திருமேனியின்பெருமையைச் சொல்லுவதில் நோக்கு. |
| 10. | 2 | வையத்து வாழ்வீர்காள் | ஸர்வேச்வரன் திருவாய்ப் பாடியிலே....பாக்யவதிகாள். | மருபூமியில் தண்ணீர் போலே இருள் தருமா ஞாலமான ஸம்ஸாரத்திலேயிருந்து வைத்து க்ருஷ்ணானுபவம் பண்ணி வாழப்பிறந்தீர்கள் என்றுமாம். | எம்பெருமானை அநுபவிக்கத் தடையான பிறவியைச் சொன்னபடி. |
| 11. | 2 | வாழ்வீர்காள் | அவ்வூரில் பிறந்து வைத்துப் பருவம் நிரம்பி இருக்கையன்றிக்கே,அவனுடைய பார்வைக்கு இலக்காம்படி ஒத்த பருவமாயிருக்கை. | அவ்வூரில் வர்த்தனமென்றும் வாழ்ச்சி என்றும் இரண்டில்லை காணும்; அவன் நித்யவாஸம் பண்ணுமிடத்தில் வர்த்தனமே வாழ்ச்சியாயிருக்குமிறே; 'வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்' என்னக்கடவதிறே, இது கோயிலில் வர்த்தனம் போலே காணும். | கண்ணன் பிறந்த ஊரில் இருப்பே வாழ்ச்சி என்பதைத் தெரிவிப்பதில் நோக்கு. |
| 12. | 2 | நம்பாவைக்கு | நம்முடைய நோன்புக்கு | வேறுபயனில் ஊற்றமுடைய(ப்ரயோஜநாந்தர பரமான) நோன்பன்றியே, க்ருஷ்ணனும் க்ருஷ்ணவிபூதியும் உண்டாகைக்குப் பண்ணுகிற நோன்பு. | நோன்பின் பயனைக் கூறுவதில் நோக்கு |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 13. | 2 | கேளீரோ | பெண்கள்.... கேளீரோ என்கிறார்கள் | 'ஸம்ச்ரவே மதுரம் வாக்யம்' என்னும்படியே கேட்டல் (ச்ரவணந்தானே) பயனாயிருக்கிற (ப்ரயோஜனமாயிருக்கிற) படி. | பரமனடி பாடுகையில் நோக்கு. |
| 14. | 2 | அடிபாடி | மஹிஷிகளோடு... திருவடிகளைப் பாடி என்கிறார்கள் | அவனுடைய வடிவழகை ஆசையால் தூண்டப்பட்டவர்களாய் (ப்ரீதிப்ரேரிதைகளாய்க்) கொண்டுபாடி. | திருமேனியின் அழகைச் சொல்லுவதில் நோக்கு |
| 15. | 2 | பாடி.... பாலுண்ணோம் | வேறு அநுபவத்தில் இழிய மாட்டோம் | அவன் வருமளவும் உண்ணாது இளைத் திருக்கக் (உபவாஸ க்ருசைகளாயிருக்கக்) கடவோம் | கண்ணன் மேல் உள்ள பக்தியைச் சொன்னபடி. |
| 16. | 4 | ஆழிமழைக் கண்ணா | கம்பீரஸ்வபாவத்தை யுடையவனாய் வர்ஷத்துக்கு நிர்வாஹகனானவனே! | 'ஆழிமழை' என்று மண்டல வர்ஷமாக்கி மண்டல வர்ஷத்துக்கு தலைவனானவனே (நிர்வாஹனானவனே) | சொல்லின் பொருளை விளக்கிச்சொல்லுவதில் நோக்கு. |
| 17. | 5 | மாயனை | பரமபதத்திலே .... மாயன் என்கிறது | ஒருருக்குத் தன்னைக் கொடுத்த நீர்மையிறே இது. ஒருநாட்டுக்காகத்தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கிற நீர்மையாகையாலே ஏற்ற முண்டே அங்குத்தைக்கு. | பரமபதத்தில் நீர்மையைச் சொல்லுவதில் நோக்கு |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 18. | 5 | மணி விளக்கே | பரமபதத்திற்காட்டில்.... மிக்க ஒளியுடையதானபடி | திருவாய்ப்பாடிக்கு மங்களதீபம் | ஆயர்குலத்தில் அணி விளக்காய் தோன்றினன் என்பதில் நோக்கு. |
| 19. | 6 | புள்ளரையன் | பெரிய திருவடியை அடையாளமாக உடையவன் | பகவத் விஷயத்தில் வழியே இழியுமவர்கள் ஆகையால் பெரிய திருவடியை முன்னிடுகிறார்கள் | புருஷகாரத்தின் பெருமையைச் சொல்லுவதில் நோக்கு |
| 20. | 7 | கலந்து பேசின பேச்சரவும் கேட்டிலையோ | பிரிந்து போனால்....... கேட்டிலையோ | கேளாமைக்கு அங்கே ஆராவார முண்டா யாகாதே செல்லுகிறது என்று மர்மம் சொல்லுகிறார்கள் | கண்ணனை அநுபவிக்கும் ஆதாரத்தைத் தெரிவிப்ப தில் நோக்கு. |
| 21. | 7 | நாராயணன் மூர்த்தி கேசவன் | ..................... | இவள் துணுக்கென்றெழுந்திருக்கைக்காக ஒருகாரணமின்றி இயற்கையான தலைவனான (நிருபாதிக ஸ்வாமியான) ஸர்வேச்வரன் அடியாரிடம் மையல் கொண்டவனாய்(ஆச்ரித வத்ஸலனாய்) க்ருஷ்ணனாய் வந்து அவதரித்தவிடத்திலே கேசி வந்து நலியப்புக, அவனைக்ருஷ்ணன்கொன்றான் காண். | மூன்று திருநாமத்தின் சிறப்பைச் சொல்லுவதில் நோக்கு. நாராயணன் என்பதனால் இயல்பான தலைமை சொல்லப்பட்டது; மூர்த்தி என்பதனால் மையல்குணம் சொல்லப்பட்டது; கேசவன் என்பதனால் விரோதிஅழித்தமை சொல்லப்பட்டது. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 22. | 7 | தேசமுடையாய் திற | உன்னைக் காணப்பெறாத நீயே வந்து திற | இவள் பிள்ளையும் பேசாதேகிடக்கையாலே ஜன்னல் (ஜாலகரந்தர்த்தாலே) வழியாக பார்த் தார்கள். இவளுக்கு கண்ணனின் வெற்றியை நினைக்கும் ஆசையாலே (க்ருஷ்ண விஜயாநு ஸந்தாந ப்ரீதியாலே) வடிவிற்பிறந்த புகர். | கேசவனைப் பாடிய பிறகு பிறந்த ஒளியைச் சொல்லு வதில் நோக்கு. |
| 23. | 9 | அன்றிச் செவிடோ | ஊமைக்கும்........ | எங்கள் வார்த்தை கேளாதபடி வேறொன்றில் ஊற்றமோ? (அந்யபரையோ) | கண்ணனைப்பற்றி வேறு அநுபவம்கொண்டதில் நோக்கு. |
| 24. | 5 | வைகுந்தன் மாதவன் மாமாயன் | கொண்டுகூட்டி உரை | அப்பெரிய மேன்மையுடைய ச்ரிய : பதியானவன் கிடீர் பெண்களுக்கு எளியனானானென்கை. | மேன்மைக்குரிய திருநாமங் களைச் சொல்லுவதில் நோக்கு. |
| 25. | 13 | புள்ளின்வாய் கீண்டானை பொல்லா அரக்கனை | பள்ளத்தில்...கனிவாய் | 'முன்பொலாவிராவணன்' என்னுமித்தனை போக்கி அவன் தண்ணிமைக்கு ஒரு பாசுரமில் லையிறே, அத்தாலேயிறே பிராட்டியும் 'த்வம் நீச சசவத் ஸ்ம்ருத:' என்றது. | இராவணனது பொல்லாங் கைச்சொல்லுவதில் நோக்கு |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 26. | 13 | நன்னாளால் | க்ருஷ்ணன்..... கிடப்பதே | மேல் வ; கிற நாள் இராவணன் முதலானோர் களைப் போலே பிரிக்கிற நாளிறே | இராவணனது தன்மையைச் சொல்லுவதில் நோக்கு. |
| 27. | 15 | நங்கைமீர்- வாயறிதும் | நாங்களும்.... இருந்தபடிஎன் | நீங்கள் வாய் திறவாதிருக்க வல்லி கோளாகில் நான் புறப்படுகிறேன் என்ன நங்கையீர் என்று உறவற்ற சொல்லாலே வெட்டிமையெல்லாம் சொல்லவல்ல என்னு மிடம் நாங்கள் இன்றாக அறிகிறோமோ? | நயமானவிளக்கம் தருவதில் நோக்கு |
| 28. | 16 | மணிவண்ணன் | தாழநில்லாவிடிலும் வடிவழகு | பூ அலர்ந்தாற்போலே வார்த்தைசொல்லுகிற சமயத்தில் உதடுஔி (ஓஷ்டஸ்புரணம்) மென்னவுமாம். | நீலமலை போன்றவன் என்பதில் நோக்கு |
| 29. | 17 | எம்பெருமான் | எங்களுக்கு தாரக.. ஸ்வாமீ எழுந்திராய் | நாட்டில் பெண்களுக்கு தானங்கொடுப்பா ரில்லை... நாயகனன்றோ? | அதிகாரி விசேஷத்தைப் பார்த்து தானம் கொடுக் கிறான் என்பதில் நோக்கு. |
| 30. | 17 | கொழுந்து | தலையாக | பெண்களுக்கு ஒரு குறைவரில் உன்முக மன்றோ வாடுவது. | முகத்துக்கு ஒப்புமை சொன்னபடி. |
| 31. | 18 | சீரார் வளை ஒலிப்ப | வளைக்குச் சீர்மையாவது ......................... | 'சூடகமே தோள்வளையே' என்று அவர்களிரு வரும்கூடப் பூட்டினாலிறே இவர்களுக்கு உள்ளது. | வளை பூட்ட காரணம் காட்டுவதில் நோக்கு. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 32. | 19 | கொத்தலர் பூங்குழல் நப்பின்னை | திருக்குழலில்... குழல் | காலம் அலர்த்துமாபோலே அவனோட்டை ப்ரணய கலஹத்தாலே அலருகை | திருக்குழலின் பெருமை சொல்லுவதில் நோக்கு. |
| 33. | 19 | வாய் திறவாய் | உன் கம்பீரமான மிடற்றோ சையாலே ஒரு வார்த்தை சொல்லாய் | 'ஆர்த்தோ வா யதிவா த்ருப்த:' என்ற உனக்கு உன்னாலல்லாது செல்லாதே உன்புறப்பாடு பார்த்திருக்கிற எங்களுக்கு ஒரு வார்த்தையும் அரிதோ! | எதிர் மறையில் பொருள் சொல்லுதல் |
| 34. | 15 | மைத்தடங் கண்ணினாய் | அழகாலும் பரப்பாலும் கண்ணிலே அகப்பட்டவன் | மையிட்டெழுதோம் என்றிருக்கிற எங்களையும் மையிடப்பண்ணினாலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது. | மையிட்ட கண் என்று சொல்லுவதில் நோக்கு. |
| 35. | 20 | கப்பம் தவிர்க்கும் | அசுர ராக்ஷஸாதிகளாலே ..........தவிர்க்கை | துன்பம் போவதை (துக்க நிவ்ருத்தியை) ஆசைப்பட்ட தேவர்களுக்கோ உதவலாவது நீ உணரும்படி காண ஆசைப் பட்டார்க்கு உதவலாகாதோ? | தேவர்கள் தன்மையைக் காட்டுவதில் நோக்கு. |
| 36. | 20 | செவ்வாய் | அவனைத் தனக்காக்கிக் கொள்ளும் சிரிப்பு | அந்த முலையிலிருந்து அனுபவிக்கும் ஜீவனம் | அதரத்தின் இனிமை சொல்லுவதில் நோக்கு. |
| 37. | 20 | அமரர்க்கு | எல்லாவிதத்திலும் சாவாதார்க்கோ உதவ லாவது? | முகாந்தரத்தாலே ஜீவிப்பார்க்கோ உதவலாவது? உன் முகத்தாலே ஜீவிப்பார்க்கு உதவலாகாதோ? | 'அமர'பதத்தில் ரூடியான பொருளான தேவத் தன்மை யைச் சொல்லுவதில்நோக்கு |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 38. | 21 | அறிவுறாய் | எல்லாம் அறிந்தவனை உணர்த்தவேண்டி உள்ளுறச் சொல்லுகிறது | கைப்பட்டபெண்களை சரக்கிலே வாங்கிக் கைபடாதவர்களைக் கைப்படுத்துகைக்காக உண்டான வேறு இடத்தில் ஊன்றியிருக்கை யாலே உண்டான (உபாயாந்யப்ரதையாலே) எழுப்புகிறார்களாகவுமாம். | யோகத்தில் உறக்கம் பண்ணுமவனை எழுப்பக் கூடும் என்று சொல்லுவதில் நோக்கு. |
| 39. | 21 | ஊற்றமுடை யாய் | வேதம் என்கிற திடமான பிரமாணத்தாலே மேன்மை யாளனாக அறிந்திருக்கிறவன் | ஆச்ரித விஷயத்தில் பண்ணின உறுதியை (ப்ரதிஜ்ஞையை) சுக்ரீவன் உள்ளிருப்பினும் (மஹாராஜருள்ளிட்டாரும்) விடவேணுமென் னிலும் விடாதே முடியநின்றுதலைக் கட்டுகை | எம்பெருமானின் ஊற்றத் தைக் காட்டுவதில் நோக்கு |
| 40. | 22 | கிண்கிணி... | சூரியனைக் கண்டால் அலரக்கடவ தாமரைப் பூப்போலே | அர்த்திகளைக் கண்டால் அலருமவையிறே இந்தத் தாமரைப்பூ. | யாசிப்பதே அலருகைக்கு காரணம் என்று காட்டு வதில் நோக்கு. |
| 41. | 22 | எம்மேல், வழியாவோ | கோடை ஓடின.... போம் | சாதகம் மழைநீரை (வர்ஷதாரையை) ஆசைப் படுமாபோலே, விழியாவோ? என்று தங்கள் மநோரதம். | ஆசைப்படுபவர்களின் தன்மையைக் காட்டுவதில் நோக்கு. |
| 42. | 22 | செங்கண் | மையலாலே சிவந்திருக்கை | உபமானம் நேர் நில்லாமையாலே உபமேயந்தன்னையே சொல்லுகிறதாகவுமாம் | சொன்னபொருள் தகுந்த தன்று என்று உபமானமில் லாமையைச்சொன்னபடி |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 43. | 24 | அங்கு | அழகுக்கு..... இலக்கானபடி | நின்றவிடத்தே நின்று பூவலர்ந்தாற் போலே அநாயாஸேன அளந்தவளவன்றிக்கே கானகம்படி உலாவி உலாவி... | தண்டகவனத்தைச்சொல்லு வதில் நோக்கு. |
| 44. | 24 | சென்று | ,, | வழிப்போக்கிலே கரன், கபந்தன் முதலான விரோதிகளை அழியச்செய்தபடி என்றுமாம். | இராமனது திறலைச் சொல்லுவதில் நோக்கு. |
| 45. | 25 | பிறந்து | கர்மத்தாலே பிறந்தவர்படும் பாடெல்லாம் கருணைக்கு பரவசப்பட்டவனாய்க் கொண்டுபட்டபடி. | தோன்றினாலாகாதோ? (ஆவிர்ப்பவிக்கலா காதோ) பத்து மாஸம் வயிற்றிலே இருப்பார் களாகில் பன்னிரண்டு மாஸம் வயிற்றிலே யிருந்து பிறக்கவேணுமோ? பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்டதிறே. | உலகத்தார் பிறவிக்கு வேறு பட்டதைத் தெரிவித்தபடி. |
| 46. | 27 | நன்றாக | இந்திரன் வரக்காட்டின .........பூணவேணும் | ஆபரணத்தைப்பூண்டு அவன் வரவு பார்த்திரா தொழிகை ஒன்றுமாம் | கண்ணன் மூலமாக ஆபரணம் பூணுவதில் நோக்கு |
| 47. | 28 | கோவிந்தா | பூர்த்திக்குக் குற்றம் சொன்னாயோ? | நீங்கள் என்னைப் பூர்ண்ணாகப் பேசினபடியாலே ....ஸௌலப்யம் சொல்லுகிறது | ஐயத்தைப் போக்கும் வகையில் கருத்தைத் தெரிவித்தல் |
| 48. | 28 | ஆயர்குலம் | அறிவு உண்டு என்று சந்தேகிக்கமுடியாதகுலம் | கீழ்ச்சொன்ன உபாயத்தில் குறை குற்றமாகாதே (உபாயஹாநி தோஷமாகாதே) குணமாம் படியான பிறவி (ஜந்மம்) | பிறவியின் பெருமை சொல்லுவதில் நோக்கு. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/ தொடர் | பிள்ளையின் இயல்பான உரை | பிள்ளை காட்டும் (தாத்பர்யாந்தரம்) வேறு கருத்துப் பொருள் | வேறு கருத்துப் பொருளின் விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 49. | 28 | உன்தன்னோடு உறவேல் | உன்னோடு உண்டான சம்பந்தம் உன்னாலும் விடமுடியாது. | தயாபூர்ணனான உன்னோடு தயநீய தயா பூர்ணைகளான எங்களுக்கு உண்டான உறவு என்னுமாம் | காப்பாளன் - காக்கப்படும் பொருள் (ரக்ஷ்ய ரக்ஷக பாவம்) என்று உரையிட்டுச் சொல்லுவதில் நோக்கு |
| 50. | 29 | சிற்றஞ் சிறுகாலே | சிறுபெண்கள் எழுந்திருக்க முடியாத குளிர்காலம் | 'ப்ராஹ்மே முஹுர்த்தே சோத்தாய சிந்தயே தாத்மநோ ஹிதம்' என்று ஸத்வம் தலை யெடுத்த காலத்திலே. | உள்ளுறை பொருளில் நோக்கு |
| 51. | 30 | கேசவனை மாதவனை | விரோதியைப் போக்கின தன்மையனை | 'அலைகடல் கடைந்து அதனுட் கண்ணுதல் நஞ்சுண்பதைக் கண்டவனை' | பிரமன்சிவன் ஆகியோர்க்கு நியாமகன் என்பதைத் தெரிவிப்பதில் நோக்கு. |

பின்னிணைப்பு எண். 5

## நயவுரை வழங்குதல்

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | நயவுரை |
|---|---|---|---|
| 1. | 1 | மார்கழித் திங்கள் | பெருமாள் பொன்முடிசூட, காடு பூ முடி சூடிற்று |
| 2. | 1 | சீமல்கும் ஆய்ப்பாடி | 1) இவ்வூரில் ஐச்வர்யம் வழிந்து போய் வேறொரூர்க்கு வெள்ளமிடப் போந்திருக்கை. 2) நாழிப்பால் நாழி நெய்யாதல். |
| 3. | 12 | நனைத்து இல்லம் சேறாக்கும் | பாலின் மிகுதியாலே அகம் வெள்ளமிடும். |
| 4. | 12 | பனித்தலை வீழ நின் வாசல் கடைபற்றி | மேலே மழை வெள்ளமிட, கீழே பால் வெள்ளமிட, நடுவு மால் வெள்ளமிட நின்றநிலை. |
| 5. | 14 | நாணாதாய் | நீ இருந்த ஊரில் பூசனியும் காயாதோ? என்கை. |
| 6. | 15 | மாயனை | தன் கையில் கம்ஸன்முதலானோர் (கம்ஸாதிகள்) படுவதைத் தான் பெண்கள் கையிலே படுமவனை. |
| 7. | 18 | கந்தம் கமழும் குழலி | பரிமளந்தான் நிறம் பெறுவது இவள் திருக்குழலிலே சேர்ந்த அன்று என்கிறது. |
| 8. | 19 | குத்துவிளக்கெரிய | 'அதீவ ராம: சுசுபே' என்று இவள் அவனுக்கும் ப்ரகாசகமான விளக்காயிருக்க ஓர் நிலை விளக்குண்டாவதே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | நயவுரை |
|---|---|---|---|
| 9. | 19 | மலர் மார்பா | திருமுலைத்தடங்களுறுத்துகையாலே அகன்றிருந்துள்ள மார்பு. |
| 10. | 20 | சிறு மருங்குல் | அதரத்தை அநுபவிக்கும் (புஜிக்கும்) போது துணுக்கோடே இருக்க வேண்டிருக்கை. |
| 11. | 22 | கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூபோலே | யாசகர்கள் (அர்த்திகளைக்) கண்டால் அலரு மவையிறே இந்தத் தாமரைப்பூ. |
| 12. | 23 | மன்னிக் கிடந்து | மிடுக்காலே ஒருவர்க்கும் அஞ்சவேண்டாமையாலே குவடுபோலே பொருந்தி வீசுவில்லிட்டு எழுப்பினாலும் எழுப்பப் போகாதிருக்கை. |
| 13. | 23 | மன்னிக்கிடந்துறங்கும் | நப்பின்னைப் பிராட்டிக்கு ஓராபரண மென்னலாம் படியிறே முலையோடே பொருந்திக்கிடக்கிறபடி. |
| 14. | 25 | நெடுமாலே யுன்னையருத்தித்து வந்தோம் | பண்டே மையலையுடையனான (வ்யாமுக்தனான) ஒன்றை யாசிக்கையிலே (அர்த்திக்கையிலே) பிச்சின் மேலே பிச்சேற்ற வந்தோம். |
| 15. | 27 | குளிர்ந்து | பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் குளிரும்படி. |
| 16. | 27 | அதன் பின்னே யித்யாதி | அதுக்குமேலே பால்சோறு மூடும்படியாக நெய்பெய்து, இத்தால் - பகவத்ஸம் பந்தமுள்ள திருவாய்ப்பாடியில் வளம் (ஸம்ருத்தி) யெல்லாம் விருப்பமாய் (பிரியமாய்) இருக்கிறபடி. |

பின்னிணைப்பு எண். 6

## பல்வகைப் பொருள் கூறுதல்

| வ. எண். | திருப்பாவை பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 1. | 2 | வாழ்ச்சி | 1) வாழ்ச்சிதன்னையே எண்ணுதல்<br>2) வியாபாரம் (வர்த்தனம்) எண்ணுதல் |
| 2. | 2 | நாமும் | 1) அத்தலையாலே பேறு என்று இருக்கிற நாமும்<br>2) இந்தப்பயன் ஒரு நாள்வரையிலே கைவந்ததாக வல்லதோ என்று இருக்கிற நாமும். |
| 3. | 2 | தீக்குறளை | 1) பொய் 2) குற்றம் |
| 4. | 2 | ஆந்தனையும் | 1) அர்த்திகளுக்கு விருப்பமுள்ளளவும் (அபேக்ஷையுள்ளவளவும்)<br>2) கொடுக்கிறவர்கள் தங்களுக்குள்ளவளவும். |
| 5. | 2 | கைகாட்டி | 1) எல்லாவற்றையும் (ஸர்வத்தையும்) கொடுத்தும் ஒன்றும் செய்ய பெற்றிலோம் என்றிருக்கை.<br>2) இவர்களை கிருஷ்ணானுபவம் பண்ணிவைத்தும் இவர்கள் திறத்தில் ஒன்றும் செய்யப்பெற்றிலோம் என்றிருக்கை. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 6. | 3 | பேர் | 1) எல்லாத் திருநாமங்களும்<br>2) திருமந்திரம். |
| 7. | 3 | வாங்கக் குடம் நிறைக்கும் | 1) வாங்குகை - வலிக்கையாய், பற்றிக்கறக்கக் குடம் நிறைக்கும்.<br>2) முலையைப் பற்றிக் கைவாங்க தானே நின்று பால் சொரியும்.<br>3) இட்ட குடங்கள் வாங்க வாங்க நிறைக்கும். |
| 8. | 4 | ஆழிமழைக்கண்ணா | 1) கம்பீர ஸ்வபாவத்தையுடைய<br>2) மழைக்கு (வர்ஷத்துக்கு) தலைவன் (நிர்வாஹகனானவன்). |
| 9. | 5 | மைந்தன் | 1) மிடுக்கன் 2) பிள்ளை 3) ராஜா |
| 10. | 5 | தூமலர் | 1) தூய புஷ்பம்<br>2) வெறும் பூ என்றபடி |
| 11. | 6 | கோயில் | 1) கோ - ஸர்வேச்வரன், இல், அவனுடைய இல்-வீடு<br>2) தலைவனானவனுடைய (நிர்வாஹகனானவனுடைய)கோயில் |
| 12. | 6 | அரி அரியென்ற | 1) 'ஹரிர்ஹரதி பாபாநி' என்கிறபடியே பகவதநுபவ விரோதிகளைப் போக்கியருளவேணும்.<br>2) மங்களாசாஸனம் பண்ணுகை. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 13. | 7 | நாராயணன் மூர்த்திகேசவனைப் பாடவும் நீ | 1) துணுக்கென்று எழுந்திருக்கைக்காக என்னுதல்<br>2) 'பர்த்தாரம் பரிஷஸ்வஜே' என்கிறபடியே அணைக்கைக்குப் புறப்படுவாயோ? என்னுதல் |
| 14. | 7 | நாயகப் பெண்பிள்ளாய் | 1) தலைவி (நிர்வாஹகை) என்னுதல்<br>2) செல்வத்தை உடையவள் (ஐச்வர்யயுக்தை) என்னுதல்; செல்வமாவது (ஐச்வர்யமாவது) கிருஷ்ணானுபவம். |
| 15. | 7 | தேசமுடையாய் | 1) ஸௌந்தர்ய லாவண்யங்கள் (சமுதாய சோபை)<br>2) க்ருஷ்ணானுபவத்தால் வந்த ஒளி (தேஜஸ்) |
| 16. | 11 | கறந்து | 1) ஈச்வரன் ஒருவனுமே ஸர்வாத்மாக்களுக்கும் நியமனாதிகளைப் பண்ணுமாபோலே இடைச்சாதியில் மெய்ப்பாட்டாலே முழுவதும் (அடங்கக்) கறக்கவல்ல ஸாமர்த்யம்.<br>2) பாலும் நெய்யும் கொண்டு விநியோகமில்லாதபடி மிகுதியாலே (ஸம்ருத்தமாகையாலே) முலைக்கடுப்புக் கெடக் கறந்து. |
| 17. | 11 | முகில் வண்ணன் பேர்பாட | 1) வண்ணன் - நிறமாய் அழகாதல்<br>2) ஸ்வபாவமாய் ஔதார்யமாதல் (வள்ளல்) |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 18. | 13 | கீர்த்திமை | 1) 'சத்ரோ : ப்ரக்யாத வீர்யஸ்ய' என்று ....... வீர சரிதம்<br>2) ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:<br>3) இராவணன் ............. இலக்கானான் |
| 19. | 13 | பொல்லா அரக்கன் | 1) தாயையும் .................... பிரித்த நிர்க்ருணன்<br>2) முன்பொலா விராவணன்<br>3) 'விபீஷணஸ்து தர்மாத்மா' என்று நல்ல அரக்கனும் உண்டென்கை |
| 20. | 13 | போதரிக்கண்ணினாய் | 1) புஷ்பம் போலேயும் மான்போலேயும்<br>2) பூவிலே வண்டு இருந்தாற்போலே<br>3) போதை ஹரிக்கிற கண் |
| 21. | 13 | குடைந்து நீராடாதே | 1) 'ஸரயூமவகாஹதே' என்னும்படியே கண்ணனுடைய பிரிவு (க்ருஷ்ண விரஹம்) மாற நீராடப்போகாதே<br>2) இனி ஒருகால் கண்ணனுடைய பிரிவு (க்ருஷ்ண விச்லேஷம்) பிறவாமைக்காகவும் க்ருஷ்ண குணங்களிலே மூழ்கி (அவகாஹித்து) அனுபவிக்கப் பெறாதே. |
| 22. | 14 | சங்கிடுவான் | 1) சங்கம் பிடிக்கைக்காக என்னுதல்<br>2) சங்கு என்று குச்சியாய், குச்சி திறக்கைக்காக என்னுதல் |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 23. | 16 | நேசநிலைக்கதவம் | 1) நேசம் என்று ஸ்நேஹமாய் நேசத்தையுடைய கதவு என்னுதல்<br>2) செறிவாய், செறிந்த கதவு என்னுதல் |
| 24. | 17 | அனார் | 1) அத்தை அனையவர்கள்<br>2) அத்தை ஒத்தவர்கள் |
| 25. | 18 | கந்தம் கமழும் குழலி | 1) கந்தமானது கமழும்படியான திருக்குழலையுடையவள் என்னுதல்<br>2) பரிமளம் மிக்கிருக்கிற குழலையுடையவள் என்னுதல் |
| 26. | 19 | பூங்குழல் | 1) குழல் தொடுதலாலே அலருகை<br>2) ப்ரணய கலஹத்தாலே அலருகை. |
| 27. | 19 | கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா | 1) கொங்கையைத் தன்மேல் வைத்துக்கிடக்கை<br>2) கொங்கை மேல் தன்னை வைத்துக்கிடந்த |
| 28. | 19 | மைத்தடங் கண்ணினாய் | 1) 'அஸிதேக்ஷணா' என்கிறபடியே இயற்கையான (ஸ்வாபாவிகமான) கறுப்பைச் சொல்லுதல்<br>2) மையிட்ட கண் என்னுதல் |
| 29. | 21 | அறிவுறாய் | 1) படுக்கையின் வாய்ப்பாலே கண்வளருகையாலே எழுப்புகிறார்கள். |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| | | | 2) கைப்பட்ட பெண்களைச்சரக்கிலே வாங்கி, கைப்படாத பெண்களைக் கைப்படுத்துகைக்காக உண்டான வேறு உபாயத்தில் ஊற்றமுடையவளை எழுப்புகிறார்கள். |
| 30. | 21 | வள்ளல் | 1) சிலர்க்கு உபகரித்ததாக இருக்கையன்றிக்கே தன் கார்யம் செய்ததாக உபகரிக்கை.<br>2) க்ருஷ்ணனைப்போலே பெண்ணுக்கும் பேதைக்கும் அணைக்கலாம்படி பவ்யமாயிருக்கை. |
| 31. | 21 | பெரியாய் | 1) ....பிரமாணங்களுக்கும் எல்லைகாணாதிருக்கை.<br>2) பலத்தையுடைமை.<br>3) அடியார் திறத்து (ஆச்ரித விஷயத்தில்) எல்லாஞ் செய்தாலும் ஒன்றுஞ் செய்யப்பெற்றிலோம் என்றிருக்கை.<br>4) தன்பேறாயிருக்கை. |
| 32. | 21 | உலகினில் தோற்றமாய் நின்ற | 1) என்றும் ஓலைப்புறத்திலே கேட்டுப் போகையின்றிக்கே எல்லாரும் காணலாம்படி<br>2) அடியாரிடம் ஓரத்தன்மை (ஆச்ரித பக்ஷபாதம்) லோகத்திலே ப்ரசித்தமாம் படியிருக்கை. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 33. | 21 | சுடர் | 1) ஸம்ஸாரிகளைப் போலே பிறக்கப் பிறக்கக் கறையேறுகையன்றிக்கே சாணையில் இட்ட மாணிக்கம் போலே ஒளிவருகை.<br>2) லோகத்திலே தோற்றின பின்பு நிறம்பெற்றபடி. |
| 34. | 24 | சென்று | 1) புலிகிடந்த தூற்றிலே செல்லுமாபோலே பிராட்டியைப் பிரித்த பையலிருந்த விடத்தே செல்லுவதே!<br>2) வழிப்போக்கிலே கரன், கபந்தன், விராதன் முதலானோரை அழியச்செய்தபடி |
| 35. | 24 | யாம் | 1) பந்துக்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள்<br>2) கிழவர்கள் (வ்ருத்தைகள்) உறங்க, நாங்கள் ஆற்றாமையாலே வந்தோம்<br>3) எங்களிழவுகளெல்லாம் உன்னாலே தீரும்.<br>4) எங்கள் வரவு உனக்குப் புண்ணாயிருக்க நாங்கள் ஆற்றாமையாலே வந்தோம். |
| 36. | 26 | போய்ப்பாடு | 1) பேரிடமாயிருக்கை<br>2) புகழ் |
| 37. | 28 | கானம் சேர்ந்து | 1) தந்தாமுடைய ....... வர்த்தித்தோமித்தனை.<br>2) இருப்பாலே ...........வர்த்தித்தோமென்றுமாம். |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | பலபொருள் |
|---|---|---|---|
| 38. | 28 | இறைவா | 1) ஸ்வாமி<br>2) பெரியோன் |
| 39. | 29 | குற்றேவல் | 1) குறுகிய ஏவல் - கைங்கர்யம் (அந்தரங்கவ்ருத்தி)<br>2) உசிதமான அடிமை |
| 40. | 29 | உன்தன்னோடுற்றோமே யாவோம் | 1) உன்தன்னோடு சம்மந்தம்<br>2) பொருந்துதலாய் பிரியாமல் (விச்லேஷியாதே) இளைய பெருமாளைப் போல அடிமைசெய்ய |
| 41. | 30 | திங்கள் திருமுகம் | 1) கண்ணனோடு கலவியாலே (க்ருஷ்ண ஸம்ச்லேஷத்தாலே) குளிர்ந்து மலர்ந்த முகம்<br>2) கதிர்மதியம் போல் முகத்தான். |

பின்னிணைப்பு எண். 7

# உள்ளுறை பொருள் (ஸ்வாபதேசம்)

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 1. | 1 | நன்னாளால் | இறை அருளுக்கு (பகவத் ப்ரஸாதத்துக்கு) இலக்காகப் பெற்ற நாளிறே இவ்வாத்மாவுக்கு நன்னாளாகிறது. 'க்ஷிபாமி' என்ற அவன்தானே 'ததாமி' எனப்பெற்ற நாளிறே. |
| 2. | 1 | நீராட | 'ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோSஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்' என்று இறைவனோடு கலப்பதற்கு (பகவத் ஸம்ச்லேஷத்துக்கு) கிரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவை அடையாளமாகச் (த்ருஷ்டாந்தமாகச்) சொல்லிற்றிறே. |
| 3. | 1 | நீராட | புத்ரர்களாகவுமாம், சிஷ்யர்களாகவுமாம், பகவத் ஸம்பந்தமுடையாரை (கௌரவ்யர்) கௌரவிக்கத்தக்கவர் என்கிறது. |
| 4. | 1 | போதுமினோ | பகைவரையும் (ப்ரதிகூலரையும்) அகப்பட 'தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி' என்னுமவர்கள் நல்லவர்களைப்(அபிமுகரை) பெற்றால் விடுவர்களோ? |
| 5. | 1 | செல்வம் | இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற செல்வமாவது (ஐச்வர்யமாவது) இறைவனோடு உள்ள சம்பந்தம் அன்றோ (பகவத் ப்ரத்யாஸத் தியிறே) |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 6. | 2 | கேளீரோ | 'ஸம்ச்ர்வே மது ம் வாக்யம்' என்னும்படியே கேள்வியே பயனாக இருக்கிற (ச்ரவ ணந்தானே ப்ரயோஜந மாயிருக்கிற)படி. |
| 7. | 2 | செய்யாதன செய்யோம் | அதாகிறது 'ஸுஹ்ருதம் ஸர்வ பூதாநாம்' என்று அவன் எல்லாருக்கும் நன்மை செய்பவனாக (ஸர்வபூத ஸுஹ்ருத்தாக) இருந்தானேயாகிலும் பாகவதர்களை (ததீயரை) முன்னிட்டுக் கொண்டல்லது அவனைக் கிட்டக் கடவோமல்லோ மென்கை. |
| 8. | 4 | அவதாரிகை | 'த்ரவந்தி தைத்யா:' 'ப்ரணமந்தி தேவதா:' என்கிறபடியே இறைவனைப் பற்றினார்க்கு (பகவத்ஸமாச்ரயணம்) தேவதைகள் தாங்களே வந்து எதிரில் நிற்கக் (உபஸ்திதராகக்) கடவரிறே. |
| 9. | 5 | வந்துநாம் | 'உபஸ்தேயைருபஸ்தித:' என்றும், 'பத்ப்யாமபிகமாச்சைவ' என்றுமிறே அவன் வார்த்தை முறைகெட வருவானேன்? என்னில் உபாயத்தில் துணிவு புறப்பட வொட்டாதாப்போலே உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்க வொட்டாதிறே. |
| 10. | 5 | தாமோதரனை | நம்முடைய பந்தம் நம்மாலறுக்கப்போகாதப்போலே, அவனுடைய பந்தமும் அவனாலறுக்க வொண்ணாது. இந்த பந்தத்தை அநுஸந்தித்தால் அடியாருடைய பிறவி உறவு (ஆச்ரிதருடைய ஸம்ஸார பந்தம்) போமென்கை. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 11. | 6 | ஆறாம் பாடல் | எம்பெருமான் ஒருவரையே அநுபவிப்பவரான (பகவதேக போகரான) ஸ்ரீவைஷ்ணவர்கள் வேறுபயனை விரும்பாது எம்பெருமானையே பயனாகக்கருதும் (அநந்ய ப்ரயோஜனராய்) இவ்விஷயத்தில் தேசிகரன்றிக்கே இருக்கிறவர்களை அவர்களிடத்தில் பரிவாலே தேசிகராக்குகை தங்களுக்குச் செய்வது (க்ருத்யம்) அன்றிருக்கையாகிற ஸ்ரீவைஷ்ணவ ஸ்வபாவம். |
| 12. | 7 | ஏழாம் பாடல் | பகவத் விஷயத்திலே அறிந்த (ஜ்ஞாதமான ) அர்த்தம் ஒருவனுக்கு மறந்தால் (விஸ்ம்ருதமானால்) தங்கள் படியாலே 'போதயந்த: பரஸ்பரம்' பண்ணி நினைவுக்கு (ஸ்ம்ருதி) விஷயமாம்படி அறிவிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வபாவம் என்கிறது. |
| 13. | 8 | எட்டாம் பாடல் | இறை அநுபவத்தில் சம்பந்தம் உடையராயிருப்பார் (பகவதநுபவத்தில் ப்ரத்யாஸந்நராயிருப்பார்) திறத்தில் விருப்பத்தோடு கூடியவராயிருக்கையும் (ஸாபேக்ஷராயிருக்கையும்) அவர்களை முன்னிட்டு ஈச்வரனைக் கிட்டுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது. |
| 14. | 9 | ஒன்பதாம் பாடல் | இப்பாட்டுக்கு 'ஸ்வாபதேசம் : 'தத்தஸ்ய ஸத்ருசம் பவேத்' என்று பூர்வார்த்த நிஷ்டராயிருப்பாரை இறைவனிடம் பக்தியின் மிகுதியால்(பகவத் ப்ரேமதி சயத்தாலே)அவன் ஒருவனையே அநுபவிப்பதாய் இருக்குமவர்கள் (ததேக போகராயிருக்குமவர்கள்) அநுபவத்தின் பொருட்டு தூண்டுகை (போகாந்தமாக ப்ரேரிக்கை) அவர்களுக்கு ஸ்வரூபம் என்கை. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 15. | 10 | மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார் | 'போதயந்த பரஸ்பரம்:' என்கிற ந்யாயமும் தவிர்ந்ததோ? |
| 16. | 10 | பத்தாம் பாடல் | 'ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்றும் 'அஹம் ஸ ச மம ப்ரிய:' என்றும் அவன் ஓரத்தன்மையாய் (பக்ஷபதித்திருப்பார்) திறத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் எப்போதும் விருப்பத்தோடு கூடியிருக்கை (நித்யஸாபேக்ஷராயிருக்கை) ஸ்வரூப மென்கிறது. |
| 17. | 11 | பதினொன்றாம் பாடல் | பகவத் ஸம்பந்தம் விச்சேதியாதே போந்த ஆசார்ய ஸந்தான ப்ரஸூதர் நமக்குப் பூஜ்யர். அவர்களடியாக பகவத்ஸமாச்ரயணம் பண்ணுகை ஸ்வரூபம் என்று இறைவனைப் பிரிந்து இருத்தல் பொறுக்கமாட்டாதபடி. |
| 18. | 11 | பன்னிரெண்டாம் பாடல் | இறைவனுடைய பிரிவு பொறுக்கமாட்டாதபடி (பகவத் விச்லேஷம் அஸஹ்யம்மாம்படி) மூழ்கியவர்கள் (அவகாஹித்தவர்கள்) தங்களுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உத்தேச்ய ராமவளவன்றிக்கே அவர்கள் சம்பந்தி சம்பந்திகளும் (தத்ஸம்பந்தி ஸம்பந்திகளும்) உத்தேச்ய ரென்றிருக்கை ஸ்வரூபம் என்கிறது. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 19. | 13 | பதிமூன்றாம் பாடல் | இறை அநுபவத்துக்கு கருவியான அறிவு, வைராக்யம், பக்திகளாலே (பகவதநுபவ பரிகரமான ஜ்ஞான வைராக்ய பக்திகளாலே) பரிபூர்ணராயிருக்குமவர்கள் திறத்தில் அவன் பொருட்டு (ததர்த்தமாக) ஸ்ரீவைஷ்ணவர்கள் விருப்பத்தோடு கூடியிருக்கை (ஸாபேக்ஷராயிருக்கை) ஸ்வரூபம் என்று. |
| 20. | 14 | பதினான்காம் பாடல் | பகவத் விஷயத்திலே மூட்டுகையிலே அதிகரித்த நிர்வாஹகர் முன்பாக பகவதநுபவம் பண்ணுகை ஸ்வரூபம் என்று. |
| 21. | 15 | பதினைந்தாம் பாடல் | ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒரே வகையில் பார்த்தல் (ஸமவாய தர்சநம்) விரும்பியவர்களைக் (அபிமதமாயிருக்குமவர்களைக்) கண்டக்கால் அந்த ஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபம் என்று. |
| 22. | 16 | நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில் காப்பானே | வழித்தலைவர்களே (த்வார சேஷிகளே) எங்களுக்கு தலைவர்கள் (சேஷிகள்) என்கிறார்கள். |
| 23. | 16 | கோயில் காப்பானே | இத்தால் கைங்கர்யத்தில் உண்டான ( சேஷவ்ருத்தி ப்ரயுக்தமான) பேரே இவ்வாத்மாவுக்குப் பேர் என்னுமிடந் தோற்றுகிறது. 'யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:' என்னக் கடவதிறே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் சொல்/தொடர் | உள்ளுறை பொருள் |
|---|---|---|---|
| 24. | 15 | அவதாரிகை | இல்லாத குற்றத்தையும் சிலர் உண்டு என்றால் இல்லை செய்யாதே இசைகையிறே வைணவ லக்ஷணம். |
| 25. | 18 | பந்தார் விரலி | இத்தால் - 'அஸ்ஸேசாநா ஜகதோ விஷ்ணு பத்நீ' என்கிறபடியே உபய ஸம்பந்தத்தால் வந்த புருஷகாரபாவம் தோற்றுகிறது. |
| 26. | 22 | வந்து தலைப்பெய்தோம் | அதவா, அந்த ராஜாக்களைப் போலே, நாங்களும் அநாதி காலம் பண்ணிப் போந்த உடலே உயிர் என்ற அபிமானத்தை (தேஹாத் மாபிமானத்தை ) விட்டு உடலில் ஊற்றமுடையவரான (தேஹாத்பரனான) ஆத்மாவின் பக்கல் ஸ்வாதந்திரயத்தையும் விட்டு, வேறு பயனைக்கருதாது எம்பெருமானையே பயனாகக் கொண்டு (அநந்யப்ரயோஜனராய்) வந்தோம் என்னுமாம். |
| 27. | 29 | சிற்றஞ்சிறுகாலே | 'ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயே தாத்மஹோ ஹிதம்' என்று ஸத்வம் தலையெடுத்த காலத்திலே; அநாதியான அறிவின்மையாகிய இருள் (அநாத்யஜ்ஞாநாந்தகாரம்) நீங்கி பகவத் விஷயம் வெளிச்செறிந்த காலத்திலென்றுமாம். நாரணனைக் கண்டேன் பகற்கண்டேன். |

பின்னிணைப்பு எண். 8

# பழம்பெரும் உவமைகள் கொண்டு பொருள் தருதல்

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| | | | **இராமாவதார நிகழ்ச்சி** |
| 1. | 6 | புள்ளரையன் இத்யாதி | சக்கரவர்த்தி திருமகன்........ பெரிய பெருமாளைப் பற்றுமாபோலே (ஆச்ரயிருக்குமா) போலே |
| 2. | 7 | பாடவும் நீ கேட்டே கிடத்தியோ | சக்கரவர்த்தி திருமகனை ஸ்ரீஜனகராஜன்திருமகள் அணைத்தாற்போலே |
| 3. | 8 | எழுந்திராய் | பெண்ணின் வருத்தமறியாதவனைப்போலே. |
| 4. | 10 | அம்மனாய் | திருவடிவாரத்திலே பிராட்டி 'ப்ரஹர்ஷேண ...' என்றிருந்தார்போலே |
| 5. | 11 | சென்று செருச் செய்யும் | சக்கரவர்த்தி திருமகனைப் போலே வீரம் |
| 6. | 12 | தங்காய் | குணக்குறைவுடைய இராவணனுக்குப் (குணஹாநிக்கு) பின் பிறந்த தம்பியான விபீஷணன் 'ராவணஸ்யாநுஜோ ப்ராதோ' என்னுமாபோலே. |
| 7. | 12 | சினத்தினால் | தண்ணீர் போலேயிருக்கிற சக்கரவர்த்தி திருமகன். |
| 8. | 13 | புள்ளின்வாய் கீண்டானை | உடலையும் உயிரையும் பிரித்தாற்போலே. |
| 9. | 13 | கிள்ளிக்களைந்தானை | திருவிளையாடு சூழலிலே நோய்புக்க இடங்களைக் கிள்ளிக் பொகடுமாபோலே. |
| 10. | 17 | கொம்பனாரித்யாதி | பிராட்டி முன்பாக அவனை எழுப்புமாபோலே. |
| 11. | 18 | நந்தகோபாலன் மருமகளே | எதிரிகளின் சேனைகளை மிகவும் தவிக்கச் செய்யும் தயரதரின் மருமகள் நான் (ஸ்நுஷா தசரதஸ்யாஹம் சத்ரு ஸைந்ய ப்ரதாபிந:) என்னுமாபோலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| 12. | 20 | நீராட்டு | பெருமாள் - ஐயர் பண்ணிவைத்த கல்யாண (விவாஹம்) என்று உகப்பர் அதுபோலே. |
| 13. | 21 | மாற்றாரித்யாதி | பெருமாள் திருவடிகளிலே வந்து விழுந்த காகம் போலே. |
| 14. | 21 | யாம் வந்தோம் | நான்வணங்கமாட்டோன் (நமேயம்) என்றிருக்குமாபோலே. |
| 15. | 22 | சங்கமிருப்பார் போல் | இளைய பெருமாளைப் போலே. |
| 16. | 23 | மாரிமலை முழைஞ்சில் | பெருமாள் மழைக்காலத்தில் (வர்ஷகாலம்) மால்யவானிலே எழுந்தருளியிருந்தாற் போலே. |
| 17. | 23 | உன்கோயில் நின்று இங்ஙனே போந்தருளி | பிராட்டி மங்களாசாஸனம் பண்ண, ஸுமந்தர்னோடே புறப்பட்டாற்போலே. |
| 18. | 23 | சீரிய சிங்காசனம் | கடற்கரையில் வார்த்தை யென்னுமாபோலேயும், தேர்த்தட்டில் வார்த்தை யென்னுமாபோலேயும்.<br>கடற்கரை வார்த்தை - இராம சரம ச்லோகம்<br>தேர்த்தட்டு வார்த்தை - கிருஷ்ண சரம ச்லோகம் |
| 19. | 23 | யாம் வந்த காரியம் | நீ தண்டகாரண்யத்தில் ரிஷிகளுடைய வருத்தம்தீர்க்க (துக்க நிவ்ருத்திக்கு) நாம் முற்பாடராகப் பெற்றிலோ மென்று வெறுத்தாற்போலே. |
| 20. | 24 | பொன்றவித்யாதி | இராவணனைப் போலே |
| 21. | 24 | பொன்ற | மாரீசனைப் போலே |
| 22. | 24 | வென்று பகை கெடுக்கு மித்யாதி | சக்ரவர்த்தி விற்பிடிக்கப் பெருமாளும் விற்பிடித்தாற்போலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| 23. | 25 | ஒருத்தி மகனாய் | சக்கரவர்த்தி தவம் (தபஸ்ஸு) பண்ணி மாணிக்கம் போலே நாலு பிள்ளைகளைப் பெற்றாற்போலே. |
| 24. | 29 | உன்பொற்றாமரை அடியே | (லக்ஷ்மணர் பல்வகையிலும் பலமுறை நல்வார்த்தை சொல்லப்பட்டவராகவும் வேண்டப்பட்டவராகவும் ஆகியும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவில்லை) 'ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யதா ந ஸௌமித்ரிருபைதி யோகம்' என்னுமாபோலே |
| 25. | 29 | எற்றைக்குமித்யாதி | காட்டிலும் படைவீட்டிலும் ஒக்க இளைய பெருமாள் அடிமை செய்தாற்போலே. |
| 26. | 29 | உனக்கே நாம் ஆட்செய்வோம் | ஸ்ரீபரதாழ்வானைப் போலே... இளைய பெருமாளைப் போலே. |
| | | | **கிருஷ்ணாவதார நிகழ்ச்சி** |
| 1. | 15 | வல் ஆனை கொன்றானை | குவலயாபீடத்தைக் கொன்றாற்போலே. |
| 2. | 15 | மாற்றாரை மாற்றழிக்க வல்லானை | சாணூரமுஷ்டிகாதிகளை அழித்தாற்போலே (நிரஸித்தாற்போலே.) |
| 3. | 15 | மாயனை | எதிரிகளைத் தான் தோற்பிக்குமாபோலே. |
| 4. | 16 | நீ நேச நிலைக்கதவம் நீக்கு | கம்ஸன் அரண்மனை (படைவீட்டில்) எல்லாம் விரோதியாய் (ப்ரதிகூலமாய்) இருக்குமாபோலே. |
| 5. | 19 | கோட்டுக்கால் கட்டிற்மேல் | எங்களைப்போலே ஸ்ரீப்ருந்தாவனம் தேடிப் போகாதே உள்ளகத்துக்குள்ளே கூச்சமறக்கிடக்கப்பெறுவதே. |
| 6. | 21 | வள்ளல் | கிருஷ்ணனைப் போலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| 7. | 21 | பெரும் பசுக்கள் | ஸ்ரீ சத்ருஞ்ஜயனைப்போலே. |
| 8. | 22 | மாஞாலத்தரசர் | பௌண்ட்ரக வாஸுதேவனைப் போலே. |
| 9. | 24 | அங்கு | கானகம் பாடியுலாவியுலாவி என்னுமாபோலே. |
| 10. | 26 | விதாநம் | ஸ்ரீ பாஞ்சஜந்யம் போலே. |
| 11. | 28 | அறிவொன்றுமில்லாத | விதுராதிகளைப் போலே |
| 12. | 30 | சென்று | கண்ணன் திறத்து இலக்கானதால் (கிருஷ்ண விஷயீகாரத்தால்) பிறந்த புகராலேயொருபடி ஆபரணம் பூண்டாற்போலே |
| 13. | 30 | பட்டர்பிரான் கோதை சொன்ன | பராசர புத்ரனென்று நம்பிக்கைக்குச் (ஆப்திக்குச்) சொன்னாற்போலே |
| | | | **பாரதம்** |
| 1. | | புற்றரவல்குல் | ஆண்களைப் பெண்ணுடை உடுக்கப்பண்ணுமாபோலே. |
| | | | **தத்துவப் பொருள்** |
| 1. | 5 | தூயோமாய் வந்து நாம் | ப்ரபத்திக்கு சுத்தியும் அசுத்தியும் தேடவேண்டாமைக்கு விபீஷணன், அர்ச்சுனன், த்ரௌபதி ஆகிய மூவர் உவமை. |
| 2. | 5 | தீயினில் தூசாகும் | நெருப்பிலிட்ட பஞ்சுபோலே. |
| 3. | 6 | முனிவர்களும் யோகிகளும் | முனிவர்களும் யோகிகளும் .. உறங்குகிறவர்களையும் எழுப்புகிறவர்களையும் போலே |
| 4. | 11 | கற்றுக்கறவை | நித்யஸூரிகள் இறைவனின் பார்வையாலே (பகவத் ஸ்பர்சத்தாலே) 25 வயது உடையவர்களாய் (பஞ்ச விம்சதி வார்ஷிகராய்) இருக்குமாபோலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| 5. | 20 | துயிலெழாய் | தேவதைகளுக்குக் குடியிருப்பும் ஜீவநமும் போலே. |
| 6. | 21 | படைத்தான் மகனே | பரமபதம் போலேயும் நாராயணாம் தன்மை (நாராயணத்வம்) போலேயும் தான்தோன்றியன்று. |
| 7. | 23 | உறங்கும் | ஸம்ஸாரிகளுறக்கம் போலே தமோ குணம் உடையபூமியில் அன்றோ (தமோ விபூதியாலன்றே) இவனுறக்கம் |
| 8. | 25 | மகிழ்ந்து | கைவல்யம் போலே. |
| 9. | 26 | மார்கழி நீராடுவான் | 'ஸ்வர்க்காமோ யஜேத' என்னுமாபோலேயும் 'நிதித்யாஸிதவ்ய:' என்னுமாபோலேயும் |
| 10. | 28 | உண்போம் | காட்டில் சென்று வாழ்க்கை நடத்துவது போல (வாநப்ரஸ்தாச்ரமிக ளோபாதி) |
| 11. | 29 | உனக்கே நாம் ஆட்செய்வோம் | 'தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே' என்னுமாபோலே. |
| | | | **இறைநிலை** |
| 1. | 11 | கறந்து | ஈச்வரன் ஒருவனுமே எல்லா உயிர்க்கும் (ஸர்வாத்மாக்களுக்கும்) தூண்டுவித்தல் முதலானவை (நியமநாதிகளைப்) பண்ணுமாபோலே |
| 2. | 12 | நற்செல்வன் | ஊரும் நாடுமுலகு முன் தன்னைப்போல் |
| 3. | 18 | தோள்வலியன் | எம்பெருமான் தோள் வலியை நினைத்துப் பயம் கெடுமாபோலே |
| 4. | 21 | சுடரே | ஸம்ஸாரிகளைப் போலே பிறக்கப் பிறக்கக் கறையேறுகையன்றிக்கே, சாணையிலிட்ட மாணிக்கம் போலே ஒளிவிடாநிற்கை. |
| 5. | 21 | மாற்றாரித்யாதி | உன் திருவடிகளிலே வந்து விழுமாபோலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
| --- | --- | --- | --- |
| 6. | 21 | யாம் வந்தோம் | உன்னைப் பேணினாற்போலே |
| 7. | 23 | நீ பூவைப் பூவண்ணா | வடிவழகையும் நிறத்தையும் உன்னைப்போலே பண்ணப்போமோ. |
| 8. | 24 | இவ்வுலகமளந்தாய் | பிராட்டிமாருக்கும் பூத்தொடுமாபோலே கூசி பிடிக்கும் திருவடிகளை. |
| 9. | 26 | வேண்டுவன கேட்டியேல் | உங்கள் வடிவு கண்ணுக்கு இனிமையானாப்(போக்கியமானாப்) போலே |
| 10. | 27 | | சூடகமேஅவர்களுக்கு இவன் சொல்லுமாபோலே. |
| | | | **மற்ற அவதார நிகழ்ச்சிகள்** |
| 1. | 7 | மத்தினால் ஓசைபடுத்த | மந்திர மலையாகிய மத்தாலே (மந்தரத்தாலே) கடல் கலக்கினாற்போலே. |
| 2. | 24 | இவ்வுலகமளந்தாய் | மஹாபலி பக்கல் நின்றும் பூமியை மீட்டுக்கொண்டான் போலே. |
| 3. | 26 | சாலப்பெரும் பறையே | 'யயௌ தூர்யப்ரணாதேந பேரீணாஞ்ச மஹாஸ்வநை:' என்னுமாபோலே |
| | | | **மருத்துவம்** |
| 1. | 5 | அவதாரிகை | சேர்ப்பால் இனிமையாக (போகரூபமாகப்) பருகுமவனுக்குத் தன்னடையே பித்தம் போமாபோலே. |
| 2. | 5 | தீயினில் தூசாகும் | பாலும் கண்ட சர்க்கரையும் கற்கண்டு குடிக்கப் பித்தம் தன்னடையே போமாபோலே. |
| 3, | 22 | எங்கள் மேல் சாபமிழிந்து | விடத்தைப் போக்குமவன் (விஷஹாரியானவன்) பார்க்க விஷம் தீருமாபோலே. |

| வ. எண். | பாடல் எண். | பாடல் தொடர் | உவமைகள் |
|---|---|---|---|
| | | | **இயற்கை** |
| 1. | 6 | உள்ளம் புகுந்து குளிர்ந்து | படுக்கைக் கீழே வெள்ளம் கோத்தாற்போலே |
| 2. | 7 | கலகலப்ப | மலை தேய்க்குமொலி என்னுமாபோலே. |
| 3. | 7 | கை பேர்த்து | மலை பேர்த்தாற்போலே. |
| 4. | 10 | பண்டொருநாள் கூற்றத்தின் வாய் வீழ்ந்த | தண்ணீர் குடிக்கத் தோண்டின (கல்லின) ஏரியிலே தலைகீழாக விழுந்து சாவாரைப் போலே |
| 5. | 12 | நின்று பால்சோர | திருமலையில் திருஅருவிகள் போலே. |
| 6. | 13 | போதரிக் கண்ணினாய் | புஷ்பம் போலேயும் மான்போலேயும் கண்கள் |
| 7. | 16 | மணிவண்ணன் | பூவலர்ந்தாற்போலே உதடுதுடித்தல் (ஓஷ்டஸ்புரணம்) |
| 8. | 19 | கொத்தலர் பூங்குழல் நப்பின்னை | காலம் அலர்த்துமாபோலே |
| 9. | 20 | உன் மணாளனை | உக்கத்தை போல |
| 10. | 22 | கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போல | சூரியனைக் (ஆதித்யனைக்) கண்டால் அலரக்கடவ தாமரைப் பூப்போலே |
| 11. | 23 | மன்னிக் கிடந்து | மலைக்குவடு போலே பொருந்தி |
| 12. | 23 | அறிவுற்று | பூவலர்ந்தாற்போலே காலமுணர்த்த உணருகை. |
| 13. | 23 | இருந்து | கண்ணினை குளிரப்புதுமலராகத்தைப் பருக இருந்திடாய் என்னுமாபோலே. |
| 14. | 24 | அங்கு | நின்றவிடத்திலே நின்று பூவலர்ந்தாற்போலே |
| 15. | 25 | மகனாய் | பிறப்பில் புரையில்லாதாப் போலே. |

